

# DEAR CHILDREN

## NEXT TIME YOU FLY Indian Airlines YOU CAN LOOK FORWARD TO REALLY EXCITING GIFTS AND FABULOUS DISCOUNT OFFERS

Presenting

**Indian Airlines' Special Offer for Kids with**

**IAnetfundu.com**

*From now on, all children between age 2 to 12, flying Indian Airlines, will be made special members of the IA Netfundu Club. All you have to do is, register at our site, www.ianetfundu.com and mail the Boarding Card at the given address.*

*You will receive a gift hamper full of goodies, Dinky Toy, a special membership card and a fun magazine with lots of Discount Coupons from leading establishments like Nike, Reebok, Pizza Hut, Pepsi, Archies and many more. You can also log on to the site for lots of fun, frolic and useful online information. Fly Indian Airlines in these Summer Holidays with your parents and enjoy our fabulous discount offers.*

अलाइंस एयर
ALLIANCE AIR

इंडियन एयरलाइन्स
Indian Airlines

‘தற்கொலை முயற்சிக்குப் பின் சிகிச்சை பெறுகிறார்’, ‘நடிப்புக்கும், காதலுக்கும் குட்பை சொல்லிவிட்டார்’, ‘மும்பைக்கு ‘பேக்அப்’ செய்துவிட்டார்’- சிம்ரனைப் பற்றி பிரபல இதழ்களில் கூட இதுபோன்று ஏராளச் செய்திகள்.

சிம்ரன் தரப்பிலிருந்து எந்த ரியாக்ஷனையும் காணோமே என்று குழம்பிக் கொண்டிருந்தபோது ‘நேரில் வரமுடியுமா?’ என்று விளித்தது தொலை பேசியில் ஒரு குயில் குரல். வேறு யார்? சிம்ரன் தான்!

# “அடிக்கடி கல்யாணம் நடக்குது!”

சிம்ரன்

ஜீன்ஸ், ஷர்ட், கொண்டையாய் இறுக்கிக் கட்டப்பட்ட கேசம், முகத்தில் அறிவுஜீவித்தனமாய் கண்ணாடி, கலவரத்தை மீறி கன்னத்தில் குழிவிழ சிரித்தபடி ஆரம்பித்தார் சிம்ரன்.

“கடந்த பதினைந்து நாட்களில் பல பத்திரிகைகளில் என்னைப் பற்றி ஏகப்பட்ட பொய்ச் செய்திகள். எங்கிட்டே ஒருவார்த்தை கூட கேட்டு உறுதிப்படுத்திக்கவே இல்லை.

“எனக்கும் ராஜுவுக்கும் (ராஜுசுந்தரம்) எந்தத் தகராறும் இல்லை. எங்கள் காதல் ரொம்ப சின்சியராகத் தொடருது” என்றவரை இடைமறித்து ‘அப்போ அவரோடு சேர்ந்தே வந்து இதை நீங்க சொல்ல வேண்டியதுதானே?’ என்றோம்.

“இல்லை அதை அவரிடமே நீங்கள் கேட்டுக் கொள்ளுங்கள்” என்றவர் ஒரு கணம் கலங்கினார்.

“என்னோட காதல் பற்றி நிறைய செய்திகள் வருது. பத்திரிகைகளில் அடிக்கடி கல்யாணமும் செய்து வைச்சுடுறாங்க. இதையெல்லாம் கூட பொறுத்துக்கலாம். எனக்கு உயிர்க்கொல்லி நோய் வந்துவிட்டதாகவும், அதற்காக நான் சிகிச்சை எடுத்துக் கொண்டதாகவும் எழுதியிருக்காங்க. இதுதான் என்னை ரொம்ப பாதித்துவிட்டது. அதுமாதிரி எனக்கு எந்த வியாதியும் இல்லை. நான் ஒரு பெண் என்ற முறையிலாவது கொஞ்சம் இரக்கப்படலாமில்லையா?” என்றார் கெஞ்சலாக.

‘கன்னத்தில் முத்தமிட்டால்’ படத்தில் டிவி நியூஸ் ரீடராக நடிக்கிறேன். ‘பார்த்தாலே பரவசம்’, ‘பம்பல் கே சம்பந்தம்’, பிரசாந்துடன் ‘தமிழ்’, மலையாளம், தெலுங்கில் இரண்டு படங்கள் என்று பிஸியாகத்தான் இருக்கிறேன். தஞ்சை தேவதாசிகளைப் பற்றி துரேஸ் ஷாவார் என்ற ஹாலிவுட் பெண் இயக்குனர் இயக்கவிருக்கும் ஆங்கிலப் படத்திலும் நடிக்கிறேன். இருபது மணி நேரம் படப்பிடிப்பில் இருப்பதால்தான் பத்திரிகையாளர்களைச் சந்திக்க முடியவில்லை” என்று விளக்கம் கொடுத்தவர், ஒன்றை அழுத்திச் சொன்னார்:

“பஞ்சாபில் பிறந்து, மும்பையில் வளர்ந்தேன். இனி சென்னையில் வீடு வாங்கிக் கொண்டு இங்கேயே செட்டில் ஆகிவிடலாம் என்று இருக்கிறேன். அடுத்தமுறை நாம் சந்திப்பது அந்த புதுவீட்டிலாகக் கூட இருக்கலாம்.”

“அந்த வீட்டில் உங்கள் காதல் கணவரோடு வாசம் தொடங்குமா?” என்றால் “எஸ்” என்று புன்னகை செய்கிறார்.

— ஜெ

படங்கள்: ராஜன்

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

● உமரி பொ. கணேசன், மும்பை - 37

*? விஷ சாராய சாவுகளைத் தடுக்க அதன் விற்பனையாளர்களையும் அதற்கு உடந்தை யானவர்களையும் அரசு தூக்கிலிட்டால் என்ன?*

! தூக்கிலிடாவிட்டாலும் தண்டனையைக் கடுமையாக்கலாம். நிற்க... கான்ஸ்டபிள்களை, சப் இன்ஸ்பெக்டர்களை சஸ்பென்ட் செய்யும் அரசு... அந்தப்பகுதி டி.எஸ்.பி. போன்ற உயர் அதிகாரிகள் மீது கைவைக்க பயப்படுகிறது. அரசியலும் சாராயமும் ஒன்றாகக் கலந்து விட்ட நிலையில், கள்ளச் சாராயத்தை ஒழிக்க இனி ராணுவத்தைத்தான் கூப்பிட வேண்டும்.

● கல்லன் கிருஷ்ணராஜ், குன்னூர் - 5

*? தாவரசு கொலை வழக்கின் தீர்ப்பை, சட்டம் வென்றது, தர்மம் (நீதி) தோற்றது என்று அர்த்தம் செய்து கொள்ளலாமா?*

! சட்டம் எங்கே வென்றது, படுதோல்வி அல்லவா, அதற்கு! வழக்கு சரியாக நடத்தப்பட வில்லை என்பதற்கு கோமதிநாயகத்தின் மாற்றல் உத்தரவு ஒன்றே போதாதா?

## நீங்கள் கேட்டவை - தராசு

● லெ.நா. சிவகுமார், சென்னை - 33

*? ஃபரூக் அப்துல்லாவின் கண்ணீர்..?*

! அவர் கண்ணீர் உணர்வு பூர்வ மானது என்று ஒப்புக் கொள்ளலாம். ஆனால், 'அப்பாவி மக்களை ஒரு நாடு தாக்குகிறது. அதை ஒரு நாடு வேடிக்கை பார்க்கிறது' என்று பாகிஸ்தானையும் இந்தி யாவையும் குறிப்பிடும் அப்துல்லா வின் பேச்சு அத்து மீறியது. உணர்ச்சி வசப்பட்டும் கூட அப்படிப் பேசி யிருக்கக்கூடாது.

● த. குணசேகரன், கவுந்தப்பாடி

*? வளர்ந்துவரும் இளம் நடிகர்களில் யாருடைய நடிப்பு தங்களைக் கவர்ந் துள்ளது?*

! 'நிலாகாலம்' படத்தில் 'புள்ளி' என்ற பாத்திரத்தில் நட்புக்காக ஏங்கும் மாஸ்டர் உதயராஜ்.

● டி. சித்ரா, சென்னை - 88

*? 'இமயத்துக்கு அஞ்சலி' டி.வி. நிகழ்ச்சியில் 'என்னடி ராக்கம்மா' பாட லுக்கு ஆடியவர்களின் ஆட்டத்தைப் பார்த் தீர்களா? சினிமாவில் இருந்த கண்ணியம் அதில் இல்லையே? இந்த அஞ்சலி, கேலி செய்வது போலல்லவா இருக்கிறது?*

! ஆட்டம் என்றால் இதுதான் என்று வெள் ளித்திரையிலேயே ஆபாச எல்லைகளை எட்டி விடுகிறார்கள். அதைத் தவிர வேறெது வும் ஆட்டம் இல்லை என்று பாமர மக்களும் கருதும்போது, என்ன கண்ணியத்தை யாரிடம் எதிர்பார்க்க முடியும்!

● ப. இராம் முருகன், சிவகங்கை

*? பீஹார் கிரிக்கெட் சங்கத் தலைவராக லல்லு பிரசாத் யாதவ் தேர்வு செய்யப்பட் டுள்ளது குறித்து?*

! பெட்டிங்குக்கு ஆதரவு அளித்து உசுக்கு



* ஏக்கமும் ஏற்றமும்!



* பதவியும் பந்தயமும்!



* ஆதாரமும் இலக்கும்!

விக்காமலிருந்தால் சரி!

● அஜார், தேனாம்பேட்டை

*? காமம் ஒரு குற்றமாகுமா?*

! இனவிருத்திக்காக இயற்கை அனைத்து உயிரினங்களுக்கும் வழங்கியுள்ள உணர்வை, குற்றம் என்று எப்படிச் சொல்ல முடியும்?

உணர்வை அறிவால் நெறிப்படுத்தும் வல்லமையை அதே இயற்கை மனிதனுக்கு மட்டும்தான் வழங்கியிருக்கிறது என்பதையும் ஞாபகம் வைத்துக் கொள்வது அவசியம். முக்கியம்!

❑ ரூ.100 பரிசு பெறுபவர் :
ஆர். குட்டி பிரசன்னா,
E.L. 91, TNHB, காந்தி கிராமம்,
கரூர் - 639 004.

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
இரா. திலிப்,
சி 3, 153, பெல் டவுன்ஷிப்,
திருச்சி - 14

● வி. லக்ஷ்மி ராமன், சென்னை - 73

*? காஷ்மீரில் பயங்கரவாதத்தை ஆதரிக்கும் பாகிஸ்தானை நம்பி, அமெரிக்கா 'உலகில் பயங்கரவாதத்தை ஒழிப்பேன்' என்று கூறுவது, மண் குதிரையை நம்பி நட்டாற்றில் இறங்கும் கதைதானே..?*

! பாகிஸ்தானை நம்பி இறங்கவில்லை அமெரிக்கா. சொந்த பலத்தையும் உலக நாடுகளின் பலமான ஆதரவையும் நம்பித்தான் இறங்கியிருக்கிறது.

● ஜி.ஜி. கிருஷ்ணன், விசலூர்

*? உயிரோட்டமான ஓவியங்கள் வரைந்த சசியின் மரணம் குறித்து...?*

! சின்ன சின்ன ஜோக் படங்களில் ஆரம்பித்து, தொடர் கதைகளுக்கு வண்ணப்படம் போடுகிற உயரத்துக்கு வெகு சீக்கிரம் வளர்ந்த இளைஞர். நல்ல உழைப்பாளி, பண்பாளர். பத்திரிகை உலகின் பரபரப்புக்கும் அவசரத்துக்கும் ஈடுகொடுத்து ஒத்துழைத்தவர். அவர் குடும்பம் மட்டுமல்ல; தமிழிதழ்கள் குடும்பமும் ஒரு முக்கிய உறுப்பினரை இழந்து தவிக்கிறது.

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி

*? உள்ளாட்சி தேர்தலிலாவது கட்சிகள் தனியாகப் போட்டியிட்டுத் தங்கள் பலத்தை அறிய வேண்டாமா?*

! நியாயத்துக்கு, உள்ளாட்சித் தேர்தல்கள் கட்சி நோக்கு கடந்தவையாக இருக்க வேண்டும். உள்ளூர் உழைப்பாளிகளும் சமூக நல நோக்குள்ளவர்களும் தேர்வாகி, மக்களுக்கும் அரசுக்கும் பாலமாயிருந்து காரியங்களை நடத்த வேண்டும் என்பதே உள்ளாட்சிகளின் நோக்கம். அதெல்லாம் பழங்கதை; விடுங்க!

● கே.வி.ராமன், சென்னை - 73

*? பிரதமர் கவலையுடன் கண் விழித்தது தான் மிச்சம். கடைசியில் விமானம் கடத்தப் படவேயில்லையாமே..?*

! அதே தினம், மீனம்பாக்கத்தில், டிக்கெட்டில்லாத ஒரு ஆந்திரா கிராமத்துக்காரர் விறுவிறுவென்று விமானம் ஒன்றில் ஏறப்போய் விட்டார்! விசாரித்ததில், ஊழியர்களுக்கான நுழைவாயில் வழியே அவர் சென்றதாகத் தெரிய வந்துள்ளது. பாதுகாப்பு இந்த லட்சணத்தில் இருக்க, ஹைஜாக் நாடகம் நிஜமாகியிருந்தாலும் வியப்பதற்கில்லை.

● ஆர். குட்டி பிரசன்னா, கரூர் ❑

*? பின்லேடனை ஒழித்துவிட்டால் ஒட்டு மொத்த பயங்கரவாதத்தையும் அழித்து விடலாம் என்ற அமெரிக்காவின் கணக்கு சரியானதா?*

! அப்படி அவர்கள் நினைக்கவில்லை. பயங்கரவாதம் பரவலாக இருந்தாலும் முக்கிய ஊற்றுக்கண் பின்லேடன் எனக் கருதுகிறார்கள். சமீப வாஷிங்டன், நியூயார்க் தாக்குதல் மட்டுமின்றி இதற்கு முன்னரே அமெரிக்க தூதரகங்கள் தாக்கப்பட்டதற்கும் பின்லேடனே காரணம் என்பதற்கு அவர்களிடம் ஆதாரம் உள்ளதாகத் தெரிகிறது. எனவே இன்றைய இலக்கு பின்லேடன்.

# பின்லேடனை ஒழித்தால் பயங்கரவாதம் அழியுமா?

★ உழைப்பும் இழப்பும்! ★ உணர்வும் உறுத்தலும்!

● இரா. திலிப், திருச்சி - 14 ★

*? பயங்கர அடி விழும் எனத் தெரிந்தும் ஆஃப்கானிஸ்தான் துள்ளுகிறதே..?*

! வளர்ச்சியுற்ற மேற்கத்திய நாடுகளைப் போலன்றி, பயங்கர அடி விழுந்தால் அவர்களிடம் இழப்பதற்கு ஒன்றுமில்லை; உயிர்களைத் தவிர. அதனால்தான்!



• சாருபாலா தொண்டைமான்



• நிர்மலா லோகநாதன்

• எமிலி ரிச்சர்ட்

## திருச்சியில்...

# மகளிர் மட்டும்!

**சாருபாலா தொண்டைமான்**

அ.தி.மு.க கூட்டணியில் அங்கம் வகிக்கும் தமிழ் மாநில காங்கிரஸ் வேட்பாளர். ஐந்து ஆண்டுகளாக த.மா.காவின் மாநில பொதுக்குழு உறுப்பினர். புதுக்கோட்டை ராணி என அழைக்கப்படுபவர். கடந்த பதினெட்டு ஆண்டுகளாக திருச்சி கண்டோன்மெண்ட்டில் அமைந்துள்ள புதுக்கோட்டை மாளிகையில் வசிக்கிறார். எம்.ஏ பட்டதாரியான இவருக்கு வயது நாற்பத்து மூன்று. படித்த காலத்திலும் சரி, அதன் பின்னரும் சரி சமூகத் தொண்டில் ஆர்வம் அதிகம்.

பார்வையற்ற மாணவ, மாணவிகளை வீட்டிற்கு வரவழைத்து அவர்களுக்குக் கல்வி போதிப்பதில் அதிக நாட்டம் உண்டு. அதில் இவரிடம் பயின்ற பார்வையற்ற மாணவர் ஒருவர் எம்.ஏ., தமிழ் இலக்கியத்தில் தேர்ச்சி பெற்றிருக்கிறார்.

கணவரும், புதுக்கோட்டை மன்னருமான இராஜ இராஜ கோபாலத் தொண்டைமான் துப்பாக்கிச் சுடுவதில் நிபுணர். பல போட்டிகளில் பங்கு பெற்று அகில இந்திய அளவில் பரிசுகளைச் சுட்டுத் தள்ளியுள்ளார்.

தாய் வழித் தாத்தாவான பாஸ்கர தொண்டைமான், காமராஜர் தமிழக முதல்வராக பதவி வகித்தபோது, அவரிடம் உதவியாளராக இருந்தவர். ஐ.ஏ.எஸ் அதிகாரியான அவர் அறுபதுகளில் கல்கியில் 'வேங்கடம் முதல் குமரி வரை' என்ற ஆலயச் சிறப்புக் கட்டுரைத் தொடர் எழுதியவர்.

அரசியல் களத்தில் சாருபாலா சந்திக்கும் இந்த முதல் தேர்தலிலேயே மேயர் பதவிக்குப் போட்டியிடுகிறார்!

"நேர்மையான நிர்வாகத்துடன் கூடிய ஊழலற்ற சிறந்த மாநகராட்சியாக திருச்சி மாநகராட்சியை விளங்கச் செய்வேன். அறுபது வார்டுகளிலும் உள்ள பிரச்னைகளுக்கு,

நாளொன்றுக்கு ஒரு வார்டு என எடுத்துக் கொண்டு பொதுமக்களின் மாநகராட்சி சம்பந்தப்பட்ட அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்து தருவதில் தீவிர கவனம் செலுத்துவேன்!" என்கிறார் உறுதியாக.

### நிர்மலா லோகநாதன்

தி.மு.கழக வேட்பாளராகப் போட்டியிடும் இவர், இதே மாநகராட்சியில் அறுபதாவது வார்டு உறுப்பினர். திருச்சியில் மகளிர் அழகு நிலையங்கள் நடத்தி வருகிறார். மாமன்றத்தில் அதிகம் பேசாதவர் எனப் பெயரெடுத்திருந்தபோதிலும், 'பேச்சைவிட, செயல்பாடுகள்தானே பொது மக்களுக்குத் தேவை' என்பது இவரது வாதம். முப்பத்து மூன்று வயதாகும் பி.ஏ. பட்டதாரி.

கணவர் லோகநாதன் 1986-91 ஆகிய ஐந்து ஆண்டுகள் மேல பாண்டமங்கலம் பஞ்சாயத்துத் தலைவராக இருந்துள்ளார். தற்சமயம் பெண்கள் கல்லூரி ஒன்றில் அலுவலகப் பணியாளராகப் பணி புரிந்து வருகிறார்.

மாநகராட்சித் தேர்தலை இவர் சந்திப்பது இது இரண்டாவது முறை.

கவுன்சிலராக தாம் பணி புரிந்தபோது ஒரு சதவீதம்கூட லஞ்சம் வாங்கியதில்லை எனக் கூறும் இவர், பொதுமக்கள் மத்தியில் தமக்கு அதுவே ப்ளஸ் பாயிண்ட் என்கிறார்.

"மாநகராட்சிக் கூட்டத்தை ஓர் அரசியல் மேடையாக, அரசியல் விரோதம் தீர்க்கும் களமாக அனுமதிக்க மாட்டேன். பொதுமக்கள் வரிப்பணத்தில் நடைபெறும் மாநகராட்சிக் கூட்டங்கள் பொதுமக்கள் பிரச்னைகளுக்குத் தீர்வு காண மட்டுமே பயன்படும் வகையில் செயல்படுவேன்!" என்கிறார் தி.மு.கழக மேயர் வேட்பாளர் நிர்மலா லோகநாதன்.

### எமிலி ரிச்சர்ட்

காங்கிரஸ் வார்டு உறுப்பினராக போட்டியிட்டு, வெற்றி பெற்று துணை மேயர் ஆனவர். மேயராக இருந்த புனிதவல்லி மறைவுக்குப் பின்னர் கடந்த ஆறு மாதமாக திருச்சி மாநகர மேயராக பொறுப்பு வகித்து வருகிறார்.

ஐம்பத்து மூன்று வயதாகும் இவர், அரசியல் குடும்பத்தைச் சேர்ந்தவர். தந்தை முன்னாள் நகர மன்றத் தலைவர். முன்னாள் பாராளுமன்ற உறுப்பினர் அடைக்கலராஜின் சகோதரி. அரசியல் பாரம்பரியம் உள்ளவர் என்பதும், கிறிஸ்துவர் என்பதும் இவரது பலம்.

'அதிமுக கூட்டணியில் காங்கிரஸ் நிலைத்திருந்தால் நிச்சயம் நாம்தான் மேயர்' என்கிற கனவில் இருந்தவர். கூட்டணி பிளவுக்குப் பின், கடந்த ஐந்து ஆண்டுகளில் மாநகராட்சி மூலமாகச் செய்துள்ள பணிகளை நம்பி களத்தில் இறங்கியுள்ளார்.

— இருள்நீக்கியான்

## பூ... சிறப்பூ!

✉ 'மனம் மணமறிய ஆவல்' மிகச் சிறப்பாக இருந்தது. இதற்கு முன் தங்கள் இதழில் ஆபஸ்தம்பன் எழுதிய 'பனிப்பாறை' தொடருக்குப் பிறகு பெண்ணின் தனித் தன்மையை நிலைநாட்டியது. கதையாசிரியர் அருண் சரண்யாவுக்கு வாழ்த்துக்கள்.

எஸ். குமரன்ராஜா.
ஆரணி.

✉ ராம்ஷேகரின் வாத்சல்யம், மாமியின் பரிவு, லண்டன் மாகியின் அளப்பரிய ஸ்நேகம் போன்றவை சிவப்ரியாவின் காரெக்டருக்கு மேலும் அழகூட்டின. வனப்புமிகு ஓவியங்கள் வரைந்த ஷ்யாமுக்குப் பாராட்டு.

ஐ. ஸ்ரீகாந்த்.
நெய்வேலி.

✉ 'அனு க்ளினிக் தன் பார்வையை ஏழைகளின் புறமும் திருப்பத் தொடங்கியது' என்ற முடிவுரை வரிகளைப் படித்ததும் 'முடிவல்ல – ஆரம்பம்' என்பது நிருபணமாயிற்று!

எஸ். சையது முகமது.
சென்னை – 93.

✉ திடீர் திருப்பங்கள் இருந்தாலும் கவை குறையாமல் கொண்டு சென்றிருக்கிறார் அருண்சரண்யா. கடைசியாக வந்த பூவின் உவமை, சிறப்பு!

என். ராஜா.
பெங்களூர்-40.



# பன்னீருக்கு 'மெமோ' கண்டிஷன்!



**காதில் விழுந்தவை**

• கலைஞரின் தொகுதியான சேப்பாக்கத்தில் எட்டு மாநகராட்சி வார்டுகள் உள்ளன. இதில் தி.மு.கவும் அதன் கூட்டணி கட்சிகளும் இரண்டு இடங்களில்கூட வெற்றி பெறுவது கடினம் என்று தி.மு.க பிரமுகர்களே ரகசியமாகக் கிசுகிசுக்கிறார்கள். மு.க. தமிழரசு, சேப்பாக்கம் கழக விவகாரங்களில் மூக்கை நுழைத்துக் கிண்டுவதால், பல விசுவாசமான கழகத் தொண்டர்கள் புண்பட்டுப் போயிருக்கிறார்களாம். தி.மு.க ஜெயிக்க வேண்டிய வார்டுகளில் தொண்டர்களுக்கே சரியாக அறிமுகம் ஆகாத வேட்பாளர்களைப் போட்டிருப்பதால் கழகத் தோழர்கள் சோர்ந்து போயிருக்கிறார்கள். "சென்ற சட்டமன்றத் தேர்தலில் இவர்கள் செய்த குழப்பங்களால் கழகத் தலைவரே 4000 வாக்குகள் வித்தியாசத்தில்தான் வெற்றி பெற முடிந்தது. உள்ளாட்சித் தேர்தலில் ஒவ்வொரு வாக்கும் முக்கியம். இந்த நிலையில் தமிழரசு செய்யும் குழப்பத்தால் கழகம் பல வார்டுகளில் தோற்கும் அபாயம் இருக்கிறது. தலைவர் இதில் தலையிட்டு சரி செய்ய வேண்டும்" என்கிறார் கலைஞருக்கு நெருக்கமான மூத்த பிரமுகர் ஒருவர்.

• உள்ளாட்சித் தேர்தலுக்குப் பின்னர் த.மா.கா காணாமல் போய்விடும் என்று அந்தக் கட்சிப் பிரமுகர்களே புலம்பி வருகிறார்கள். ஜி.கே. வாசன் பிரசாரம் செய்யும் இடங்களில், சொந்தக் கட்சிக்காரர்களே வருவதில்லையாம். அப்புறம் கூட்டணிக் கட்சிக்காரர்கள் எப்படி வருவார்கள்? திருச்சி மேயர் வேட்பாளராக சாருபாலா தொண்டமானைப் போட்டதில் திருச்சி த.மா.கா படு அதிருப்தியில் இருக்கிறது. சென்னையில் வெற்றிவேலும், எஸ்.ஆர்.பி.யின் ஆதரவாளர் மனோவும் த.மா.காவுக்குக் கொடுக்கப்பட்ட தொகுதிகளைப் பங்கு போட்டுக் கொண்டதில், நகரின் மூன்று மாவட்டச் செயலாளர்களும் வெறுப்படைந்து ராஜினாமா செய்துவிட்டார்கள். "இந்தக் கோஷ்டிகளை வைத்துக்கொண்டு என்னால் கட்சி நடத்த முடியாது. தேர்தல் முடிந்ததும் சோனியாவைச் சந்தித்து இணைவதற்கு ஓ.கே சொல்லிவிடப் போகிறேன்" என்று தனக்கு மிகவும் நெருக்கமான ஒரு தொழிலதிபரிடம் சொல்லியிருக்கிறார் ஜி.கே.வாசன். ஆனால் அவரது சித்தப்பா ரங்கசாமி மூப்பனார்தான் "அவசரப்பட வேண்டாம்" என்று ஆலோசனை சொல்லி வருகிறாராம்.

• முதல்வர் பன்னீர் செல்வத்துக்கு, பல dos and donts பட்டியலிட்டுக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அதில் மிக முக்கியமானது எந்தக் காரணம் கொண்டும் தினகரன் மற்றும் நடராஜன் ஆகியோருடன் விசேஷத் தொடர்புகள் வைத்துக் கொள்ளக் கூடாது என்பதாம். இது தவிர எந்தத் தொழிலதிபரையும் சந்திக்கக் கூடாது என்றும் சொல்லி வைக்கப்பட்டுள்ளதாம்.

— சஞ்சயன்

படம்: ராஜன்

**Heinz**
Trust • Taste • Nutrition

# இலவசம்




# ஒரு ஜூஸர்*

**ஒவ்வொரு ஃபாரெக்ஸ் பேக்குடன்**

இப்போது ஃபாரெக்ஸிலிருந்து உங்கள் குழந்தை ஊட்டச்சத்தை மட்டும் பெறவில்லை. அதோடு கூட ஒரு கவர்ச்சியான ஜூஸரும் ஃபாரெக்ஸ் உடன் கிடைக்கிறது, இலவசமாக! உங்களின் பிரியமான குழந்தைக்கான உணவை நீங்கள் வாங்க இன்னும் ஒரு காரணம்!






**Farex®**
GROWING UP RIGHT

*இச்சலுகை சரக்கு உள்ள வரையே. இச்சலுகை தமிழ்நாட்டில் தேர்ந்தெடுக்கப்பட்ட நகரங்களில் மட்டுமே. இச்சலுகை இல்லாத சரக்கும் கிடைக்கும்.

**IMPORTANT NOTICE / महत्वपूर्ण सूचना: MOTHER'S MILK IS BEST FOR YOUR BABY. INFANT FOOD SHALL BE INTRODUCED ONLY AFTER 4 MONTHS OF AGE.**

முக்கிய அறிவிப்பு: தாய்ப்பாலே உங்கள் குழந்தைக்கு சிறந்தது. குழந்தைக்கான உணவை அதற்கு 4 மாதமான பிறகே கொடுக்க ஆரம்பிக்கவும்.

தயவு செய்து, பேக்கின் வெளிப்புறமுள்ள ஆகாரம் கொடுக்கும் வழிமுறைகளை படிக்கவும்.

ஃபாரெக்ஸ் பேபி புக்லெட்டை இலவசமாகப்பெற கீழ்கண்ட விபரங்களுடன் எழுதுங்கள்:

குழந்தையின் பெயர்: ____________

பிறந்த தேதி: ____________

தாயின் பெயர்: ____________

முகவரி: ____________

____________

எழுதவேண்டிய முகவரி: ஹெய்ன்ஸ் இந்தியா பி. லி. த.பெ. எண். 1907, மும்பை 400 001.

CONTRACT.FRX.26921.TA

# "த.மா.கா செல்வது தவறான பாதை!"

**முதுகு சவாரியிலிருந்து காங்கிரஸை மீட்டு, உள்ளாட்சித் தேர்தலில் தனி அணி அமைத்திருக்கிறார் ஈ.வி.கே.எஸ். இளங்கோவன். தேர்தலுக்குப் பின் இவரைக் கவிழ்க, கோஷ்டிகள் காத்திருக்கின்றன. அவரைச் சந்தித்தோம்.**

**"இந்த உள்ளாட்சித் தேர்தலில் காங்கிரஸ் தனி அணி அமைக்க முக்கியமான காரணம் என்ன?"**

"அ.தி.மு.கவுடன் கூட்டணி வைத்துப் போட்டியிட்ட, கடந்த பாராளுமன்ற, சட்டமன்றத் தேர்தல்களில் எங்கள் செல்வாக்குக்கு ஏற்ப இடங்கள் ஒதுக்கப்படவில்லை. உள்ளாட்சித் தேர்தலிலும், இதே நிலை தொடரும் என்ற போக்குதான் தெரிய வந்தது. எங்கள் கட்சிப் பிரமுகர்களுக்குப் பரவலாக வாய்ப்பு கிடைக்க வேண்டுமென்றால், உள்ளாட்சித் தேர்தல்தான் சரியான களம். எனவே தான் தனி அணி அமைக்க எங்கள் கட்சியில் எல்லோரும் சேர்ந்து முடிவு செய்தோம். மேலிடமும் ஓ.கே. செய்து விட்டது."

**"ஒரு வேளை அ.தி.மு.க. நேரடியாக உங்களைப் பேச்சுவார்த்தைக்கு அழைத்திருந்தால் தனி அணி அமைக்க முயன்றிருக்க மாட்டீர்கள் என்று சொல்லலாமா?"**

"காங்கிரஸ் தனித்து செல்வாக்கு பெற்று ஆட்சியைப் பிடிக்க வேண்டுமென்பதுதான் என் விருப்பம். அதற்கான சூழ்நிலை இப்போது வந்திருக்கிறது. இரு திராவிட கட்சிகளும் மக்களின் வெறுப்பை சம்பாதித்துக் கொண்டு விட்டன. காங்கிரஸ் மீது ஒரு நம்பிக்கை வந்திருக்கிறது. எனவே காங்கிரஸ் உள்ளாட்சித் தேர்தலில் தனி அணி அமைப்பது காலத்தின் கட்டாயம் என்று சொல்லலாம்."

**"மூப்பனார் போன்ற தலைவர்கள் இப்போது இல்லாதது மூன்றாவது அணியைப் பலவீனமாகக் காட்டுகிறதே!"**

"நாடு முழுவதும் செல்வாக்கு பெற்ற ஒரே தலைவர் சோனியா காந்திதான். அந்த வகையில் எங்கள் அணி வலிமையாகத்தான் இருக்கிறது. மூப்பனார் 96லேயே காங்கிரஸை விட்டு விலகிப் போய் விட்டார். மூப்பனார் அரசியலில் கண்ணியமான ஒரு தலைவர்தானே தவிர மக்கள் செல்வாக்கு பெற்ற தலைவர் அல்ல!"

**"த.மா.கா. உங்கள் அணியில்தானே சேர்ந்திருக்க வேண்டும்...!"**

"ஆமாம்! த.மா.கா. செல்வது தவறான பாதை! அதற்காக அவர்கள் வருந்தும் காலம் வரும்."

**"தேர்தலுக்குப் பிறகு உங்கள் தலையை வாங்க காங்கிரஸ் கோஷ்டிகள் தயாராகி வருகின்றனவே.**

"கவலையில்லை. தலைவர் பொறுப்பு போனாலும் தொண்டனாக இருந்து பாடுபடுவேன்."

சந்திப்பு: **ப்ரியன்**

# தீபாவளிக்கு உதவுங்கள்!



மனித நேயத்துடன் செயல்படும் கோயமுத்தூர் - குரும்பபாளையம் - **தி யுனைடெட் ஊனமுற்றோர் பள்ளியில்** உள்ள ஊனமுற்ற, அனாதை குழந்தைகளும் தீபாவளியினை கொண்டாடி மகிழ தாங்களும், தங்களின் நண்பர்களும் இணைந்து தீபாவளிக்கு உதவி செய்ய வேண்டுகிறோம். இப்பள்ளியின் பெயரில் செக் / டிராப்ட் / எம்.ஓ செய்யலாம்.

## THE UNITED PHYSICALLY HANDICAPPED SCHOOL

96, Sathy Main Road, Kurumbapalayam, Coimbatore - 641 107.

**Phone: 0422-867578**



**(An Institution for Orphaned Disabled Children)**



## வாங்கிவிட்டீர்களா?

## இலவசம்... இலவசம்...!

**ஓம் வாசகர்களுக்காக...**
**பிரத்யேகமாக**
**சீனாவில் வடிவமைக்கப்பட்ட...**
**செல்வத்தை காந்தமாய்**
**கவர்ந்து தரும்**



**சரவணபவ**
மாதமிருமுறை வெளிவரும்
ஒரே பக்தி பத்திரிகை!

# யின்-யான்

-சீன யந்திரம்

## வளமான வாழ்வுக்கு வழிகாட்டும்

# ஃபுங் ஸ்வே

வாஸ்து -தனிப்புத்தகம்

**பக்தர்களின் மனபாரம் குறைக்கும்**

## ஸ்ரீபார்த்தசாரதி சுவாமி!

-வண்ணப்படம்

மேலும் பக்திச் செய்திகள்!

அடுத்த இதழில்

**தேவியர் ஸ்பெஷல்**

இதுவரை யாரும் கொடுத்திராத

**சரஸ்வதி - தனலெட்சுமி**

**கண்ணாடி கீ-செயின் இலவசம்!**






2001 அக்டோபர் 21
விஷு ஐப்பசி 4
மலர் : 60
இதழ் : 12

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# ஆஃப்கான் யுத்தம் – அமெரிக்காவுக்கு ஆபத்து!

மூன்றாவது உலகப் போராக மாறாவிட்டாலும் அமெரிக்க - ஆஃப்கான் யுத்தம் உலகளாவிய பாதிப்புகளை ஏற்படுத்தத்தான் போகிறது.

அமெரிக்க பொருளாதாரம் பாதிப்புக்கு உள்ளாகுமெனில் உலகின் பிற நாடுகளில் பொருளாதாரம் நிலைகுலைந்து போகும்! குறிப்பாக, பெட்ரோலியப் பொருட்கள் விலை உயர்வினால், தொழில்-வர்த்தகம் திட்டமிட்ட முன்னேற்றங்களைக் காண்பதற்குப் பதிலாகப் பின்னடைவையே சந்திக்கும். அமெரிக்காவுடன் வர்த்தகம் செய்து வருகிற பலப்பல நாடுகளுக்கு, அந்நாட்டின் ஆர்டர்கள் கிடைக்காமல் போகுமென்பதாலும் குறையும் என்பதாலும் பொருளாதார தேக்கமும் வீழ்ச்சியும் விளையும்.

வல்லரசான அமெரிக்காவினுடைய பொருளாதாரம், மற்ற நாடுகளைக் காட்டிலும் விரைவில் சீரடைவதற்கான வாய்ப்புகள் உண்டு. ஆனால், இந்த யுத்தத்தினால் அமெரிக்கா என்ன சாதிக்கும் என்று கேட்டால், பூஜ்யம்தான்!

அமெரிக்கா மீது பின் லேடன் நடத்திய கொடூரத்துக்குப் பதிலடி கொடுத்தாக வேண்டிய நிர்ப்பந்தம் அதிபர் புஷ்ஷுக்கு. திரும்பத் தாக்காமல் அமைதி காத்தால் அமெரிக்க மக்களிடையே அவருடைய இமேஜ் வீழ்ந்துவிடும்.




ஆனால், ஆஃப்கானிஸ்தானைத் தாக்குவதால் பின் லேடனைக் கண்டுபிடித்து அழித்து விட முடியுமா...? பின் லேடன் தோற்றத்துடனேயே பலர் அங்கே தலைமறைவாக இருப்பதாகத் தகவல்கள் வருகின்றன. யார் நிஜமான பின் லேடன் என்று கண்டறிவதற்கு எந்த சாட்டிலைட்டும் உதவ முடியாது!

ஒரு வேளை நிஜ பின் லேடனைக் கண்டுபிடித்து தண்டித்து விட்டாலும், ஆஃப்கான் மீதும் தாலிபான் மீதும் அமெரிக்கா தொடுத்துள்ள போர், பயங்கரவாதத்துக்கு எதிரான இறுதிப் போராக அமையப் போவதுமில்லை.

பயங்கரவாதம் என்பது காளானைப் போல் உலகெங்கும் ஓசையின்றிப் பரவிக்கிடக்கிறது. ஓரிடத்தில் ஒடுக்கினால் வேறிடத்தில் தலைதூக்கி தன் வேலையை ஆரம்பிக்கும். போதைப் பொருள் வியாபாரம் போன்ற சமூக விரோத செயல்களின் அடிப்படையில் தங்கள் பொருளாதாரத்தை அமைத்து வளர்ந்துள்ள பயங்கரவாத அமைப்புகள், சமுதாய அமைப்பை மறைமுகமாக ஆட்டுவிக்கின்றன, ஆயுத உற்பத்தியையும் வர்த்தகத்தையும் நிர்ணயிக்கின்றன. இவ்வாறு தனது கொடுங்கரங்களை அனைத்து முக்கிய பிரிவுகளிலும் நுழைத்து இறுக்கிக் கொண்டிருக்கிற ஒரு சிக்கலை விமான தாக்குதல்களாலும் ஏவுகணைத் தாக்குதல்களாலும் அழித்துவிட முடியுமா?

ஆஃப்கானிஸ்தான் மீதான தாக்குதல்கள் சில பயங்கரவாதிகளையும் மிகப் பல அப்பாவிகளையும் அழிக்கப் போவது உறுதி. ஆனால், இந்த யுத்தத்தின் மூலம் இழப்பு யாருக்கு அதிகம் என்று பார்த்தால் அமெரிக்காவுக்குத்தான்.

ஆஃப்கானிஸ்தான் பெரும்பாலும் பொட்டல் நிலம் - பாலைவனப் பிரதேசம். அமெரிக்காவைப் போல் நவ நாகரிக கட்டட அமைப்புகள் நிறைந்த, நவீன சொர்க்கபுரி அல்ல. நியூயார்க் வாஷிங்டனில் நடந்த திட்டமிட்ட ஒரு தாக்குதல் மூலம் இழந்ததையே இன்னமும் கணக்கு போட முடியவில்லை. ஆனால், ஆஃப்கானைத் தாக்குவதால் அந்நாட்




டில் பெரிய பொருளாதார நஷ்டம் ஏற்பட்டு விடாது - இழப்பதற்கு ஏதுமில்லை என்பதால்.

மாறாக, பயங்கரவாத யுத்தத்தின் அணுகு முறைகளால் அமெரிக்காவுக்கு ஏற்படக் கூடிய அபாயங்கள் கற்பனைக்கெட்டாதவை. உயிரியல், இரசாயன ஆயுதங்கள் இந்தப் பயங்கரவாதிகளின் கரங்களில் தாராளமாக விளையாடிக் கொண்டிருக்கின்றன.

பகிரங்க யுத்தமாக அன்றி, ரகசியமாக அவற்றைக் கொண்டு இரவோடிரவாக நகரங்களை நாசமாக்க முடியும். கிருமிகளும் இரசாயன நச்சுகளும் காற்றிலும் குடிநீரிலும் உணவிலும் கலந்து மக்களை அழிக்க முடியும்; ஊனமுறச் செய்ய முடியும்.

இத்தகைய பயங்கரங்கள் வளர்ந்துவிட்ட நிலையில், தர்ம யுத்தம் என்பதே உலகில் இனி சாத்தியமில்லை. அனைத்து தலைவர்களுமே யுத்தமற்ற உலகம் என்ற இலக்கை நோக்கித்தான் இனி சிந்தனையைத் திசைதிருப்ப வேண்டும்.

தாலிபானின் கொடூரங்களை ஆதரிப்பதாக எந்த நாடும் இன்று வெளிப்படையாகக் கூறத் தயாராயில்லை. பாகிஸ்தான்கூட தனது நிலையை மாற்றிக் கொள்ளும் கட்டாயத்துக்கு உட்பட்டிருக்கிறது; இதன் விளைவாக உள்நாட்டுக் கலவரங்களைச் சந்திக்கிறது.

அரசியல் கொள்கைகள், இயக்கங்கள், மதம், கோட்பாடு போன்ற அனைத்தையும் கடந்த அமைதி நோக்கு ஒன்றுதான் இனி மனித குலத்தை அழிவிலிருந்து காக்க முடியும். பழைய விரோதங்களை மறந்து, இன்றைய தேவைகளைப் பரஸ்பரம் விசாரித்தறிந்து சமரசப் பாதைகளைத் தேர்ந்தெடுத்தாக வேண்டும். இல்லாவிட்டால் அணு ஆயுதங்களுக்கும் இரசாயன உயிரியல் ஆயுதங்களுக்கும் உலகைக் காவு கொடுத்து விடுவோம். நமக்கு நாமே அழிவைத் தேடிக்கொள்வதோடு வருகின்ற தலைமுறையினரின் நல்வாழ்வையும் பறித்து நாசமாக்கியவர்களாவோம்.

ஆஃப்கான் தாக்குதலை விரைவில் நிறுத்தி, அமெரிக்கா உலக அமைதிக்கு முதல் அடியை எடுத்து வைக்கட்டும். ○

# வர்த்தமானன் பதிப்பகம் வழங்கும் காந்திய நூல்கள்

**ரூ.200 மதிப்புள்ள இந்நூல்கள் ரூ.150 மட்டுமே !**

# மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்

தமிழ்த் தென்றல் **திரு.வி.க** - ரூ. 100



காந்தியடிகள் வரலாற்றைக் கூறுவதன்று இந்நூல். இஃது அவர் வரலாற்றிலுள்ள நுட்பங்கள் மனித வாழ்க்கையோடு இயைந்து நிற்கும் முறையினை உணர்த்துவது.

இந்நூல் மூன்று பகுதிகளைக் கொண்டது. முதற் பகுதியில் மனிதன் யார் என்பதும், இரண்டாம் பகுதியில் வாழ்க்கையில் புறத்தூய்மைக்கும், அகத்தூய்மைக்கும் உரிய முறைகளும், வாழ்வின் முடிந்த நிலை என்ன? என்பதும், அந்நிலை பெற்ற சில சத்தியாக்கிரகிகளின் வரலாறுகளும் சொல்லப்பட்டிருக் கின்றன. மூன்றாம் பகுதியில் காந்தியடிகளின் பிறப்பு, வளர்ப்பு, கல்வி, தியாகம், உண்மை, தொண்டு, அறம், அன்பு ஆகியவற்றிலிருந்து காந்தியம் விரிவாக விளக்கப்பட்டிருக்கிறது.

'காந்தியம் மனித வாழ்க்கைக்கோர் இலக்கியமாக விளங்குவது. காந்தியத்தில் வாழ்க்கையின் நோக்கு இருக்கின் றது. இவற்றை தெரிந்துகொள்ள வேண்டுவது மக்களின் முதற் கடமை' என்று கூறுகிறார் தமிழ்த் தென்றல் திரு.வி.க அவர்கள்.

"என்னுடைய நூல்களில் முதன் முதலில் படிக்கத்தக்கது மனித வாழ்க்கையும் காந்தியடிகளும் என்பது தான்" என்கிறார் நூலாசிரியர் தமிழ்த் தென்றல் திரு.வி.க அவர்கள்.

திரு.வி.க அவர்களின் எழுத்தாற்றலை வெளியுலகுக்குக் காட்டிய முதல் நூல் என்ற பெருமையினையும் பெற்றது இந்நூல்.

# வாழ்விக்க வந்த காந்தி



**ரொமெய்ன் ரோலந்து** . தமிழில் : **ஜெயகாந்தன்** - ரூ. 40

அன்பு, லட்சியபிடிப்பு, தியாகம் ஆகிய மும்முனைச் சக்தி களைக் கொண்ட சத்தியாக்கிரஹம் என்னும் ஒப்பற்ற கருவியை அரசியல் வெற்றிக்குப் பயன்படுத்தி இமாலய சாதனை புரிந்த பான்மையை "வாழ்விக்க வந்த காந்தி" விளக்குகிறது.

தீரமும், சகிப்புத்தன்மையும், வைரம் பாய்ந்துள்ள திட சித்தமுமே அஹிம்சை என்னும் ஆயுதம் ஆகும். அஹிம்சை என்னும் ஆயுதத்தை மகாத்மா பயன்படுத்தி வெற்றி கண்ட விதத்தை ஆராய்வதே "வாழ்விக்க வந்த காந்தி"

நமது மகாத்மாவையும், அவரது சத்தியத் தேடலையும், அவரைப்பற்றிய மகாகவி தாகூரின் விரிவான உள்ள உணர்வு களையும் நம் உள்ளம் தெளிவுற உரைக்கும் வாழ்விக்க வந்த காந்தி என்னும் இந்நூலினை எழுதியவர் பிரான்ஸ் நாட்டு தத்துவ ஞானியும், நோபல் பரிசு பெற்ற இலக்கியவாதியான ரொமெய்ன் ரோலந்து அவர்கள்.

தன் உள்ளத்தைக் கவர்ந்த இவ்வரிய நூலினைத் தமிழில் மொழி பெயர்த்து வழங்கியிருப் பவர் பிறவி எழுத்தாளரும், நவீன இலக்கியச் சிற்பியும், சாகித்திய அகடெமி விருதும், தமிழ்ப்பல்கலைக்கழகத்தின் இராஜராஜன் விருதும் பெற்றவரான ஜெயகாந்தன் அவர்கள்.

# கீதைப்பேருரை

**கீதா போதகர் நா. கிரிதாரி பிரசாத் - ரூ. 60**




இந்து சமயத்தில் எத்தனையோ சாத்திரங்கள் உள்ளன. அவை எல்லாவற்றுக்கும் அடிப்படை வேதங்கள். இவ்வேதங்களின் சாரத்தினை எடுத்துச் சொல்லுபவை உபநிஷதங்கள். உபநிஷதங்களில் இருக்கும் கருத்துக்களைச் சுருக்கமாகவும், விளக்கமாகவும் சொல்லுவதுதான் கீதை.

கீதை ஆபத்திற்கு உதவும் அருமருந்து. இந்த உலகில் வாழும்போதே மோட்ச சாம்ராஜ்ய இன்பத்தை அனுபவிப் பதற்கு வழிகாட்டும் ஓர் அரிய நூல்.

★ கீதையே வேதத்தின் சாரம் என்று கூறுகிறார் பகவான் சங்கரர்.
★ கீதை பாபத்தைப் போக்கும் சஞ்சீவி என்கிறார் இராமானுஜர்.
★ சோகமும் யோகமும் தியாகத்தின் அடிப்படையில் தான் அமைய வேண்டும் என்கிறார் பகவான் இராமகிருஷ்ணர்.
★ தாம் துறவு பூண்ட பின்பும் செல்லும் இடங்களுக்கெல்லாம் கீதை நூலினை உடன் எடுத்துச் சென்றதாகக் கூறுகிறார் சுவாமி விவேகானந்தர்.
★ கடமையைக் காட்டும் நூல் என்கிறார் லோகமான்ய திலகர்.
★ பக்தியின் உருவமே இந்த நூல் என்கிறார் மகாத்மா காந்தி.
★ சோகத்தை நீக்கிக்கடமையைச் சொல்ல வந்த நூலே கீதை என்கிறார் அரவிந்தர்.
★ பற்றின்றிப் பணி செய்வதே பரமனுக்கு உகந்த நெறி என்கிறார் வினோபா.

இந்நூலின் இரண்டாம் பதிப்பினை தம் இராமலிங்கர் பணிமன்றம் மூலமாக வெளியிட்ட
**அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம்** அவர்கள் வழங்கிய அணிந்துரையிலிருந்து சில பகுதிகள் :

நம் முன்னோர்களில் மகா ஞானிகளும், குணசீலர்களுமான முனிவர்கள் கண்ட ஆன்மீக உண்மைகளைத் தற்காலத்து மக்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்ற நோக்கில் அமைக்கப்பட்டது தான் திரு. கிரிதாரிபிரசாத்தின் கீதைப் பேருரை என்னும் இந்நூல்.

மதமும், அறநெறிக் கருத்துகளும் மனிதனை மனிதனாக வாழும்படி செய்வதற்கே தோன்றியவை. அவனுக்கு மறு வாழ்வு அளிக்கும் ஆற்றல் உடையவை. அவனது சுயநல எண்ணங்களை அழிக்கக்கூடியவை. உலக நல்வாழ்வுக்காக ஒவ்வொருவரையும் வாழும்படி தூண்டக் கூடியவை என்று கீதை வலியுறுத்தி இருப்பதைத் திரு. கிரிதாரி பிரசாத் அசைக்க முடியாத ஆதாரங்களுடன் இந்நூலில் எடுத்துக் காட்டியுள்ளார்.

மிகப் பெரிய தத்துவங்களை எல்லாம் மிக எளிதாக நம்முடைய வாழ்க்கையில் நடைபெறும் நடைமுறைச் சம்பவங்களைக் கொண்டே விளக்கி இருக்கிறார் திரு. கிரிதாரி பிரசாத் அவர்கள். இதுவே இந்நூலின் தனிச்சிறப்பு.

நாற்பது ஆண்டுகளாக, பல்வேறு மேடைகளில் திரு. கிரிதாரி பிரசாத் அவர்கள் ஆற்றிய கீதை உரை தான் உன்னதமான "கீதைப்பேருரை" என்னும் நூலாக வெளி வருகிறது.

---

**இவற்றைத் தபால் மூலம் பெற :** கடிதம் எழுதுக. மூன்று நூல்களையும் V.P.P. யில் அனுப்புகிறோம். சலுகை விலை ரூ. 150, தபால் + கட்டுச் செலவு ரூ.20 சேர்த்து ரூ 170 மட்டும் தபால்காரரிடம் கொடுத்துப் பார்சலைப் பெற்றுக் கொள்க. **நேரில் பெற :** எமது புதிய விற்பனை நிலையத்தில் ரூ.150 மட்டும் செலுத்தி மூன்று நூல்களையும் உடனே பெற்றுக்கொள்ளலாம்.

**இச் சலுகை 5.11.2001 வரை மட்டுமே !**

*கடிதம் எழுத வேண்டிய எமது புதிய விற்பனை நிலைய முகவரி*

**வர்த்தமானன் பதிப்பகம்**
15, சரோஜினி தெரு, தியாகராயநகர், சென்னை - 17. ✆ 4350561
(உஸ்மான் சாலையில் உள்ள கீதாஞ்சலி ஓட்டல் அருகில்)
காலை 10 மணி முதல் இரவு 8 மணி வரை; இடைவேளையின்றி. ஞாயிறு விடுமுறை.




'வீச்சரிவாள், வேல் கம்பு, பஞ்சாயத்து ஆலமரம், பண்ணையார், பங்காளிச்சண்டை இப்படி மசாலா மண்வாசனையோடு ஒரு படத்தையும் காணோமே? நெசமாலுமே நம்ம டைரக்டருங்க திருந்திப்புட்டாங்களோ' என எண்ணினால், 'ஸாரி, மனசை மாத்திக்குங்க' என்பதைப் போல வந்திருக்கிறது மிட்டா மிராசு.

அண்ணன் நெப்போலியனுக்கு ஊர் மக்கள்தரும் அமோக மரியாதையைக் கண்டு பொறாமையில் புழுங்குகிறார் தம்பி அலெக்ஸ். அண்ணனைப் பழி வாங்கியது போதாதென்று, அடுத்த தலைமுறை வரை காத்திருந்து அண்ணன் மகன்களையும் பழி வாங்கத் துடிக்கும் பங்காளிப் பகைதான் கதை (வாரே வாவ்! எத்தனை - புதிய கதை!)

நில உச்ச வரம்பை மதித்து, உபரி நிலங்களை, உழைத்த விவசாயிகளுக்கே கொடுக்கும் இதயமுள்ள நிலச்சுவான்தாராக நெஞ்சில் நிற்கிறார் நெப்போலியன் (தப்பிச்சுட்டீங்க, வில்லிவாக்கம் எம்.எல்.ஏ!)

'பிரம்மாண்ட' தோற்றத்துடன் வரும் பிரபுவின் நடிப்பில் மிடுக்கு குறையவில்லை (உடம்பைக் குறைக்க முடியுமா பாருங்க!)

அய்யோ! முகத்தில் அம்மைத் தழும்புகள் மிரட்ட, தடித்த உதடுகள் துடிக்க, பெருத்த வயிறு குலுங்க, தீப்பிடிக்கும் நெருப்புக் கண்களோடு கிராமத்து அய்யனார் சிலை மாதிரி மிரட்டுகிறார் வில்லன் அலெக்ஸ்!

இவர் போதாதென்று வடக்கேயிருந்து வந்திருக்கும் சத்தியப் பிரகாஷ் இன்னொரு வில்லன். சிங்கமுத்து என்ற தனது பெயரை ஓர் ஏழைச் சிறுவனுக்கு வைத்திருப்பதை அறிந்து, அந்தச் சிறுவனின் காலை முறித்து 'நொண்டிமுத்து' ஆக்குகிறார். (ஆஹா! என்ன ஒரு கேரக்டர் எஸ்டாபிளிஷ்மெண்ட்!)

ஆச்சர்யம்! ரோஜா, மும்தாஜ் இருவரையும் டூயட்டோடு அனுப்பி விடப் போகிறார்கள் என்று எண்ணிக் கொண்டிருந்தால் நெஜமாலுமே நடிக்கவும் வாய்ப்புக் கொடுத்திருக்காங்க. (டைரக்டர் பெருந்தன்மையை எப்படிப் பாராட்டுறது?)

ஊர்ப் பஞ்சாயத்தில் மகனின் கையை வெட்டும் வில்லன் அலெக்ஸை எந்தப் போலீசும் பிடிக்கவில்லையே! (எல்லோரும் எலெக்ஷன் - ட்யூட்டி பார்க்கப் போயிட்டாங்க போலிருக்கு!)

அதென்னங்க இயக்குனரே, மரணப்படுக்கையில் இருக்கிற வில்லன் துள்ளியெழுந்து பிரபுவைத் தீர்த்துக்கட்ட அதிரடி முயற்சி பண்றார்?! (படத்தில் நகைச்சுவை மிகக் குறைவாக இருப்பதால் இந்தக் காட்சியோ?)

இது போன்ற படங்களில் இசையாவது ஒத்தடம் கொடுக்கும். ஆனால் அஸ்லாம் முஸ்தாபாவின் ட்யூன்களில் ஒன்றுகூடத் தேறவில்லை. (அதனால்தான் பின்னணி இசையை சங்கீத ராஜன்கிட்ட கொடுத்திட்டீங்களா?)

இயக்குனருக்குத் திரைக்கதை அறிவு இருக்குங்கிறதை ஒத்துக்கலாம். அடுத்தமுறை அதைப் புதுக் கதையில் அவர் பிரயோகிக்க முயற்சி செய்வது நல்லது.

— விஷ்வல்தாசன்

• ஆவரேஜ்

வட்டமேஜை

✉ 'பிரசாத மகிமை' பற்றிய தகவல்கள் முக்கனியாய் இனித்தன.
கிருஷ்ணகிரி,
ஆர்.மாதவராமன்

✉ 'மணக்க மணக்க'



இருந்த 'உணவு ஸ்பெஷல்' மாறுபட்ட, மிக ருசியான படைப்பு. பாராட்டு.
சென்னை, இந்திராராணி

✉ 'பஞ்சுமிட்டாய்' சிறுகதை அருமை. 'ரங்கு' பாத்திரப்படைப்பு மனத்தில் நின்றது.
போடி,
எஸ்.எம்.பாலசுப்பிரமணியம்,

✉ மதுரை, தெப்பக்குளத்தில் திருநீர் பிள்ளையார் அமர்ந்து இருப்பது வடபுறத்தில் என்ற தகவல் தவறானது. தெப்பக்குளத்தின் தெற்கு பக்கம், தென்மேற்கு மூலையில் அமர்ந்து இருக்கின்றார்.
மதுரை, முருகேசன்

✉ கல்கி 'உணவு ஸ்பெஷல்' மொத்தத்தில் வடை, பாயசம், முப்பழமும் அப்பளமுடன் ஹெவி விருந்து உண்டதுபோல தெம்பாக இருந்தது!
திருவண்ணாமலை, எல்.எம்.மங்கை

✉ 'உடுப்பி ஹோட்டல் டபரா டம்ளர்' கவிதையை 'அச்சிட்டு மகிழ்வோம் என்றால் அய்யகோ! அங்கும் அரசியல்வாதியின் அச்சகம்' என்று முடித்திருந்தால் இன்னும் சுவையாக இருந்திருக்கும்.
திருநெல்வேலி, எம்.வெங்கடேஸ்வரன்

✉'திருக்கண்ணபுரம் முனியோரை' என்று உணவு ஸ்பெஷல் இதழில் குறிப்பிடப்பட்டுள்ளது. முனையதரயன் என்ற பக்தர் தினந்தோறும் பொங்கல் செய்து சமர்ப்பித்து வந்ததை நினைவுறுத்தும் விதமாக தினமும் அர்த்த ஜாமத்தில் இன்றும் திருக்கண்ணபுரத்தில் ஸ்ரீசௌரிப் பெருமாள் அமுது செய்கிறார். முனையதரயன் பொங்கல் என்பது மருவி, தற்போது முனியோதரம் பொங்கல் என்று வழங்கப்படுகிறது.
திருவரங்கம், ராஜகோபாலன்

✉ 'அரசியல் பூகம்பம்' தலையங்கம் மூலம் - தற்போதைய அரசியல் நிலைமையைப் புட்டுப் புட்டு வைத்து விட்டீர்கள். ஆனால் கிட்டத்தட்ட 45 சதவீத வாக்காளர்கள், வாக்குச் சாவடி பக்கமே போகாததுகூட மேற்கூறிய நிலைமைக்கு ஒரு காரணம் என்பதையும் ஒப்புக்கொள்கிறீர்களா?
விழுப்புரம், ஆர். ராஜகோபால்

✉ 'கடுகு' சமாசாரத்தை இவ்வளவு பெரிதுபடுத்துவீர்களென்று, அதுவும் முதல் பக்கத்திலேயே என்று நான் கொஞ்சம்கூட எதிர்பார்க்கவேயில்லை.
மதுரை, எஸ். ராமையா

✉ இதயநோயும் சர்க்கரை வியாதியும் சேர்ந்து ஜாகல் பந்தி பண்ணும் என் உடம்பை, விதவிதமான கோயில் பிரசாத மெனுக்கள் கொடுத்து, மருத்துவ செலவை எகிற வைத்துவிட்டீர்கள். நீங்கள் குறிப்பிட்ட அத்தனை கோவில்களிலும் எல்லா பிரசாதத்தையும் ஒரு காலகட்டத்தில் ஒலிம்பிக் விளையாடிய என் நாக்கு 'அந்த நாள் ஞாபகம் நெஞ்சிலே வந்ததே' என்று பாடியது.
பெங்களூர், கே. ராஜகோபால்

✉ உள்ளாட்சி தேர்தல் ரேஸில், குதிரை முன்னேயும், ஜாக்கிகள் பின் பக்கமும் செல்ல முயல்வதாக காங் - ஜன நாயக காங்.ஐச் சித்தரித்திருந்த கார்ட்டூன் சூப்பர் சிரிப்பை வரவழைத்தது!
பொன்மலை, ஆர். பிரகாஷ்

முப்பழமும் அப்பளமும்!

## ஷாம் Vs சுமி

## ஷாம் Vs சக்கரம்

கதாநாயகன் பஞ்சத்தில் தடுமாறிக் கொண்டிருக்கும் தமிழ் சினிமாவிற்கு சமீபத்திய வரவு ஷாம். அந்த அழகிய ராக்ஷசனை 'இரண்டு டிராக்குகளில்' பேட்டியெடுத்து இந்திய இதழியல் துறையில் 12B முத்திரை பதிக்கப் புறப்பட்டார்கள் சக்கரமும், சுமியும்.

(கவனிக்க : பேட்டியின் தொடக்கம் எது முடிவு எது என்று புரியவில்லையெனில் அதற்கு கல்கி பொறுப்பல்ல. வாசகர் தமது சொந்த ரிஸ்கில் பேட்டியை வாசிக்கும்படி அறிவுறுத்தப்படுகிறார்கள்.)

**சக்கரம் :** ஹலோ ஷாம்... முதல் படம் மாதிரியே தெரியவில்லை! ரொம்ப நல்லா நடிச்சிருந்தீங்க. வாழ்த்துக்கள்! உங்ககிட்டே கடைசியா ஒரு கேள்வி 12Bக்குப் பிறகு பட வாய்ப்பு எப்படி?

**ஷாம் :** என்ன சார், இப்போதான் வந்தீங்க. முதல் கேள்வியே எப்படி கடைசி கேள்வியாக ஆகும்? (ஷாம் சக்கரத்தின் முகத்தைக் கொஞ்சம் குழப்பமாகப் பார்த்தபடி கேட்கிறார்.)

**சக்கரம் :** அது அப்படித்தான் சார்.. விருப்பம் இருந்தா பதில் சொல்லுங்க. இல்லேன்னா விட்டுடுங்க. நான் மெக்கானிக் ஷாம்கிட்டே கேட்டுக்கிறேன். உங்களைப் பார்த்தா அந்த பேங்க் மேனேஜர் ஷாம் மாதிரி தெரியுது.

**ஷாம் :** சார்... சார் என்ன சார்? இப்படி கோவிச்சுக்கிறீங்க. ப்ரியதர்ஷன், கே. பாலச்சந்தர், வசந்த், சரண் இந்த நான்கு டாப் டைரக்டர்ஸ் படங்களில் புக் ஆகியிருக்கேன்.

**சுமி :** அப்போ ஷாம் சகாப்தம் ஸ்டார்ட் ஆயிடுச்சி இல்லியா?

**ஷாம் :** (திடீரென்று சுமி அங்கே என்ட்ரி கொடுத்ததும் ஷாம் கொஞ்சம் பயந்து போய்) ஆ.. ஆ.. ஐயோ! சுமியா? நீங்க ஒரு கற்பனை காரெக்டரனுல்ல நினைச்சேன்! என் கண்ணை என்னாலே நம்ப முடியலை!

**சுமி :** சினிமாலதான் நம்ப முடியாத சிசுவேஷன்ஸ்"ம் காரெக்டர்ஸ்"ம் வரலாமா...? ரியல் லைஃப் அதைவிட அன்பிலீவபிள் மிஸ்டர் ஷாம்! பட் பிலீவ் மீ, 12Bல அப்படியெல்லாம் பீலா விடாம ரொம்ப ரியலிஸ்டிக்கா கதை சொல்லிருக்கீங்க - காங்கிராட்ஸ்!

**ஷாம் :** தாங்க்ஸ்!

**சுமி :** அதிருக்கட்டும். என் கேள்விக்குப் பதில் எங்கே..?





**ஷாம் :** கடவுளே, கேள்வி எங்கே கேட்டீங்க? மேடம்! ஷாம் சகாப்தம் தொடங்கிடுச்சுன்னு காம்ப்ளிமெண்ட்தானே கொடுத்தீங்க.

**சுமி :** பஸ்ஸை மிஸ் பண்ற சீனை டைரக்டர் ஜீவா ரீவைண்ட் பண்ணி உங்களை மறுபடியும் 12Bலே ஏத்தி விடுறார் இல்லையா, அதுமாதிரி ரீவைண்ட் பண்ணிப்

# ஷாமுடன் நேரடி ட்ராக் பேட்டி!

பாருங்க. நான் கேட்டது கேள்விதான்னு தெரியும்.

**ஷாம் :** ஓ.. ஆமா.. ஆமா.. ஷாம் சகாப்தம் தொடங்கிடுச்ச இல்லியான்னு கேள்விதான் கேட்டீங்க. இதுக்கு நான் என்ன பதில் சொல்லணும்?

(சக்கரம் குறுக்கிட்டு)

**சக்கரம் :** தொடங்கிடுச்சன்னு சொல்லலாம். ஏன்னா, அவர் கையிலே இப்போ நாலு படம் இருக்கே... (ஷாம் ஸ்டைலாக 'எஸ்' என்று தலையை ஆட்டுகிறார்)

**சக்கரம் :** முதல் படத்திலேயே சிம்ரன், ஜோதிகா, விவேக், சுனில் ஷெட்டின்னு நடிப்பில் நங்கூரம்



பாய்ச்சிய ஆட்களோடு நடிச்சீங் களே... படப்பிடிப்பில் உங்களை இஷ்டத்திற்கு ஓட்டினார்களா?

**ஷாம் :** அதான் இல்லை! "நீங்க இன்னக்கி நடிக்க வந்திருக்குறீங்க. நான் நாலு வருஷத்துக்கு முன்னால் நடிக்க வந்தேன். அவ்வளவுதான் வேறுபாடு" என்று சிம்ரன் தைரியம் கொடுத்தார். "அறிமுக நடிகனுக்கு என்னவெல்லாம் பிரச்னைகள் வரும். அதை எப்படிச் சமாளிக் கலாம்" என்று ஜோதிகா சொல்லிக் கொடுத்தார். குறிப்பாக இயக்குனர் ஜீவா, "நீ புதிய ஆள் மாதிரித் தெரி யக் கூடாது. நானும் உன்னைப் புதிய ஆள்

மாதிரி நடத்தமாட்டேன்'' என்று தொழில் நுட்ப விஷயங்களைக் கூடச் சொல்லிக் கொடுத்த குரு அவர். (ஷாம் நெக்குருக.)

**சுமி :** ஓகே. ஓகே. ஷாம் உங்க கண் கலங்கியிருக்கு. சினிமாவிலே கண்ணீருக்கு வேல்யூ அதிகம். அதனால ஸ்டாக் வைங்க. இல்லேன்னா 'கண்ணீர் மிச்சம் இல்லையேன்னு' பாட்டெழுதிடுவாங்க. 12B-யில் நடிச்சப்போ ரொம்பத் திரில்லிங் எக்ஸ்பீரியன்ஸ் ஏதாவது உண்டா?

**ஷாம் :** இரண்டு மணி நேரம் மெக்கானிக் ஷக்தியாக நடிச்சுக்கிட்டு இருப்பேன். அப்போ திடீர்னு டைரக்டர் வந்து, "இப்போ ஷக்தி நம்பர் டூ! பாங்க் மானேஜர் ஷாட்டுக்கு ரெடியா இரு''ன்னு சொல்லுவார். அடுத்த நிமிஷம் கெட்-அப், பீலிங்ஸ், பாடிலாங்குவேஜ் எல்லாத்தையும் அப்படியே மாற்றி நடிக்கணும். இது எவ்ளோ பெரிய த்ரில்!

**சக்கரம் :** எல்லா ஹீரோக்களையும் போல கடைசியில் நீங்களும் ஆக்ஷன் பக்கம் போய் வன்முறையை ஒழிக்கிற பணியிலே உங்களை இணைச்சுடுவீங்க அப்படித் தானே?

---

**''நான் பெண் பார்க்கப் போனபோது பொண்ணு என்னை சமைக்க தெரியுமானு கேட்டுட்டா. ரொம்ப டென்ஷனாகி திட்டிட்டேன்.''**

**''ஏன்?''**

**''என்னைப் போய் சந்தேகப்பட்டுட்டாளேன்னுதான்!''**

**- பா. ஜெயக்குமார்**



**ஷாம் :** நிச்சயமா இல்லை! இப்போ எனக்கு இருபத்தஞ்சு வயசு. இன்னும் இரண்டு வருஷத்துக்கு லவ், ரொமான்ஸ், காதல் தோல்வி இப்படி சாப்டான ரோல்ஸ் செய்யலாம்னு இருக்கேன். இன்னும் கொஞ்சம் முகத்துலே மெச்சூரிடி வந்ததும் ஆக்ஷன்தான்னு இல்லே என்ன கேரக்டர் கொடுத்தாலும் செய்வேன்.

**சுமி :** ஷாம்! வெளியே போகும்போது ரசிகர்கள், உங்களை ரெகக்னைஸ் பண்றாங்களா?

**ஷாம் :** என்ன இப்படி கேட்டுட்டீங்க? கேர்ள்ஸ்தான் பக்குன்னு நெருப்பு மாதிரி பிடிச்சிக்கிறாங்க. 'ஏய்.. ஏய்.. 12B ஹீரோடி'னு கை காட்டறாங்க. ஆட்டோகிராப் கேட்டு அன்புத் தொல்லை கொடுக்கிறாங்க.

**சக்கரம் :** அது போகட்டும் சார் (கொஞ்சம் பொறாமையோடு) சினிமா ஆசை எப்போ வந்ததுன்னு சொல்லுங்க?

**ஷாம் :** சின்ன வயசுலேருந்து சினிமா பார்க்கப் பிடிக்கும். தமிழ் தெரியாத கன்னட நண்பர்களை அழைத்துக் கொண்டுபோய் ரஜினி படத்தை முதல் நாள், முதல் ஷோ பார்ப்பேன். கமல் சாரின் நடிப்பை இமிடேட் செய்து காட்டி கை தட்டல் வாங்குவேன். அப்போதெல்லாம் தீவிரமான சினிமா லட்சியமெல்லாம் இடையாது. பீகாம் பஸ்ட் இயர் படிச்சிட்டிருந்தப்போ, ஒரு நாள் கல்லூரியிலேருந்து வீட்டுக்கு வந்துட்டு இருந்தேன். அது பெங்களூர் பிரிகேட் சாலை. எதிர்லே வந்த கார் ஒண்ணு, என் பக்கத்துலே வந்து நின்னுது. அதிலிருந்து ஒரு டை கட்டின ஆசாமி இறங்கி வந்தார். "நான் ரெடிமேட் டிரஸ் உற்பத்தி செய்றேன். என் சட்டைக்கு விளம் பர மாடலா நடிக்க முடியுமா''ன்னு கேட் டார். உடனே ஓடிப் போய் கண்ணாடியில் ரொம்ப நேரம் என் முகத்தைப் பார்த்தேன். மெக்ஸிகோ மாட்டுப் பண்ணையில் குதிரை மீது அமர்ந்து கொண்டு மாடு மேய்க்கிற மீசையில்லாத கௌபாய் மாதிரி தெரிஞ்சது.

**சுமி :** அதனாலதான் மில்க் பவுடர் விளம்பரத்துலே நடிக்கக் கூப்பிட்டாங்களா?

**ஷாம் :** இல்லே. இரண்டு வருஷம் சீரியஸ் மாடலிங்லே இறங்கிட்டேன். ஒரு ஐம்பது ஃபேஷன் ஷோக்களில் நடந்திருக்

கேன். ஸ்டேஜ் ஃபியர் போய், பாடிலாங் வேஜ் வந்தது அங்கேதான்.

**சக்கரம் :** அப்புறம், எப்படித்தான் சார் 12B வாய்ப்புக் கிடைச்சது?

**ஷாம் :** அதுவும் 12B மாதிரி ஒரு வினோதமான கதை. எனக்கு முதல் மாடலிங் வாய்ப்பு கிடைச்ச அதே பெங் களூர் பிரிகேட் சாலையில் ஆனந்தமூர்த் தின்னு ஒரு நண்பரைச் சந்தித்தேன். அவர் என்னோட நண்பனுக்கு நண்பர். முதல் சந் திப்பிலேயே 'நீங்க நடிக்க டிரை பண்ண லாமே. லீவு கிடைக்கும் போது எங்கூட சென்னைக்கு வாங்க. எனக்குத் தெரிஞ்ச சினிமா பிரபலங்களை அறிமுகப்படுத் தறேன்'னு சொல்லிட்டுப் போய்விட்டார். அப்புறம்தான் தெரிஞ்சது. அவர் இயக்குனர் கதிர் சாரின் அசிஸ்டெண்டுன்னு. அவர் சொன்ன மாதிரி பி.சி.ஸ்ரீராம், கதிர், சரண் என்று நிறைய பேர் அறிமுகம் கிடைச்சது. சரணும், அவரது உதவியாளர்கள் பால முரு கன், ஹரி, கண்மணின்னு நிறைய நம்பிக்கை கொடுத்தாங்க. மாடல் கோ-ஆர்டினேட்டர் பிஜூ ஜெயதேவன்தான் டைரக்டர் ஜீவா வின் தொலைபேசி எண் கொடுத்தார். அவருகிட்டே பேசின அடுத்த பத்தாவது நிமிடம், 'ஆட்டோ பிடிச்சு உடனே வா பார்க்கணும்'ன்னார்.

மறுநாள் தயாரிப்பாளர்கிட்டே அறி முகப்படுத்தி இந்தப் பையனை முயற்சி பண்ணலாம்னு இருக்கேன் என்றார். அப்போ கூட நமக்கு ஏதோ ஒரு ரோல்னு நினைச்சேன். ஜோதிகாகூட 'பூவே வாய் பேசும்' பாடலை ஷூட் பண்ணினதும்தான் 'ஆஹா நாம ஹீரோதான்'னு நம்பிக்கை வந் துச்சி. தங்கைக்கு போன் செய்து சொன் னப்போ 'என்ன ரீல் விடறியா'ன்னா... இப்போ நிஜமா நான் ஒரு ஹீரோ!

**சக்கரம் :** இப்போ ரொம்ப ஆச்சர்யப் படுற விஷயம் ஏதாவது இருக்கா?

**ஷாம் :** ஆமா, 12B பஸ் தினசரி ஒரு முறையாவது என் கண்ணிலே பட்டுடுது.

**சுமி :** நல்ல டச்.. மிஸ்டர் ஷாம், அப்போ பேட்டியைத் தொடங்கலாமா?

**ஷாம் :** கடவுளே! அப்போ இதுவரைக் கும் பேசினது?




# கல்கி-




## B. M. SILK SAREES

### இணைந்து வழங்கும்

## பட்டுப் புடவை

## பரிசுப் போட்டி – 12

**'வை**ரம்' சம்பந்தப்பட்ட புதுக் கவிதை ஒன்றை, 8 வரிக்குள் எழுதி அனுப்புங்கள். தரமான கவிதைக்கு முதல் பரிசாக ரூ. **2500/-** மதிப்புள்ள பட்டுப் புடவை பரிசு. ஆறுதல் பரிசாக நான்கு பேருக்கு கல்கி புத்தகங்கள் வழங்கப்படும். கவிதை வந்து சேர வேண்டிய கடைசி தேதி **29.10.01.** உறையின் மேல் 'பட்டுப் புடவை பரிசுப் போட்டி-12' என்று குறிப்பிடவும். கூப்பன் இணைக்கவும். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

**பட்டுப் புடவை பரிசுப் போட்டி – 12**

**வைரக் கவிதை**

என் பெயர் : ..........................................

முகவரி : ..........................................

..........................................

..........................................

..........................................

# ஸ்ரீ தேவியின் பேரருளைப் பெற நவராத்திரியில்

| நாள் | ஒன்பது பொருட்களைக் கொண்டு | ஒன்பது விதமான கோலங்கள் போட வேண்டும் | சுமங்கலிகளுக்கும் கன்னி பெண்களுக்கும் தீராடக் கொடுக்க வேண்டும் | | சக்தியுள்ளவர்கள் பெண்களை வீட்டுக்கு அழைத்து நவரத்தினம் கொடுக்கலாம் | வசதியற்றவர்கள் இவைகளைக் கொடுக்கலாம். |
|---|---|---|---|---|---|---|
| 1. | அரிசிமா | பொட்டு | பச்சிலை | எண்ணெய் | பொன் | சோழி |
| 2. | கோதுமைமா | கட்டம் | பூலாங்கிழங்கு | மஞ்சள் | வெள்ளி | குன்றிமனி |
| 3. | முத்து | மலர் | சண்பக மொட்டு | குங்குமம் | முத்து | தட்டைப் பவளம் |
| 4. | அட்சதை | படிக்கட்டு | கஸ்தூரி மஞ்சள் | பன்னீர் | பவளம் | கிளிஞ்சல் |
| 5. | கடலை | பறவையினம் | திரவியப்பட்டை | சந்தனம் | வைடூரியம் | செப்பு |
| 6. | பருப்பு | தேவிநாமம் | காசுக்கட்டி | வாசனைத் தைலம் | கோமேதகம் | பதுமை |
| 7. | மலர் | திட்டாணி | லாக்ஷாரஸம் | நலங்கு மஞ்சள் | புஷ்பராகம் | அம்மானை |
| 8. | காசு | பத்மம் | கஸ்தூரிகா பத்ரம் | மருதோன்றி | மரகதம் | பந்து |
| 9. | கற்பூரம் | ஆயுதம் | கோரோஜனம் | புஷ்பநீர் | வைரம் | கழற்சிக்காய் |

# செய்ய வேண்டிய சில அனுஷ்டானங்கள்

| வீடு தேடி வரும் குமரிகளுக்கும், சுமங்கலிகளுக்கும், பக்தியுடன் தன் கையால் பொட்டு இடலாம். | தினசரி காலை, மாலை கீழ்க்கண்ட ராகங்களில் ஸ்ரீ தேவி சம்பந்தமாக பாடலாம். | கீழ்க்கண்ட வாத்தியப் பின்னணிகளுடன் பாடலாம். | கீழ்க்கண்ட மலர்களைக் கொண்டு மாலை அணிவிக்கலாம். | கீழ்க்கண்ட தழைகளைக் கட்டு மாலைகளாகக் கட்டி சார்த்தலாம். | பெண் குழந்தைகளுக்கு ஒவ்வொரு நாளும் இவ்விதமாகக் கொடுக்கலாம். | பாலா என்னும் பருவச் சிறுமியின் மகிழ்ச்சிக்காக | கீழ்க்கண்ட பிரசாதங்களை விநியோகிக்கலாம். |
|---|---|---|---|---|---|---|---|
| புனுகு | தோடி | மிருதங்கம் | மல்லிகை | வில்வம் | வாழை | சுண்டல் | வெண்பொங்கல் |
| ஜவ்வாது | கல்யாணி | புல்லாங்குழல் | முல்லை | துளசி | மா | வறுவல் | புளியோதரை |
| கஸ்தூரி | காம்போதி | வீணை | சம்பங்கி | மரு | பலா | துவையல் | சர்க்கரைபொங்கல் |
| அரகஜா | பைரவி | கோட்டு வாத்தியம் | ஜாதி | கதிர்ப் பச்சை | கொய்யா | பொரியல் | கதம்பம் |
| சந்தானம் | பந்துவராளி | ஜல்லரி | பாரிஜாதம் | விபூதிப் பச்சை | மாதுளை | அப்பளம் | ததியோதனம் |
| குங்குமம் | நீலாம்பரி | பேரி | செம்பருத்தி | சந்தன இலை | நாரத்தை | வடகம் | தேங்காய்சாதம் |
| சாந்து | பிலஹரி | படகம் | தாழம்பூ | தும்பை இலை | பேரிச்சை | சூரணம் | எலுமிச்சம் பழம் சாதம் |
| ஸ்ரீசூர்ணம் | புன்னாக வராளி | கும்மி | ரோஜா | பன்னீர் இலை | திராட்சை | முறுக்கு | பாய ஸான்னம் |
| மை | வஸந்தா | கோலட்டம் | தாமரை | மருக் கொழுந்து | நாவல் | திரட்டுப் பால் | அக்காரஅடிசில் |

விநியோகிக்கவும்.

கத்தரி, ஜாங்கிரி, லட்டு, மைசூர்பாகு, சாக்லட் கேக், சோன் பப்டி, பாதுஷா, சம்சம் சம்பாக்ஙளி, கோவா சேண்டிவிச் முதலியன.

கட்டிப்பருப்பு, திரட்டுப்பால், முள்ளு தேன்குழல் முதலியன.

தொலைபேசி : 4915662, 4914213

பல்வேறு உலக நாடுகள் கலந்து கொண்ட ஜூனியர் லெவல் டேபிள் டென்னிஸ் போட்டி சமீபத்தில் சீனாவில் நடைபெற்றது. அதில் கலந்து கொண்ட இந்திய அணி வெள்ளிப் பதக்கம் பெற்றது. அணியில், சென்னையைச் சேர்ந்த சிறுமி சங்கீதாவும் இடம் பெற்றிருந்தார்.

சென்னை பத்மா சேஷாத்ரி பள்ளியில் ஒன்பதாம் வகுப்பு படிக்கும் சங்கீதா கடந்த டிசம்பரில், அனைத்திந்திய டேபிள் டென்னிஸ் சாம்பியன்ஷிப் போட்டிகள் நடைபெற்றபோது, தமிழக அணியின் சார்பில் தங்க மெடல் பெற்றார்.

அர்ஜுனா விருது பெற்றவரும், முன்னாள் தேசிய சாம்பியனுமான டேபிள் டென்னிஸ் வீரர் சந்திரசேகர் நடத்தி வரும் மெடிமிக்ஸ் டி.டி. அகடாமியில், பயிற்சி பெற்று வருகிறார் இவர். இவரது அபாரமான ஆட்டத் திறமையைப் பார்த்துவிட்டு, "உனக்கு பிரகாசமான எதிர்காலம் இருக்கிறது. விடாமல் பயிற்சி செய்!" என்று அறிவுரை சொன்னாராம் சந்திரசேகர்.

சங்கீதாவும் அவரது அக்கா சுஜாதாவும் பாட்டு கற்றுக் கொண்டு, ஒன்றாக கச்சேரி செய்து கொண்டிருந்தபோது, இடது கைப் பழக்கம் உள்ள சங்கீதாவை, ஏதாவது விளையாட்டில் கவனம் செலுத்தலாமே, என்று சில நண்பர்கள் ஆலோசனை சொல்ல, சங்கீதா, பாட்டுக்கு டாட்டா சொல்லிவிட்டு, டேபிள் டென்னிஸ் ஆட ஆரம்பித்தார். நாலே வருடங்களில், மாநில அளவில், பிராந்திய அளவில், தேசிய அளவில் முத்திரை பதிந்து, இன்று அகில் உலக அளவில்.

தினமும் காலை எட்டு மணிக்கு ஸ்கூலுக்குப் போய், நாலு மணிக்கு வீடு திரும்பினால், அடுத்து ஐந்து மணிக்கு டி.டி. கோச்சிங் ஆரம்பிக்கும். வீடு திரும்ப இரவு ஒன்பதாகி விடும். அதன்பின் ஹோம் ஒர்க் இத்யாதிகள். இரவு படுக்கப் போகும் போது நடுநிசியாகிவிடும். இப்படி வாரத்தில் ஐந்து நாட்கள் டிடி. கோச்சிங்.

"தேசிய சாம்பியனாவதுதான் என் லட்சியம்" என்கிறார் சங்கீதா.

அண்மையில் சீனா சென்று வந்த சங்கீதாவிடம், சீன அனுபவம் பற்றிக் கேட்டோம். "போட்டிக்கு முன்பு, பன்னிரண்டு நாட்கள், கடுமையான பயிற்சி. ஒரு நாளைக்கு சுமார் பத்து மணி நேரம் உடற்பயிற்சி மற்றும் டி.டி. பயிற்சி என அவர்களுடைய பயிற்சி முறைகள் புதுமையாகவும் உபயோகமாகவும் இருந்தன. உலகின் பல்வேறு நாடுகளிலிருந்தும் வந்திருந்த அணிகளுடன் பயிற்சி முகாமின் போது ஆடுவதற்கென்று, நிறைய, சீன டி.டி. பிளேயர்களைத் தயார்ப் படுத்தி வைத்திருந்தார்கள். ஆனால், போட்டியின்போது, நாங்கள் ஆடி பரிச்சயப் படாத ஒரு புது சீன அணி எங்களுடன் மோதியது. இது சீன தந்திரம் போலும்!

"சீன மற்றும் பிற நாட்டுப் பெண்களுக்கு, என் ஸ்டிக்கர் பொட்டு, வெகுவாகப் பிடித்துப் போனது. என் நெற்றியிலிருந்து, எடுத்து, தம் நெற்றியில் வைத்து அழகு பார்த்து ரசித்தார்கள். ஆளாளுக்கு இரண்டு மூன்று ஸ்டிக்கர் பொட்டுகளை வாங்கிக் கொண்டு போனார்கள்!" என்கிறார்.

# சங்கீதத்துக்கு டாடா!

சந்திப்பு : **எஸ். சந்திரமெளலி**

# ஏக்க

3

பனிச்சறுக்குச் சரிவின் உச்சியை நோக்கி 'ஸ்கி லிஃப்ட்' ஏறிக் கொண்டிருந்தது. கீழே ஆஸ்பென் ஒரு குக்கிராமம் போல் தெரிந்தது. சுற்றிலும் வெள்ளி மலைகள். பனியின் வெண்மை, கறுப்புக் கண்ணாடி வழியே கூட கண்களைக் கூசச் செய்தது.

ஆலன், அனுகாவுக்கு விவரமாய் எல்லாவற்றையும் சுட்டிக் காட்டிக் கொண்டே வந்தான். "அதோ, அதுதான் 'பட்டர்மில்க்' சரிவு. அது குத்துக்குட்டிகளுக்கு."

"நீ அங்கே இருக்க வேண்டியவன்?" சிரித்தாள் அனுகா.

ஆலனின் விளையாட்டு முறைப்பை அவனது முழுக்கறுப்பு ஸ்கி கண்ணாடி விழுங்கிக் கொண்டது. அவளது சிரித்த முகப் பிம்பங்கள் அவன் கண்ணாடி மேல் தெரிந்தன.

"அது 'ஆஸ்பென் மலை'. நம் அப்பாக்கள், அம்மாக்கள் இப்போது அங்கிருப்பார்கள். கிட்டத்தட்ட செங்குத்துச் சரிவு மாதிரி. ஒரு தரம் அசட்டுத் தைரியத்தில் நானும் போனேன். உச்சியிலிருந்து கீழே பார்த்தேன். ஒரு நொடிதான். ஸ்கி லிஃப்டில் கீழே இறங்கி வந்து விட்டேன். இப்போது நாம் போகும் 'ஸ்னோமாஸஸ்' சரிவு, நம் மாதிரி இடைப்பட்டவர்களுக்கு."

காஞ்சனா தாமோதரன்

"ஆலன், பள்ளிக்கூடத்தில் உனக்குப் பிடித்த பாடம் எது?"

ஆலன் சிரித்தான். "சமூகப் பாடம். லத்தீன் மொழி. ஆங்கில இலக்கியம். வருடா வருடம் பள்ளிக் கூடத்தில் போடுகிற நாடகக் காவியத்துக்கு இசையமைப்பதே நான்தான். ம்ம்... அப்புறம்... டென்னிஸ் ஆடுவது."

"அட! இசையமைப்பாளரா? கிபோர்ட்?"

"கிபோர்ட், பியானோ, சாக்ஸஃபோன்."

"கென்னி-ஜி, எல்ட்டன் ஜான், ரஹ்மான் ஒரே அவதாரத்தில்?"

"ஏ.ஆர்.ரஹ்மான்? ஆண்ட்ரு லாயிட் வெப்பருடன் சேர்ந்து இசையமைப்பவர் தானே? அவருடைய இந்திய இசை உன்னிடம் இருக்கிறதா, அனுகா? நம்மூர் 'ப்ளானெட் ம்யூசிக்' கடையில் அவருடைய சி.டி. தேடிப் பார்த்தேன். அகப்படவில்லை."

"என் அம்மா அவருடைய சி.டி.க்கள் நிறைய வைத்திருக்கிறான். இண்டர்நெட் மூலம் வாங்குகிறான். ஒருநாள் வீட்டுக்கு வா. ரஹ்மான் பாட்டு கேட்கலாம்."

"சரி, என்னைப் பற்றிப் பேசினது போதும். உனக்கு என்ன பிடிக்கும், அனுகா?"

"கணிதம். இலக்கியம். கம்ப்யூட்டர். டென்னிஸ். இசை."

"படிப்பு முடிந்த பின் என்ன செய்யப் போகிறாய்?"

"ம்ம்ம்ம்ம்... யு.எஸ்.ஸின் முதல் பெண் ஜனாதிபதியாகப் போகிறேன்."

"ஹே... என்னை உன் உதவி ஜனாதிபதியாகப் போடுவாயா?" ஆலன் சிரித்தான்.

"இசையமைப்பாளர் உதவி ஜனாதிபதியா? பார்க்கலாம்." அனுகாவின் சிரிப்பு மங்கியது.

"ஆலன், அந்த டெர்ரரிஸ்ட் விஷயம் நடந்த போதுதான் எனக்குப் புரிந்தது. ஒரு



# ரையில்...

ஜனாதிபதி மக்களுக்கு எவ்வளவு முக்கிய மென்று."

"அனுகா, அது நடந்த பிறகு நான் கொஞ்சம் மாறிவிட்டதாக எனக்கே தெரிகிறது. முன்பெல்லாம் டிரைவர்ஸ் லைசென்ஸ் வாங்கும் வயது எப்போது வரும், எந்தக் கார் வாங்கலாம் - இதெல்லாம்தான் பெரிதாகத் தெரியும். இராணுவத்தில் சேரும் வயது எப்போது வருமென்று நேற்றுகூட நினைத்தேன்."

"போர்தான் இதற்குச் சரியான பதிலென்று நினைக்கிறாயா?"

"தெரியாது, அனுகா. ஆனால், நானும் ஏதாவது செய்ய வேண்டுமென்ற வேகம்."

இருவரும் மௌனமானார்கள்.

ஸ்கி லிஃப்ட் கொஞ்சம் செங்குத்தாக ஏற ஆரம்பித்தது. உச்சி நெருங்கிக் கொண்டிருக்க வேண்டும். மற்றதெல்லாம் மறந்து, பாட்டு இயல்பாகப் பீறிட்டு வந்தது. அனுகா தாளம் போட்டவாறே மெல்லப் பாடினாள்.

Celebrate we will - கொண்டாடுவோம் நாம்

Because life is short but sweet for certain -

வாழ்வு குறுகியது ஆனால் நிச்சயம் இனியது என்பதால்

We are climbing two by two - இரண்டிரண்டாய் மேலேறுகிறோம்

To be sure these days continue.... இந்நாட்கள் தொடருமென உறுதிப்படுத்த...

We are climbing two by two to be sure these days continue... அனுகாவைப் பார்த்தவாறே கடைசி இரு வரிகளையும் ஆலன் திரும்பப் பாடி முடிக்கவும் ஸ்கி லிஃப்ட் உச்சியில் நிற்கவும் சரியாக இருந்தது. தன் கன்னங்களின் திடீர் வெம்மை, மலையுச்சிக் குளிரால்தான் என்று தனக்குச் சொல்லிக் கொண்டாள் அனுகா. நெஞ்சுப் படபடப்பு மலை உச்சியில் காற்றழுத்தம் மாறுவதால் தான். இல்லை; 'அசட்டுத்தனத்தால்' என்று ஒரு சிறு குரல் மனதுக்குள் சொல்லியது.

இறங்கிய பின் இருவருக்கும் நகர மனமில்லை. மற்றவர்களும் நேரமும் அவர்களைக் கடந்து போவதை உணரவில்லை. இன்னொருவரின் கனவில் போல் எல்லாம் மங்கலாய் அடங்கித் தெரிந்தது. வானத்தைத் தொட முயன்று கொண்டிருந்த பைன் மரம் கொஞ்சம் குனிந்து அவர்களைப் பார்த்தது. பேச்சற்றுப் போன இருவர் மேலும் பரிதாபப்பட்டது. ஒரு காயை மெல்ல உதிர்த்தது. மீண்டும் வானம் பார்த்தது.

பைன் கோன் தலை மேல் விழவும், அதிர்ந்து போய் ஆலன் துள்ளியது அனுகாவுக்கு வேடிக்கையாய்த் தெரிந்தது. அவளோடு சேர்ந்து அவனும் சிரித்தான். பனிக் குல்லாயைக் கழற்றித் தலையைத் தேய்த்து விட்டுக் கொண்டான்.

"நீ பாடின பாட்டு... டேவ் மாத்யூஸ் பேண்ட்?" இந்த உலகத்துக்கு மீண்டு வர ஆலனின் முயற்சி.

அது சரியென்று அவள் தலையசைத்தாள்.

"ஹேய் ஆலன், ஒரு போட்டி! பனிச்சறுக்கில் நான் உன்னைத் தோற்கடித்தால், வீட்டுக்குப் போனதும் நீ எனக்குச் சூடான கொக்கோ செய்து தர வேண்டும்."

"பூ, இதுவும் ஒரு போட்டியா? சரி. ஒன்று, இரண்டு, மூன்று."

இருவரும் பனிச்சரிவில் வழுக்கத் தொடங்கினார்கள். அனுகா பறவையைப் போல் உணர்ந்தாள். ஆலனைக் கடக்கும் போது வேண்டுமென்றே திரும்பி அவனைப் பார்த்து உரக்கச் சிரித்து வெறுப்பேற்றினாள். மலை அடிவாரத்தில் ஆலனுக்காகக் காத்திருக்கையிலும் காற்றில் மிதப்பது போல் ஓர் உணர்வு. கண்ணைத் திறந்தவாறு கனவு கண்டு கொண்டிருந்தவளின் மேல் ஒரு பனிப்பந்து விழுந்தது.

"ஹேய்..." அள்ளிய உதிரிப்பனியை உருட்டிப் பனிப்பந்தை அவன்மீது எறிய அவளுக்கு ஒரு நொடிதான் ஆயிற்று.

விளையாட்டு தொடர்ந்தது. பனிப்பந்துகளும் சிரிப்பும் இருவர் மேலும் பட்டுத் தெறித்து வெண்பூக்களாய்ச் சிதறின.

**ஷ**ட்டில் பஸ் பிடித்து வீடு போய் இறங்கும் போதும் உடல் களைப்பு தெரியவில்லை. மனத்தில் ஒரு பரபரப்பு. பதற்றம். துள்ளல். குளிக்கும்போதும் உடை மாற்றும் போதும்கூட, ஸ்கி லிஃப்டில் பாடிய










கொங்கணாபுரம் வே. செந்தில்

# சுழலும் புத்தக வங்கி!

கல்லூரிகளில் இளங்கலை பயிலும் ஏழை மாணவ, மாணவிகளுக்கு என பிரத்யேகமாக சுழலும் நிரந்தர புத்தக வங்கி ஒன்று திருச்சியில் இயங்கி வருகின்றது.

பணம் கொடுத்துப் புத்தகம் வாங்கிப் படிக்க இயலாத மாணவ, மாணவிகள் பயன் பெறும் வகையில் இச்சேவையை செய்து வருகின்றனர் திருச்சி, 'ராக்சிட்டி வெல்ஃபேர் அசோசியேஷன்'.





• அசோக் டி. காந்தி

இந்தப் புத்தக வங்கியைப் பராமரிப்பதற்கு என நிரந்தரமாய், பெண் நூலகர் ஒருவர் பணியில் அமர்த்தப்பட்டுள்ளார்.

"எங்கள் அமைப்பு துவங்கியபோது சின்னச் சின்ன அளவுகளில் சமூகப் பணிகள் செய்து வந்தோம். ஆனால், அவைகள் எதுவும் நிரந்தரப் பயன் தரவில்லை. அதனால் என்றைக்கும் பயன்படும் செயல்பாடுகளில் கவனம் செலுத்தத் துவங்கினோம். அப்பொழுதுதான் இந்தத் திட்டம் உருவானது. பாடத்திட்டங்கள் மாறும்போது புதிய புத்தகங்களுடன் இச் சுழலும் நிரந்தர புத்தக வங்கியை மாற்றி அமைத்துக் கொள்கிறோம்!" என்கிறார் புத்தக வங்கியின் சேர்மன் அசோக் டி. காந்தி.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

அந்த வரிகளையே வாய் முணுமுணுத்தது.

இரண்டு மாடி உயரத்திலிருந்து வளைந்து கீழிறங்கும் பளிங்குப் படிகட்டின் அடியில் ஆலன் அவளுக்காகக் காத்து நின்றிருப்பது தெரிந்தது. அவன் கையில் ஒரு ட்ரே. அதன் மேல் வெள்ளைக் 'க்ரீம்' குவிந்து ததும்பும் இரண்டு கொக்கோ கோப்பைகள். நடுவில், நீண்ட கழுத்துள்ள மெலிதான க்ரிஸ்டல் ஜாடியில் ஒற்றை மஞ்சள் ரோஜா.

அனுகா மிச்சமிருந்த படிகளை மிதந்து கடந்தாள்.

"பார்த்தாயா, நான் மறக்கவில்லை" என்றான் ஆலன். 'பால்ரூம்' போல் விசாலமான நீள் சதுர வரவேற்பறைக்குள் அனுகா அவனைத் தொடர்ந்தாள். மெருகேற்றப்பட்ட மரத்தரை குளிருக்கு இதமான வெதுவெதுப்பாய்த் தெரிந்தது. ப்ரையனும் மார்ஜியும் உலகப் பயணங்களிலிருந்து சேகரித்த சிறு கலைப் பொருட்களும் கம்பளங்களும் அறையை ரசனையுடன் அலங்கரித்தன. தரையிலிருந்து விட்டம்வரை உயர்ந்த சன்னல்கள் வெளியிலுள்ள பனியின் வெண்மையை அறை முழுக்கப் பரப்பின.

விறகு வாசப் புகையுடன் பளிங்குக் கணப்பில் தீ சடசடத்துக் கொண்டிருந்தது. அருகிருந்த தாழ்ந்த மேசை மீது கொக்கோ ட்ரேயை வைத்தான் ஆலன். "கொஞ்சம் சூடு ஆறட்டும்." என்றபடி அறையின் மறு கோடியில் கறுப்பாய்ப் பளபளத்த க்ராண்ட் பியோனோவை நோக்கி நடந்தான்.

அடுத்த சில நொடிகளில் அறை முழுதும் 'ஹார்ட் அண்ட் ஸோல்' இசை நிரம்பி வழிந்தது.

'இதயமும் ஆன்மாவும்', இசைக்கு எவ்வளவு பொருத்தமான தலைப்பு. பியானோ பெஞ்சில் ஆலனுக்குப் பக்கத்தில் அவளும் உட்கார்ந்து கொண்டாள். ஆலன் இடது பக்கத்தில் உள்ள கட்டைகளை இசைக்க, அவள் வலது பக்கத்தில் இசைத்தாள். கைகள் அவ்வப்போது லாகவமாய் ஒன்றையொன்று தாண்டி, மறுபக்கக் கட்டைகளை இசைத்தன. இடமும் காலமுமற்ற ஒரு புதுப் பிரபஞ்சம் அங்கே உருவானது. கண்ணுக்குத் தெரியாத உணர்வுகளும் இசைக்குறிகளும் சேர்ந்து மெல்லச் சுழன்று காற்றின் மேல் நடனம் ஆடின.

(தொடரும்)

# தியானத்தைத் தேடி...

உலகின் பிடியினை
உதறிச் செல்வது
தியானமென்று
தேர்ந்திட வேண்டாம்
இயற்கை ஏட்டின்
எல்லாப் பக்கமும்
உள்ளம் வருடும்
உருத்திராட்சமே!

ஈரக்காற்று
இதயம் சீண்ட,
கடற்கரை மணலில்
கால்களைப்
புதையுங்கள்!

ஆடை கட்டிய
பாலென ஒளிரும்
அழகு நிலாவை
மேகக் கரைசலில்
மெதுவாய்த் தேடுங்கள்!

புல்லின் நுனிகளில்
தபசுகள் செய்யும்
மெல்லிய பனியின்
எல்லையைத்
தொடுங்கள்!

மழைக்குப் பின்னே
மரத்தடி ஒதுங்கி
வீசும் காற்றில்
விசிறும் துளிகளில்
உள்ளம் சிரிப்பதை
உணர்ந்து பாருங்கள்!

நீரின் பரப்பினை
நெருங்கிய கிளைகளின்
இருக்கையில் அமர்ந்து
நீரைக்கால்களால்
நீவிப்பாருங்கள்!

உலகின் பிடியினை
உதறிச் செல்வது
தியானமென்று
தெளிந்திட வேண்டாம்

மானிட வாழ்வின்
மகத்துவம் எல்லாம்
வேதமோதிடும்
போதி மரங்களே!

கனவும் நனவும்
விடிவும் முடிவும்
விழிப்பும் உறக்கமும்
சிரிப்பும் அழுகையும்

பார்க்கும் பார்வையும்
வேர்க்கும் உறவும்
ஆர்த்திடும் சுகமும்
நீர்த்திடும் சோகமும்

தியான பாதையின்
தெளிந்த சுவடுகள்!

நாகரத்தினம் கிருஷ்ணா

கண்ணனுடைய சங்கு பாஞ்சஜன்யம் தெரியும். பஞ்ச பாண்டவர்களின் சங்குகள்...?

தர்மர் - அநந்த விஜயம்
பீமன் - பௌண்ட்ரம்
அர்ஜுனன் - தேவதத்தம்
நகுலன் - சுகோஷம்
சகாதேவன் - மணிபுஷ்பகம்

ஆதாரம்: பகவத்கீதை
தகவல்: அன்புபாலாஜி



விமான விபத்தில் இறப்பவர்களுக்கு ஒவ்வொரு நாட்டிலுள்ள ஏர்லைன்ஸ் நிறுவனம் எவ்வளவு விபத்துக் காப்பு பணம் வழங்குகிறது? இதோ லிஸ்ட்: இந்தியா– 7.5லட்சம், ஸ்விஸ் ஏர் – ரூ. 9.6கோடி, தாய்லாந்து – ரூ. 48 லட்சம், கல்ப் ஏர் – ரூ.6 லட்சம், தய்வான் – ரூ. 1.2 கோடி, சிங்கப்பூர் ஏர்லைன்ஸ் – ரூ. 1.92 கோடி (ஆசியாவிலேயே இதுதான் அதிகம்) ஏர்பிரான்ஸ் – ரூ. 4.5 கோடி. சமீபத்தில் இரட்டைக் கோபுர தாக்குதலில் உயிரிழந்த ஒவ்வொருவருக்கும் சம்பந்தப்பட்ட ஏர்லைன்ஸ்கள் விபத்துக் காப்பீடு மூலம் ஒப்புக் கொண்ட தொகை – ரூ. 1.35 கோடி. பணம் ஆறுதல் தராது என்றாலும் நிர்கதியாக விடப்பட்டோமோ என்ற பயத்தைப் போக்குகிறது அல்லவா?

ஆதாரம்: எகனாமிக் டைம்ஸ்,
தகவல்: கே. ராஜகோபால்

# நாட்டையே பார்க்காத ராணி!

தொண்டைப்புண் உள்ளவர்களுக்குப் பசலைக் கீரையின் சாறு நல்லது. சாற்றில் வெந்நீர் கலந்து தொண்டையில் படும்படி கொப்பளித்து வந்தால் தொண்டைவலி, தொண்டைப்புண் குணமாகும்.

– கே. கவிதா



உயரம் எவ்வளவு?

டில்லி குதுப்மினார் – 288 அடி
மும்பை பல்கலைக்கழக ராஜ்பாரி டவர் – 260 அடி
திருச்சி ஸ்ரீரங்கம் கோபுரம் – 236 அடி
தஞ்சை பெரியகோவில் கோபுரம் – 216அடி
திருவண்ணாமலை கோவில் கோபுரம் – 200அடி
காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோவில் கோபுரம் – 188 அடி
கல்கத்தா விக்டோரியா நினைவகம் – 182 அடி
கல்கத்தா உயர்நீதி மன்றம் – 180 அடி
தாஜ்மஹால் – 178 அடி
பதேபூர் சிக்கிரி புலந்தர் வாசா – 176 அடி
மதுரை மீனாட்சி ஆலயக் கோபுரம் – 152 அடி
பூரி ஜகன்னாதர் கோவில் – 142 அடி

– இரா. சக்கரபாணி



**கி**ருஸ்டியன் எபர் ஹார்டின் 1697 முதல் 1727வரை முப்பது வருடங்களுக்குப் போலந்து நாட்டின் ராணியாக இருந்தவள். ஆனால் ஒருமுறை கூட அவள் போலந்து மண்ணில் அடியெடுத்து வைத்ததில்லை!

தகவல் :
**எஸ். சரவணன்**
ஆதாரம் : **'அதிசய உண்மைகள்'**

**த**மிழ்நாட்டில் அதுவும் சென்னையில் பழைமையான மரங்கள் சர்வசாதாரணமாக எவ்விதத் தயக்கமுமின்றி வெட்டப்படுவது வழக்கமாகிவிட்டது.

உச்சநீதி மன்றத்தின் தீர்ப்பை மீறி கூடலூரில் மரங்கள் வெட்டித் தள்ளப்படும் அக்கிரமமும் செய்தியாக வந்துள்ளது. மரங்களை வெட்டிச் சாய்த்தும் தீ வைத்துக் கொளுத்தியும் அழிப்பு நடவடிக்கை துரித கதியில் நடப்பது அவ்வளவு சாதாரண விஷயமில்லை.

இயற்கையைக் கபளீகரம் செய்து வரும் இந்த அபாயகரமான போக்கை முடிந்தவரை பத்திரிகைகள் மக்களுக்கு எடுத்துணர்த்தி வந்தாலும் அரசு ஏன் மரங்களைக் காக்கவும், அக்கிரமங்களைத் தடுக்கவும் முன் வரவில்லை?

**– எஸ். ரவிசேகர்**




- ஆக்ஸ்போர்ட் அகராதியில் இடம் பெற்ற நீளமான வார்த்தை 'fioccipaucinihilipilification' இதன் அர்த்தம் 'மதிப்பில்லாததாக கருதப்படுதல்.'
- ஆங்கிலத்தில் 'SET' என்கிற வார்த்தை தான் அதிகபட்ச அர்த்தம் கொண்டது.
- ஆங்கிலத்தில் அதிகமாக உபயோகப்படுத்தும் எழுத்து 'O'
- ஏ.பி.சி.டி என்கிற எழுத்துக்கள் இல்லாத 100 வார்த்தைகள் உடனடியாக கூற முடியுமா? ஆரம்பியுங்கள் 'zero' வில் இருந்து 'Ninety-nine' வரை.

**– மதுரை எம். விக்னேஷ்,**




**'வி**ரைவாகச் செயல்படு' என்றால் பத்து நிமிட வேலையை அவசர அவசரமாக ஐந்து நிமிடங்களில் செய்து முடிப்பதல்ல. கவனமும், நிதானமும் சிதறாமல் பத்துநிமிட வேலையைப் பத்தே நிமிடங்களில் முடிப்பதுதான் விரைவான செயல்.

**– நார்மன் வின்சென்ட் பீல்**
தகவல்: **அரிச்சந்திரன்**



**ஆ**திமனிதர்கள் அடிக்கடி ஒருவருக்கொருவர் ஆயுதமேந்தி அடித்துக் கொள்வார்கள். பிறகு சமாதானமாகிவிடுவார்கள். ஒருவன் சமாதானமாகப் போகும்போது தன் கையில் ஆயுதம் எதுவுமில்லை என்பதை உணர்த்த கையை நீட்டுவான். அவனது நட்புறவைப் புரிந்து கொண்ட மற்றொருவன் கையைப் பிடித்துக் கொள்வான். இதுவே நாளடைவில் 'கைக் குலுக்கல்' என்றாயிற்று.

**– த. சத்தியநாராயணன், அயன்புரம்.**

# சதாபிஷேகம்!



Sadabishekam of **"Paropakaramani"**

**Brahmasri Vadiveeswaram S.R. Iyer & Smt. Kamala Ammal**

held on 7th Sep.2001 at Sankara Kendra, New Delhi.

"உன்னைப் பார்க்க ஆசைப்படுகிறேன்" ஒற்றை வரியில் ஒரு கார்டு. எழுதிய நபரின் பெயர் கீழே 'ரகு.'

"லெட்டர் ஏதாவது" என்று வழக்கமான கேள்விக்குப் பதிலாக இன்று ஒரு கார்டு.

"ஏம்பா, வேற எதுவுமே எழுதலே?" என்றாள் ராஜி.

"இன்னும் என்ன எழுதணும்?"

"நிறைய எழுதலாம்."

"என்னன்னு சொல்லேன்."

புவனா கொண்டு வந்து வைத்த காபி ஆறிக் கொண்டிருந்தது.

"அப்பா" என்றாள் ராஜி கையைத் தொட்டு.

"சொல்லு."

"ஏன் வேற எதுவும் எழுதலே?"

"அதான் கேட்டேனே, என்ன எழுதணும்னு."

"ராஜி எப்படி இருக்கா. என்ன கிளாஸ் போறா... எப்படிப் படிக்கிறா... இப்படி எழுதலாமே" என்றாள் பெரிய மனுஷி போல.

பெரிதாகச் சிரித்தேன்.

"புவனா.... இங்கே பார். என்னமா கேள்வி கேட்கறது."

"அவளாவது கேட்க முடியறதே!"

# கனவாகி...

ஹாஸ்பிடல் வாசலில் பஸ் ஸ்டாப். போகும் வழி எல்லாம் ராஜியின் கேள்விகள் குறித்து புன்னகை என் உதட்டில்.

ரகு என்னைப் பார்த்ததும் பரபரப்பு காட்டினான்.

"வா...வா.... வராம போயிருவியோன்னு நினைச்சேன்."

அருகிலிருந்த ஸ்டூலில் அமர்ந்தேன். சரியாக பதினைந்து நாட்கள் ஆகின்றன அவனைப் பார்த்து. முதலில் வந்த தகவல், ரகுவை ஹாஸ்பிடலில் சேர்க்கப் போவது குறித்து. மறுநாளே வந்து பார்த்தேன். இரண்டாவது தரம் வந்தது பதினைந்து நாட்களுக்கு முன்பு. இரவு பத்து மணிக்கு வாட்ச்மேன் வந்து விரட்டும் வரை பேச்சு.

"போங்க ஸார். அய்யா பார்த்தா சத்தம் போடுவார்..." என்றவன் என்னை வாசல் வரை வந்து வழியனுப்பினான்.

இதோ மறுபடி. அதுவும் ரகு கார்டு போட்டு.

"ஸாரிடா. எழுதக் கூடாதுன்னு நினைச்சேன்" என்றான்.

"இப்ப எப்படி இருக்கே?"

"நிமிஷத்தை எண்ணிண்டு."

பளிச்சென்று பதில். ரகுவிடம் துளிக்கூட வருத்தத்தின் சாயை இல்லை.

"உன் மீஸைைக் காணோம்" என்றேன் பார்வையைச் சுழற்றி.

"பாவம். அவளுக்குப் போரடிச்சுப் போச்சு. இப்ப எனக்கும் விடுதலை. அவங்களுக்கும் விடுதலை கிடைக்கும். நான் எதிர் பார்க்கறது நடந்துட்டா."

"உளராதே" என்றேன்.

ரகுவை நான் பார்ப்பதைத் தவிர்த்ததற்குக் காரணமே அவனைப் பற்றி டாக்டா சொன்ன விவரம்தான்.

"பிழைக்கிறது கஷ்டம். நாளோ, மாசமோ."

என்னால் கண்ணீரை மறைக்க இயலாது அதுவும் ரகுவின் முன்பு.

"டேய், பிஆர்ஜியைப் பார்த்தேன். நம்ம மேத்ஸ் ஸார். பக்கத்து வார்டுல... என்னைப் பார்த்ததும் அடையாளம் புரிஞ்சுண்டு சௌக்கியமான்னார். என்ன சௌக்கியம்? பதிலுக்கு நானும் அவரைக் கேட்டேன். எழுபத்தஞ்சு வயசுடா. இனிமே அசட்டுத்தனமா கேட்காதே. கணக்குப் போட்டுப் பார்த்தா... இதுவே ஜாஸ்தின்னார்."

ரகுவின் எலும்புக் கூடு குலுங்கியது. இத்தனை வேகமாய் உடல் க்ஷீணிக்குமா. கடவுளே... அப்படி ஒன்றும் ஆணழகன் இல்லை தான். இருந்தாலும் விலா எலும்புகளை எண்ணி விடலாம் போல –

"உனக்கு ஞாபகம் இருக்கா. அந்த மனு



## ரிஷபன்

"என்ன பயமோ... என்னைப் பாரு. பார் வதிகிட்டே அசடு வழிஞ்சுகிட்டுப் போய் உளறிக்கொட்டி... அவ பாட்டி என்னை விளக்குமாத்தால அடிக்க வந்தாளே... ஞாபகம் இருக்கா."

அன்று தெருவே சிரித்தது. இவன் ஓட ஓட, பாட்டி முடியாத நிலையில் துரத்த... "டேய், நில்லுடா... என்னால ஓட முடியலே" என்றதுதான் ஹைலைட்.

"ஏண்டா, துரத்தற?" என்று கேட்டதும் இவன் சமாளித்தது அதை விடவும் டாப்.

"விளக்குமாத்தைப் போய் காசு கொடுத்து வாங்கினியேன்னு திட்டறா. வீடு முழுக்க தென்னை ஓலை வச்சுண்டு."

பாட்டியின் சிக்கனம் எல்லோருக்கும் தெரியும் என்பதால் சிரிப்புடன் பாதி கூட்டம் கலைந்து விட்டது. இத்தனைக்கும் பார்வதிக்கு முன்பல் இரண்டும் வெளியே நீட்டிக் கொண்டிருக்கும்.

ஷரை எப்படிப் படுத்தியிருப்போம். மூச்சு விடாம ஸ்டெப் பை ஸ்டெப் ஒரு பெரிய கணக்கைப் போட்டு முடிச்சதும் முதல் வரில சந்தேகம் கேட்போமே..."

சாத்துக்குடி வாங்கிப் போயிருந்தேன். உரித்த சுளைகளை அவனிடம் கொடுத்தபடி அவன் பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்தேன்.

"ராஜி உன் கார்டைப் பார்த்து.... ஏன் ஒரு வரிதான் எழுதியிருக்கார்னு கேட்டா..."

"அடடா.. அவளைப் பத்தி எழுதியிருக்கலாம்" என்றான் உடனே.

"அவளை அழைச்சுண்டு வரலாம்னு நினைச்சேன். அப்புறம் ஆபீஸ்லேர்ந்து நேரா இங்கே வர்றது ஈசின்னு..."

"வேணாம்டா. அவ எதுக்கு இங்கே? பயந்துப்பா."

"போன வருஷம் ஒரு கல்யாணத்துல சந்த்ரிகாவைப் பார்த்தேன்" என்றேன்.

இப்போது கூட அந்தப் பெயரைச் சொல்லும்போது இலேசாய்க் குரல் தடுமாறி ஒரு வித உணர்வு அப்பிக் கொண்டது.

"நீதான் கடைசி வரைக்கும் உன் லவ்வை அவகிட்டே சொல்லவே இல்லியே."

"பயம்..."

சிரித்தவாறே சொன்னேன்.

"நல்லவேளை. பாட்டி உன்னைக் காப்பாத்தினா."

"சந்த்ரிகாகூட இப்பவாவது பேசினியா?"

"ம்... ரெண்டு பொண்ணு... ஜூனியர் சந்த்ரிகா அப்படியே. அவ மாறிட்டா. பழைய சந்த்ரிகா இல்லே" என்றேன்.

"நீயும்தான். நானும்தான். மாறாம யார் இருக்கா. அந்த சமயம் அவ உன் கண்ணுக்கு அழகாத் தெரிஞ்சாள்னா அது காதல் விதி."

மணி ஏழரை ஆகிவிட்டது. நேரம் போனதே தெரியவில்லை. இனி இரண்டு பஸ் பிடித்து வீடு போக வேண்டும். அதற்கே இரவு ஒன்பதரை மணி ஆகிவிடும்.

"ராஜிட்ட சொல்லு. அடுத்த லெட்டர்ல... அப்படி ஒண்ணு எழுதினா... அவ பேரையும் எழுதறேன்னு."

"நீ பாம்பேல இருந்தப்ப.... வாரம் ஒரு லெட்டர் போடுவியே. எல்லாம் பத்திரமா வச்சிருக்கேன். நீ படிச்ச புக்ஸ்... பார்த்த விஷயம்னு..."

"அந்தக் குப்பையை ஏன் சேர்த்து வச்சிருக்கே?"

"உன் கையெழுத்து ரொம்ப அழகு. இந்த கார்டுல கூட நீட்டா அந்த ஒரு லைன்."

"டேய்... நமக்கு நாப்பத்தஞ்சு வயசுடா."

"சின்ன வயசுதாண்டா... எழுபது.... எண்பதை கம்பேர் பண்ணா... நம்ம பிஆர்ஜி வயசெல்லாம் பார்த்தா..."

"ஆனா... அதுவே எனக்கு அதிகம்னு தீர்மானம் பண்ணியாச்சே."

"எங்கே உன் மிஸஸைக் காணோம்?" பேச்சை மாற்றினேன்.

"எம் பையன்கூட இங்கே வர வேணாம்னு சொல்லிட்டேன். அப்பான்னா வேற ஞாபகம் வரட்டும். ஹாஸ்பிடல் பெட்ல எலும்புக் கூடு மாதிரி இமேஜ் வர வேணாம்னு."

"ரகு... ப்ளீஸ்டா. உனக்கு எதுவும் ஆகாது."

என் குரல் கட்டுப்பாடு மீறி உடைந்தது.

"ஹாஸ்பிடல் விட்டு வெளியே வந்ததும் நல்ல படமா... பழசு... சிவாஜி நடிச்சது... போகணும்டா... ராக்சில... மாட்னி..."

"மாட்னி... ஈவ்னிங்னு அப்ப சினிமா பைத்தியமா சுத்தினோம்."

"காலம் ஒரு நாள் மாறும்.
நம் கவலைகள் யாவும் தீரும்."

மெலிதாய் பாட்டு ஹம்மிங்கில்.

"கண்ணதாசனைப் பத்தி மணிக்கணக்கா பேசுவோமே."

"நம்ம வயசுக்காரங்களுக்கு கண்ணதாசன்... இப்ப ராஜிக்கு- எனக்கே புரியாத புது சினிமா பாட்டு... அட்சரம் பிசகாம பாடறா கூடவே..."

"ராஜியைப் பார்க்கணும் போல இருக்கு" என்றான் கண்களை மூடி.

"சரிடா. நீ கிளம்பு. மணி ஆச்சு" என்றான் அரை மனதாய்.

"நீ தனியா இருக்கியே."

"தனியே வந்து... தனியா போகப் போற உயிர்தானே?"

**ம**ணி எட்டரை. இனிமேல் வாட்ச்மென் வந்து விடுவான்.

"நாளைக்கு வரியா... முடிஞ்சா?"

அவனைப் பார்க்கவில்லை. என் கண்களின் பொய்யை அவன் படித்து விடக் கூடும்.

"வரேன்டா" என்றேன் பொதுவாய்.

"ஒரே ஒரு நிமிஷம்... இரேன்."

நின்றேன். அவனைப் பார்த்தேன். கூடாது. என் விரோதிக்கும் இந்த மாதிரி வியாதி வரக் கூடாது.

"போயிட்டு வா."

**ரா**ஜி விழித்திருந்தாள். மணி பதினொன்றைத் தொட்டுவிட்டது.

"பார்த்தியா, உன் ஃப்ரெண்டை?" என்றாள்.

"அடுத்த லெட்டர்ல உனக்கும் எழுதுவான்."

"பாவம்தானேப்பா..." என்றாள் கரிசனத்துடன்.

என்னை மீறி அழுகை பீரிட்டது. பேசாமல் தலையசைத்தேன்.

"ஸ்வாமிகிட்ட வேண்டிக்கட்டுமா. அவருக்கு நல்லது பண்ண."

அவனுக்கு நல்லது எது?

**ம**றுநாள் விடியலில் ஃபோன் மணி ஒலித்தது. ரிசீவரை எடுத்தேன்.

மிஸஸ் ரகுவின் அழுகை கேட்டது. ○










• சாரதி டேக்க



# அதிர்ஷ்ட விநாயகர்



உயர்தர கண்ணாடியில் கைகளால் உருவாக்கப்பட்டது. இந்த அதிர்ஷ்ட விநாயகர் உருவாகுவதை நீங்கள் எங்களிடம் மட்டுமே நேரில் காண முடியும்.

**காஞ்சி மகா பெரியவாள்** அவர்களால் ஆசீர்வதிக்கப்பட்டது. உங்கள் கைகளுக்கு வந்த 15 நாட்களுக்குள் கண்டிப்பாக நல்லது நடக்கும். நம் இல்லத்திற்கு வருகின்ற நம் உறவினர்களுக்கும் மற்றும் சுமங்கலிகளுக்கும் இந்த **அதிர்ஷ்ட விநாயகரை** அவர்களுக்கு தருவதினால் மேலும் நன்மைகள் பல பெறுவீர்கள். மூன்று அளவுகளில் கிடைக்கும்.விலை ரூ. 30.00, 60.00 மற்றும் 90.00 ரூபாய். கூரியர் சர்வீஸ் மூலம் பெற விரும்புகிறவர்கள் தமிழ் நாட்டிற்குள் ரூ. 15.00 பிற மாநிலங்கள் ரூ. 30.00 சேர்த்து அனுப்பவும். எங்களிடம் காலை 9 மணி முதல் மாலை 8 மணி வரை நேரில் பெற்றுக் கொள்ளலாம். விடுமுறை கிடையாது.

சரோசனா என்ற நான் வீட்டுத் தலைவி. பண்டிகை நாட்களில் மஞ்சள் குங்குமத்துடன் ஜாக்கெட்துணி கொடுப்பது என் வழக்கம். சிலர் அதை தன் புடவைகளுக்கு ஒத்துப்போகாவிட்டால் மற்றவர்களுக்குக் கொடுத்து விடுவார்கள். சில சமயம் நமக்கே கூட திரும்பி வந்துவிடும். மனதிற்குள் வருத்தப்படுவேன். அதனால் இனி பூஜைக்கு உபயோகப்படும் பொருளாக இருக்கட்டும் என்ற எண்ணத்தில், சைதாப்பேட்டை, எண்.15, பஜார் தெருவில் வசிக்கும் வினோபாவிடம் அதிர்ஷ்டப் பிள்ளையாரை வாங்கி மஞ்சள் குங்குமத்துடன் கொடுத்துக் கொண்டிருக்கிறேன். அன்று ஆடி மாத கடைசி வெள்ளிக் கிழமை. தூரத்தில் இருக்கும் என் தோழி தன் 27வயது மகளுடன் என் வீட்டிற்கு வந்திருந்தாள். அப்பா இல்லாத இந்தப் பெண்ணை எப்படித்தான் கரை சேர்க்கப் போகிறேனோ என்று வருத்தப்பட்டாள். உடனே அந்தக் கன்னிப் பெண்ணிடம் அதிர்ஷ்டப் பிள்ளையாரைக் கொடுத்து, இன்றுடன் உன் அம்மாவின் கவலை தீர்ந்து உனக்குத் திருமணம் ஆகும் என்று ஆசீர்வதித்தேன். என் வீட்டிலேயே ஆவணி முதல் வாரம் வரன் பார்த்து, அன்று மாலையே நிச்சயதார்த்தமும் நடந்தது. என் தோழியின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அதிர்ஷ்ட பிள்ளையாரின் புகழ் உலகெங்கும் பரவி அனைவரும் நலமாக வாழ வாழ்த்துகிறேன்.

இப்படிக்கு மற்றவர் நலம் விரும்பி திருமதி சரோசனா தேசிகன், மேற்கு மாம்பலம், சென்னை – 33. போன்: 3710652

**உங்கள் தேவைகளுக்கு எங்களுக்கு** Money order அல்லது Demand Draft Payable at Chennai in favour of. B. vinoba. **(உங்கள் விலாசத்தையும் தொலைபேசி எண்களையும் தெளிவாக எழுதவும்)**

**அக்டோபர் 1 முதல் 31 வரை நவராத்திரியை முன்னிட்டு 5% சிறப்புத் தள்ளுபடி வழங்கப்படும்.**

**உருவாகும் இடம்: ப. வினோபா**

புதிய எண்.15, பஜார் சாலை, சைதாப்பேட்டை, சென்னை – 15. (பிரேம்ஸ் கண் மருத்துவமனை அருகில்) Ph: 91-44-4333011, E.mail:vinoba_aakash@yahoo.com

**கும்பகோணம், திருச்சி, மதுரை, கோயம்பத்தூர் ஆகிய ஊர்களுக்கு மட்டும் விநியோகஸ்தர்கள் தேவை.**



# மகிழ்வித்து மகிழுங்கள்

## நவராத்திரி, தீபாவளி நல்வாழ்த்துக்கள்



பிறந்த நாட்களில், திருமண நாட்களில், பணிவாய்ப்பு கிடைத்த நாட்களில், பெரியோர்களை நினைக்கும் நாட்களில், ஊதியம் பெறும் நாட்களில், எப்போது வேண்டுமானாலும்...



நிறுவனர்
அமரர். சர்தார்.
**வேதரத்னம்**
தபால்தலை

- கல்விக்கண் திறந்து வைக்க விரும்புகிறேன்.
- பெண் குழந்தைகளுக்கு உதவ விரும்புகிறேன்.
- படிக்கும் பெண் குழந்தைகளுக்கு உணவளிக்க விரும்புகிறேன்.
- சாதிவெறியில்லாத சமுதாயத்திற்கு உதவ வேண்டுகிறேன்.
- கிராமப்புற சிறுமியருக்கு கஷ்டம் அதிகம் அவர்களுக்கு உதவ விரும்புகிறேன்.
- எட்டுப்படிப்புடன் கைத்தொழில் கற்றுத்தர உதவ விரும்புகிறேன்.
- நோய்வாய்ப்பட்ட சிறுமியருக்கு மருந்தளிக்க விரும்புகிறேன்.
- சிறுமியருக்கு நல்வாழ்க்கை அமைய உதவ விரும்புகிறேன்.
- முகம் தெரியாத, யாரும் இல்லாத சிறுமியருக்கு உதவ விரும்புகிறேன்...
- உடை தானமளிக்க, புத்தகம் தானமளிக்க விரும்புகிறேன்.
- நீண்டகாலமாக அன்னதானம் செய்துவரும் நிலையத்திற்கு உதவ விரும்புகிறேன்...
- பசுக்களைப் பராமரிக்க விரும்புகிறேன்.
- சிறுமியர், கன்னிகைகள் எனப்படுவதால் அவர்களுக்கு நவராத்திரி சமயத்தில் உதவ விரும்புகிறேன்.

என்று நினைக்கும் உங்களுக்கு அன்னதானம், ஔஷததானம், அபயதானம், சாஸ்திரதானம், போன்ற பல வாய்ப்பினை அளித்து, மகிழ்வித்து மகிழ வேதாரண்யம் கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம் இந்த வேண்டுகோளை வைக்கிறது.

கல்வி பயிலும் ஏழை எளிய எதிலிச் சிறுமியருக்கு உதவுங்கள். கிராமப்புற சிறுமியருக்கு இலவச உணவு, உடை, இருப்பிடம், கல்வி, பதினொறு தொழிற்பயிற்சிகள் ஆகியன தந்து 55 ஆண்டுகளாக ஆதரிக்கும் தேசிய விருது பெற்ற குருகுலம் மகளிர் தொண்டு நிறுவனத்திற்கு ஆதரவு தாருங்கள். நன்கொடைகளைப் பொருளாகவோ தொகையாகவோ அனுப்பி உதவுங்கள்.

**முகவரி : கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம்**

தேசிய விருது பெற்ற மகளிர் தொண்டு நிறுவனம், த.பெ.எண். 2. வேதாரண்யம் – 614 810.
நாகப்பட்டினம் மாவட்டம். தமிழ்நாடு. போன் : (04369) 50227, 50027, 50011
தந்தி: *GURUKULAM, VEDARANIAM - 614 810*

*கொடுத்தால் வரும். தர்மம் தலைகாக்கும்.*

# சிவகாமியின் சபதம்

## பூர்வகதை

சுமார் ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னால் காஞ்சிமா நகரில் தர்ம மகா ராஜாதிராஜ மகேந்திர பல்லவ சக்கரவர்த்தி செங்கோல் செலுத்தி வந்தார். அவருடைய சாம்ராஜ்யம் தெற்கே பாண்டிய நாட்டு எல்லையிலிருந்து வடக்கே கோதாவரி நதிக் கரை வரையில் பரவியிருந்தது.

அக் காலத்தில் பாரத நாட்டிற்குள்ளே ஒப்பற்ற பெருமையுடன் விளங்கிய காஞ்சிமா நகரில் சம்ஸ்கிருத கடிகைகளும், சைவத் தமிழ் மடங்களும், பௌத்த வித்யாஸ்தானங்களும், ஜைனப் பள்ளிகளும் பெயர் பெற்றிருந்தன.

கீழைச் சோழ நாட்டிலுள்ள திருச்செங்காட்டாங்குடி என்னும் கிராமத்திலிருந்து பரஞ்சோதி என்னும் இளைஞன் காஞ்சியில் திருநாவுக்கரசர் மடத்தில் சேர்ந்து தமிழ்க் கல்வி கற்பதற்காக வந்தான். வழியிலே சந்தித்த நாகநந்தி என்னும் புத்த சந்யாசியுடன் அவன் ஒரு நாள் இருட்டிய பின்னர் காஞ்சிக்கோட்டைக்குள் பிரவேசித்தான். அதேதினத்தில், சளுக்க மன்னனாகிய புலிகேசி பல்லவ சாம்ராஜ்யத்தின் மேல் படையெடுத்திருக்கும் செய்தி வந்ததின் காரணமாக, ஆயனச் சிற்பியின் பெண் சிவகாமியின் நடன அரங்கேற்றம் நடுவில் தடைப்பட்டது என்று ஜனங்கள் பேசிக்கொள்வது பரஞ்சோதியின் காதில் விழுகிறது.

ஆயனரும் சிவகாமியும் சிவிகையில் ஏறி வருகிறார்கள். அச்சமயம் மதம் பிடித்த யானை ஒன்று தெறிகெட்டு ஓடி வருகிறது. பரஞ்சோதி தான் கொண்டு வந்திருந்த வேலை மத யானையின் மீது எறிந்து அது தன்னை நோக்கித் திரும்பியதும் விரைந்தோடுகிறான். வெகு நேரம் இரவில் காஞ்சி நகர் வீதிகளில் அலைந்த பிறகு ஊர்க் காவலர்கள் அவனைச் சிறையில் அடைக்கிறார்கள். அன்றிரவே நாகநந்தி அவனைச் சிறையிலிருந்து தப்புவித்து இராஜவிஹாரம் என்னும் புத்தர்கோவிலில் உள்ள இரகசிய

அமரர் கல்கி

வழியின் மூலம் அவனைக் கோட்டைக்கு வெளியே அழைத்துச் செல்கிறார்.

திருநாவுக்கரசருக்கும் ஆயனருக்கும் பரஞ்சோதி ஓலை கொண்டு வந்திருந்தான். திருநாவுக்கரசர் காஞ்சியில் இல்லை என்று அறிந்து, அவன் புத்த பிக்ஷுவுடன் ஆயனர் வீடு செல்கிறான்.

ஆயிரம் வருஷம் ஆனாலும் அழியாத அஜந்தா வர்ணச் சேர்க்கை இரகசியத்தை அறிந்து வருவதற்காகப் பரஞ்சோதியைக் கிருஷ்ணை நதிக்கரையிலுள்ள ஸ்ரீ பர்வதம் என்னும் நாகார்ஜுன மலைக்கு அனுப்பலா மென்று நாகநந்தி சொல்கிறார். அச்சமயத்தில் மகேந்திர சக்கரவர்த்தியும், அவருடைய புதல்வர் மாமல்ல நரசிம்மரும் ஆயனர் வீட்டுக்கு வரவே, பிக்ஷுவும் பரஞ்சோதியும் புத்தர் சிலைக்குப் பின்னால் ஒளிந்து கொள்கிறார்கள்.

அதற்குச் சற்று முன்னால் ஆயனர் வீட்டுக்கு அருகிலுள்ள தாமரைக் குளக்கரையில் சிவகாமியும் குமார சக்கரவர்த்தி மாமல்லரும் சந்திக்கிறார்கள். சிவகாமியின் ஊடல் தீர்ந்த பின், அவள் நரசிம்மரிடம் வேலின் மேல் ஆணையாகத் தன்னை மறப்பதில்லை என்று வாக்குறுதி கேட்கிறாள். அப்போது பரஞ்சோதி ஆயனர் வீட்டிலிருப்பது மாமல்லருக்குத் தெரிகிறது. அந்த வீரனைக் கண்டு அவனுடைய வேலைத் திருப்பிக் கொடுக்க நரசிம்மர் விரைந்து செல்கிறார். ஆயனர் வீட்டில் அவனைக் காணாமல் ஏமாற்றமடைகிறார்.

ஆனால், புத்தர் சிலைக்குப் பின்னால் அவனும் பிக்ஷுவும் ஒளிந்திருப்பதைச் சக்கரவர்த்தி கண்டு கொண்டு வெளியில் வந்த பின் சத்ருக்னன் என்னும் ஒற்றனை வேவு பார்க்க ஏவுகிறார்.

சத்ருக்னனை ஏன் ஆயனர் வீட்டுக்கு அனுப்ப வேண்டும் என்று நரசிம்ம வர்மர் கேட்கிறார்.

'அங்கு பகைவர்களின் ஒற்றர்கள் இருக்கக் கூடும் என்பதற்கான அறிகுறிகளை நீ கவனிக்கவில்லையா? ஆயனர் வீட்டில் இருந்தபோது உன் கண்கள் என்ன செய்து கொண்டிருந்தன?' என்று சக்கரவர்த்தி கடிந்துகொள்கிறார்.

ஆயனர் வீட்டிலிருந்தபோது தன் கண்கள் சிவகாமியின் கண்களுடன் காதல் மொழிப் பேசிக் கொண்டிருந்ததை எண்ணி முகம் சிவக்கிறார் நரசிம்ம வர்மர்.

## இருபத்து மூன்றாம் அத்தியாயம்

# இராஜ ஹம்சம்

நரசிம்மர் வெட்கமுற்றதைக் கண்டு அவருக்குத் தைரியம் சொல்பவர்போல் மகேந்திரர் கூறினார்: "நரசிம்மா! ஆயனர் வீட்டுக்குள் போனால் அங்குள்ள சிற்பச் சித்திர அதிசயங்களில் எவருமே கண்ணையும் பறிகொடுப்பது இயற்கைதான். நானே அப்படித்தான் மெய்மறந்து விடுவது வழக்கம். இன்றைக்கு ஆயனர் வீட்டுக்குச் செல்லும்போதே சிறிது சந்தேகத்துடன் நான் சென்றபடியால் கூர்மையாகக் கவனித்தேன்..."

நரசிம்மர் தம் மனக்குழப்பத்தைச் சமாளித்துக்கொண்டு "கவனித்ததில் என்ன கண்டீர்கள், அப்பா? சிற்பங்களையும் சித்திரங்களையும் தவிர, ஆயனர் வீட்டில் வேறொன்றையும் நான் காணவில்லையே?" என்றார்.

"ஆயனரின் நடவடிக்கையில் உனக்கு எவ்விதமான சந்தேகமும் உண்டாகவில்லையா, நரசிம்மா!"

மாமல்லர் மௌனமாயிருந்தார்.

"அடிக்கடி அவர் கவலையுடன் புத்தர் சிலையின் பக்கம் திரும்பினாரே, அதைக் கவனிக்கவில்லையா?"

மாமல்லரின் கண்கள் அகன்று விரிந்தன.

"புத்தர் சிலைக்கு அருகில் நாம் சென்றதும், ஆயனர் தயங்கித் தடுமாறியதையும் நீ கவனிக்கவில்லையா?"

நரசிம்மர் திடுக்கிட்டவராய், "அப்பா! அந்தப் பெரிய புத்த விக்கிரகத்துக்குப் பின்னால் ஒருவேளை

யாராவது மறைந்திருந்தார்களா, என்ன?'' என்றார்.

''ஆம், நரசிம்மா! இரண்டு பேர் இருந்தார்கள்! அன்றிரவு இராஜ விஹாரத்துக்கு அருகில் ஒரு புத்த பிக்ஷுவையும் ஒரு வாலிபனையும் நாம் பார்க்கவில்லையா, அந்த இருவருந் தான்!''

''என்ன! அவர்களா ஆயனச் சிற்பி யார் வீட்டில் புத்தர் சிலைக்குப் பின் னால் ஒளிந்திருந்தார்கள்?''

''ஆம்; ஆனால், ஒளிந்துகொள்ளும் கலையை அவர்கள் அவ்வளவு நன் றாகக் கற்கவில்லை...''

''தங்களுக்கு மூன்றாவது கண் உண்டு என்பது அவர்களுக்கு எப்படித் தெரி யும் அப்பா? ஆய்னரின் வீட்டில் தாங் கள் அவ்வளவு நேரம் தங்கியது எனக் குச் சிறிது வியப்பை அளித்தது. இப் போது காரணம் தெரிகிறது!'' என்று நர சிம்மர் பெருமிதத்துடன் கூறினார். மகேந்திரர் இதற்கு விடையொன்றும் கூறாமல் கால்வாயின் மேற்குத் திசையை நோக்கினார்.

திடீரென்று, ''அப்பா! ஆயனர் வீட்டுக்கு நான் மறுபடியும் போய்வர விரும்புகிறேன்'' என்றார் மாமல்லர்.

''எதற்காக, நரசிம்மா?''

''அந்த வாலிபனைப் பார்த்து இந்த வேலை அவனிடம் ஒப்புவிக்க வேண் டும். புத்த பிக்ஷுவுடன் அன்றிரவு நாம் பார்த்த வாலிபன்தான் இந்த வேலுக் குரியவன் என்று தாங்கள் சொன்னீர் கள் அல்லவா?''

''அன்று ஊகித்துச் சொன்னேன்; இன்றைக்கு நிச்சயமாயிற்று. ஆனால், அந்த வாலிபனுக்கு இந்த வேல் இனி மேல் தேவையில்லை, நரசிம்மா! அதோ போகிறதே, ஆயுதப் படகு. அதிலுள்ள பழைய வேல்களுடன் இதையும் நீ சேர்த்து விடலாம்!''

''ஏன், அப்பா?''

''பரஞ்சோதி ஆயனரிடம் சிற்பக் கலை கற்கப் போகிறான்; அவனுக்கு வேல் வேண்டியதில்லை.''

''பரஞ்சோதி, பரஞ்சோதி! – திவ்ய மான பெயர்! அந்த வீர வாலிபனைப் பற்றி என்னவெல்லாமோ ஆசை கொண்டிருந்தேன். அவனை என் ஆரு யிர்த் தோழனாகக் கொள்ள விரும்பினேன்!''

''அது நிறைவேறாதென்று நான் சொல்லவில்லையே!''

''எப்படி நிறைவேறும்? நம் பகைவர் களின் ஒற்றர்களுடன் நாம் தோழமை கொள்வது சாத்தியமா?''

''அந்த வாலிபனை ஒற்றன் என்று நான் சொல்லவில்லையே!''

''பின் எதற்காக அவன் ஒளிந்து கொண்டான்?''

''அந்த வாலிபன் குற்றமற்றவன். அவ னைக் கொண்டு அந்தக் கள்ள பிக்ஷு ஏதோ சூழ்வினை செய்யப் பார்க் கிறான் என்று தோன்றுகிறது. வாதாபி சாம்ராஜ்யத்தின் மகா சதுரனான ஒற் றன் அந்தப் பிக்ஷு என்று நான் ஊகிக்கிறேன்!''

''அப்பா! சில சமயம் தங்களுடைய நிதானப் போக்கு எனக்கு மிகுந்த வியப்பை அளிக்கிறது.''

''எதைப் பற்றிச் சொல்லுகிறாய் நரசிம்மா?''

''அன்றிரவே அந்தப் புத்த பிக்ஷு வைப் பற்றித் தாங்கள் சந்தேகம் கொண்டீர்கள். உடனே அவனை ஏன் சிறைப்படுத்தவில்லை? வெளியிலே விட்டு ஏன் வேடிக்கை பார்க்கிறீர்கள்?''

''அன்றிரவு சிறைப்படுத்தியிருந்தால், பல்லவ ராஜ்யத்துக்கு ஏற்பட்டிருக்கும் ஒரு பெரிய அபாயம் எனக்குத் தெரி யாமல் போயிருக்கும்.''

''பெரிய அபாயமா?'' என்று கூறி நர சிம்மர் ஆவலுடனும் பரபரப்புடனும் மகேந்திரரை நோக்கினார்.

''ஆம்; அன்றிரவு நாம் புத்த பிக்ஷு வையும் வாலிபனையும் பார்த்தோம்; மறுநாள் காலையில் அவர்களை இராஜ விஹாரத்தில் காணவில்லை. ஆனால், அவர்கள் எந்தக் கோட்டை வாசலின் வழியாகவும் வெளியே போனதாகத் தெரியவில்லையல்லவா?''

''ஆமாம்!''



"அவர்கள் எப்படி மாயமாய் மறைந்திருக்கக் கூடுமென்று வியப்பாயிருந்ததல்லவா?"

"ஆம், அப்பா!"

"கோட்டைக்கு வெளியே போக ஏதோ கள்ள வழி இருக்க வேண்டும் என்று சந்தேகித்தேன். அந்தக் கள்ள வழி எங்கே இருக்கிறதென்று சற்று முன்னால்தான் தெரிந்தது."

"அதைப் பற்றி யோசித்ததனால்தான் குதிரையை அவ்வளவு வேகமாய் விட்டுக் கொண்டு வந்தீர்களா?"

சக்கரவர்த்தி மௌனமாயிருந்தார்.

"கள்ள வழி எங்கே இருக்கிறது, அப்பா?"

"இராஜ விஹாரத்தில் புத்த பகவானுடைய விக்கிரஹத்துக்குப் பின்னால் பார்க்க வேண்டும், நரசிம்மா!"

சக்கரவர்த்தியின் அறிவுக்கூர்மையைப் பற்றி நரசிம்மர் அளவற்ற வியப்புக் கொண்டவராய்த் திகைத்து நிற்கையில், "அதோ இராஜஹம்சம்!" என்று மகேந்திரர் கூறியதைக் கேட்டு மேற்கே நோக்கினார். காஞ்சி நகர்ப் பக்கத்திலிருந்து மூன்று படகுகள் கால்வாயில் வந்து கொண்டிருந்தன. அவற்றில் நடுவில் வந்த படகு சங்கையொத்த வெண்ணிறமுடைய 'இராஜஹம்ச'த்தின் உருவமாக அமைக்கப்பட்டிருந்தது. அதில் ஒரு பக்கத்தில் அமைந்திருந்த தங்கச் சிங்காதனம் 'பளபள'வென்று மின்னிற்று. அதன்மேல் விசாலமான வெண் கொற்றக்குடை விரிந்திருந்தது. எல்லாவற்றுக்கும் மேலே பல்லவ சாம்ராஜ்யத்தின் ரிஷபக் கொடி கம்பீரமாய் பறந்து கொண்டிருந்தது.

முதலில் வந்த படகும், 'இராஜ ஹம்ச'மும் படகோட்டிகளைத் தவிர மற்றபடி வெறுமையாயிருந்தன. கடைசியாக வந்த படகில் பலர் அமர்ந்திருந்தார்கள்.

"ஆ! மந்திரி மண்டலத்தாரும் வருகிறார்களே! தாங்கள் வரச் சொல்லியிருந்தீர்களா?" என்றார் நரசிம்மர்.

"ஆம்; இன்றைக்குத் துறைமுகத்தில் மந்திரி மண்டலம் கூடப் போகிறது. அதற்கு முன்னால் உன்னிடம் நான் சில விஷயங்கள் சொல்ல வேண்டும். அதோடு, உன்னிடம் ஒரு வாக்குறுதி கோரப் போகிறேன்" என்றார் மகேந்திரர்.

நரசிம்மருக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவருடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்டவளான சிவகாமி தாமரைக் குளக்கரையில் அவரிடம் வாக்குறுதி கேட்டு வாங்கிக் கொண்டு ஒரு முகூர்த்த நேரங்கூட ஆகவில்லை. அதற்குள் அவருடைய அன்புக்கும் பக்திக்கும் உரியவரான தந்தை வேறு வாக்குறுதி கேட்கிறார்.

இவ்விதம் மாமல்லர் யோசித்துக் கொண்டிருக்கும்போதே படகுகள் மூன்றும் அவர்கள் இருந்த இடத்தை நெருங்கின.

## இருபத்து நான்காம் அத்தியாயம்

## வாக்குறுதி

சக்கரவர்த்திக்குப் பின்னால் கால்நடையாக வந்த இராஜ பரிவாரங்களும் இதற்குள்ளே கால்வாயின் கரைக்கு வந்து விட்டன.

"மகாராஜாதிராஜ திரிபுவன சக்கரவர்த்தி குணபர மகேந்திர பல்லவேந்திரர் வாழ்க!" என்ற கோஷம் மந்திரி மண்டலத்தார் வீற்றிருந்த படகிலேயிருந்து கம்பீரமாக எழுந்தது.

"மகா ராஜாதிராஜ அவனிசிம்ம லளிதாங்குர சத்துருமல்ல விசித்திரசித்த மத்த விலாச சித்திரக்காரப்புலி குணபர மகேந்திர பல்லவேந்திரர் வாழ்க!" என்ற கோஷம் கரையிலிருந்து எழுந்தது.

"குமார சக்கரவர்த்தி மாமல்லர் வாழ்க!" என்ற கோஷம் இரு பக்கங்களிலிருந்தும் எழுந்து வானளாவியது.

சங்கங்களும், எக்காளங்களும் காது செவிடுபடும்படி முழங்கின. முரசங்களும் பேரிகைகளும் எட்டுத் திசையும் அதிரும்படி ஆர்த்தன.

மகேந்திர பல்லவரைத் தொடர்ந்து வந்த வீரர்கள் முன்னால் வந்த படகிலே ஏறி அமர்ந்தார்கள்.

சக்கரவர்த்தியும் குமாரரும் குதிரைகளை ஏவலாளரிடம் ஒப்பு வித்துவிட்டு, 'இராஜஹம்ச'த்தில் ஏறி வெண்கொற்

றக்குடையின் கீழ்த் தங்கச் சிங்காதனத்தில் அமர்ந்தார்கள்.

படகுகள் மூன்றும் துறைமுகத்தை நோக்கிப் புறப்பட்டன.

வாத்திய முழக்கங்கள் நின்றதும், சக்கரவர்த்தி தம் குமாரரைப் பார்த்து, "நரசிம்மா! நான் உன்னிடம் வாக்குறுதி கேட்பதே உனக்கு விந்தையாயிருக்கும். அதற்கு நீ உடனே மறுமொழி கூறாததும் நியாயந்தான். விஷயம் இன்னதென்று தெரிந்து கொள்ளாமல் எந்த வாக்குறுதியும் கொடுக்கக் கூடாது. இராஜ்யம் ஆளும் பொறுப்பு உடையவர்கள் இதில் சர்வஜாக்கிரதையாயிருக்க வேண்டும்!" என்றார்.

"அதற்காக நான் தயங்கவில்லை. அப்பா! தாங்கள் என்னிடம் வாக்குறுதி கேட்க வேண்டுமா என்றுதான் யோசனை செய்துகொண்டிருந்தேன். எனக்குத் தாங்கள் கட்டளையிடுவதுதானே முறை? தங்கள் விருப்பத்திற்கு மாறாக எப்போதாவது நான் நடந்ததுண்டா?"

இந்த வார்த்தைகள் குமார சக்கரவர்த்தி இருதய பூர்வமாகக் கூறியவையானபடியால் அவருடைய நாத் தழுதழுத்தது.

மகேந்திரரும் உணர்ச்சி மிகுதியினால் சற்றுச் சும்மா இருந்துவிட்டு, பிறகு கூறினார். "பல்லவ சிம்மா! நான் எவ்வளவு கசப்பான கட்டளையிட்டாலும் நீ நிறைவேற்றுவாய் என்று எனக்குத் தெரியும். ஆனாலும், காரியத்தின் முக்கியத்தைக் கருதி உன்னிடம் வாக்குறுதி பெற வேண்டியிருக்கிறது. அதற்கு முன்னால் நான் உனக்குச் சில முக்கியமான விஷயங்களைச் சொல்லியாக வேண்டும். நாளை மறுநாள் நான் வடக்கே போர் முனைக்குக் கிளம்புகிறேன். எப்போது திரும்பி வருவேன் என்று சொல்வதற்கில்லை..."

"அப்பா! என்ன சொல்கிறீர்கள்? போர்முனைக்குத் தாங்கள் கிளம்புகிறீர்களா? என்னை இங்கே விட்டுவிட்டா?" என்று மாமல்லர் ஆத்திரத்துடன் கேட்டார்.

"நான் சொல்ல வேண்டியதையெல்லாம் சொல்லிவிடுகிறேன், நரசிம்மா! பிறகு, நீ கேட்க வேண்டியதைக் கேட்கலாம்" என்று சக்கரவர்த்தி கூறியதும், நரசிம்மர் மௌனமாயிருந்தார்.

மகேந்திரர் பிறகு கூறினார்: இந்தப் புரதனமான பல்லவ சாம்ராஜ்யத்தில் யுத்தம் என்று நடந்து வெகுகாலம் ஆகிவிட்டது. இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் நான் இந்த ராஜ்யத்தின் பொறுப்பை ஏற்றுக்கொண்டேன். பிறகு இதுவரை யுத்தம் என்பதே நடக்கவில்லை. என் தந்தை சிம்மவிஷ்ணு மகாராஜாவின் காலத்திலும் பெரிய யுத்தம் நடந்தது கிடையாது. அவருடைய ஆட்சியின் ஆரம்பத்தில், சோழ நாட்டுக்கும் பாண்டிய நாட்டுக்கும் நடுவில் புல்லுருவியைப் போலக் கிளம்பியிருந்த களப்பாள வம்சத்தை நிர்மூலம் செய்து உறையூர்ச் சிம்மாசனத்தில் சோழ வம்சத்தை நிலைநாட்டினார். அதன் பிறகு பல்லவ சைனியங்களுக்கு வேலையே இருக்கவில்லை! இப்போதுதான் முதன்முதலாக என் காலத்தில் யுத்தம் வந்திருக்கிறது. இதை என் இஷ்டப்படி நடத்துவதற்கு மந்திரி மண்டலத்தாரின் அநுமதி கொடுக்க வேண்டும். இந்த யுத்தத்தில் வெற்றியோ தோல்வியோ, எது நேர்ந்தாலும் என் தலையோடு போகட்டும். உனக்கு அதில் பங்கு வேண்டியதில்லை..."

இத்தனை நேரம் பொறுமையுடன் இருந்த நரசிம்மர் இப்போது குறுக்கிட்டு, "அப்பா! தோல்வி என்ற வார்த்தையை ஏன் சொல்லுகிறீர்கள்? யுத்தத்தில் நாம் அடையக்கூடியது வெற்றி அல்லது வீர மரணந்தானே? அதில் எனக்குப் பங்கு எப்படி இல்லாமற் போகும்?" என்று கேட்டார்.

"வீர பல்லவ குலத்துக்கு உகந்த வார்த்தை கூறினாய். நரசிம்மா! வெற்றி அல்லது வீர மரணந்தான் நமது குல தர்மம். ஆனால், வீர மரணத்தை நாம் இரண்டு பேரும் சேர்ந்தாற்போல் தேடி அடைய வேண்டியதில்லை! ஒருவர் செய்த தவறுகளைத் திருத்த இன்னொருவர் உயிர் வாழ வேண்டுமல்லவா?

ஒருவருக்காகப் பழி வாங்குவதற்கு இன்னொருவர் இருக்க வேண்டுமல்லவா?"

"அப்பா! போர் முனையிலிருந்து ஏதோ ரொம்பவும் கெடுதலான செய்தி வந்திருக்கிறது; - அதனால்தான் இப்படியெல்லாம் தாங்கள் பேசுகிறீர்கள்!"

"ஆம், குழந்தாய்! கெடுதலான செய்திதான் வந்திருக்கிறது! கங்கபாடிப் படை புலிகேசிக்குப் பணிந்துவிட்டது. நரசிம்மா! வாதாபிச் சைனியம் வட பெண்ணையை நோக்கி விரைந்து முன்னேறி வந்து கொண்டிருக்கிறது."

"இவ்வளவுதானே, அப்பா? துடை நடுங்கி



துர்விநீதனிடம் அது நாம் எதிர்பார்க்கக் கூடியதுதான். அதனால் என்ன? வட பெண்ணைக் கரையில் நமது வடக்கு மண் டலத்துச் சைனியம் அணி வகுத்து நிற் கிறதல்லவா? வேங்கியிலிருந்து என் மாமன் பெரும் படையுடன் கிளம்பி வருகிறாரல்லவா?"

"நரசிம்மா! வேங்கி சைனியம் நமது உதவிக்கு வராது. புலிகேசியின் சகோதரன் விஷ்ணுவர்த்தனன் இன்னொரு பெரும் படையுடன் வேங்கியை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறானாம்."

"ஆஹா! வாதாபி சைனியம் அவ்வளவு பெரிதா? நாம் மட்டும் ஏன்...?" என்று மாமல்லர் ஆரம்பித்து இடையில் நிறுத்தியபோது, அவருடைய குரலில் ஏமாற்றம் தொனித்தது.

"அது என் தவறுதான், நரசிம்மா! என் வாழ்நாளில் இப்படிப்பட்ட ஒரு யுத்தம் வருமென்று நான் எதிர் பார்க்கவில்லை. போர்க்கலை யில் கவனம் செலுத்த வேண் டிய காலத்தையெல்லாம் ஆட லிலும் பாடலிலும் சிற்பத்திலும் சித்திரத்திலும் கழித்து விட் டேன்..."

"அதனால் என்ன, அப்பா! சற்று முன்னால் ஆயனர் சொன்னாரே? உலகத்தில் எத் தனையோ சக்கரவர்த்திகள் இருந்தார்கள்; மறைந்தார்கள். அவர்களுடைய பெயர்களைக் கூட உலகம் மறந்துபோய்விட் டது. ஆனால் தங்களுடைய பெயரை என்றென்றைக்கும் உலகம் மறக்க முடியாது."

"ஆயினும், இந்த யுத்தத்தில் நாம் ஜயிக்காமல் போனால், மாமல்லபுரத்து மகத்தான சிற் பங்கள் எல்லாம் என்றைக்கும் நமது அவமானத்துக்கே சின் னங்களாக விளங்கும்!"

"ஒருநாளும் இல்லை. யுத் தத்தில் தோல்வியடைந்து உயி ரையும் வைத்துக் கொண்டிருந் தாலல்லவா தாங்கள் சொல் கிறபடி ஏற்படும்? போர்க்களத் தில் புறங்காட்டி ஓடி ஒளிந்து கொள் கிறவர்களையல்லவா உலகம் பழித்து நிந்திக்கும்? வீர மரணத்துக்கு ஆயத்தமாக யிருக்கும்போது, அவமானத்துக்கும் பழிக்கும் நாம் ஏன் பயப்பட வேண்டும்?" என்று மாமல்லர் ஆத்திரத்துடன் கூறி னார்.

"முடிவில் போர்க் களத்தில் வீர மர ணம் இருக்கவே இருக்கிறது. ஆனால், அதற்கு முன்னால் நம் பகைவர்களை வேரோடு அழித்து வெற்றியடையவே பார்க்க வேண்டுமல்லவா? அது அப்படி அசாத்தியமான காரியம் இல்லை. அவ காசம் மட்டுந்தான் வேண்டும்; வாதாபி மன்னன் யுத்த தந்திரத்தை நன்கு அறிந் திருக்கிறான், நரசிம்மா! ஆனாலும், முடி வில் அவனை முறியடித்து நாம் வெற்றி மாலை சூடுவோம்; சந்தேகமில்லை.



இதற்கு உன்னுடைய பூரண உதவி எனக்கு வேண்டும். நான் சொல்லுவது உனக்குப் பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும் அதன்படி நடக்க வேண்டும்..."

நரசிம்மர் மிக்க உணர்ச்சியோடும் உருக்கத்தோடும் தழுதழுத்த குரலில், "அப்பா! என்னிடம் தாங்கள் உதவி கோர வேண்டுமா? தாங்கள் என் அன்புக்குரிய அருமைத் தந்தை மட்டுமல்ல; என் உடல், பொருள் ஆவிக்கு உரிமையுடைய அரசர். எனக்கு எப்பேர்ப்பட்ட கட்டளையையும் இடுவதற்கு அதிகாரமுள்ள பல்லவ சாம்ராஜ்யத்தின் பிரதம சேனாதிபதி. எவ்வளவு கசப்பான கட்டளை வேண்டுமானால் இடுங்கள்; நிறைவேற்றக் காத்திருக்கிறேன்" என்றார்.

மகேந்திரர் சற்று மௌனமாயிருந்தார். அப்போது கீழ்த் திசையில் சிறிது தூரத்தில் கடற்கரைத் துறைமுகத்தின் காட்சி தென்பட்டது. கப்பல்களின் மேல் கம்பீரமாகப் பறந்த ரிஷபக் கொடிகள் வானத்தை மறைத்தன. சற்றுத் தென்புரத்தில் நெடுந்தூரம் பரவி நின்ற மாமல்லபுரத்துக் குன்றுகள் காட்சியளித்தன.

சிறிது நேரம் அந்தக் காட்சியில் கவனம் செலுத்திக் கொண்டிருந்த மகேந்திரர், சட்டென்று நரசிம்மரின் பக்கம் திரும்பி 'மாமல்லா! நாளை மறுநாள் நான் போர்க்களத்துக்குக் கிளம்புகிறேன் என்று சொன்னேனல்லவா? போர்க்களத்திலிருந்து திரும்பி வந்து இந்த மாமல்லபுரத்தில் நாம் ஆரம்பித்த சிற்ப வேலை பூர்த்தியாவதைக் காண்பேன் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது" என்றார்.

நரசிம்மர் மௌனமாய் இருக்கவே, மகேந்திரர் மேலும் கூறினார்:

"அப்படி ஒருவேளை நான் திரும்பி வராவிட்டால் இந்தச் சிற்பப் பணியை நீதான் தொடர்ந்து நடத்திப் பூர்த்தி செய்ய வேண்டும்."

"இந்த வாக்குறுதியைத்தானா என்னிடம் கோரினீர்கள்?" என்று மாமல்லர் வெடுக்கென்று கேட்டபோது அவருடைய குரலில் ஆத்திரமும் வெறுப்பும் தொனித்தன.

"இல்லை; அதைக் கேட்கவில்லை. நான் ஒருவேளை போர்க்களத்திலிருந்து திரும்பி வராவிட்டால் எனக்காக நீ பழிக்கு பழி வாங்க வேண்டும். புலிகேசியின் படையெடுப்பினால் பல்லவ சாம்ராஜ்யத்துக்கு ஏற்பட்ட அவமானத்தையும் பழியையும் துடைக்க வேண்டும்."

"அது என் கடமையாயிற்றே? கடமையை நிறைவேற்றுவதற்கு வாக்குறுதி வேண்டுமா?"

"குமாரா! அவ்விதம் பழிக்குப் பழி வாங்குவதற்காக நீ உன் உயிரைப் பத்திரமாய்க் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்."

நரசிம்மர் மௌனமாயிருந்தார். இன்னும் ஏதோ வரப் போகிறதென்று அவர் கவலையுடன் எதிர்பார்த்ததாகத் தோன்றியது.

"குழந்தாய்! சென்ற ஐந்நூறு ஆண்டு காலமாக வாழையடி வாழையாக வந்திருக்கும் இந்தப் பல்லவ குலம், இனியும் நீடிப்பது உன் ஒருவனையே பொறுத்திருக்கிறது. உன்னிடம் நான் கேட்கும் வாக்குறுதி இதுதான்; நான் திரும்பி வரும் வரையில் அல்லது நான் திரும்பி வர மாட்டேன் என்று நிச்சயமாய்த் தெரியும் வரையில் நீ காஞ்சிக் கோட்டையிலேயே இருக்க வேண்டும். எக் காரணத்தை முன்னிட்டும் கோட்டைக்கு வெளியே வரக்கூடாது! இதோ என் கையைத் தொட்டுச் சத்தியம் செய்து கொடு" என்று கூறி மகேந்திரர் தம் வலது கரத்தை நீட்டினார்.

நரசிம்மர் அவருடைய நீட்டிய கையைத் தொட்டு, "அப்படியே ஆகட்டும், அப்பா! தாங்கள் திரும்பி வரும் வரையில் காஞ்சிக் கோட்டையிலேயே இருப்பேன்!" என்றார்.

திடீரென்று தூரத்தில் சமுத்திரம் 'ஹோ' என்று ஆங்காரத்துடன் இரையும் பேரொலி கேட்டது.

மாமல்லரின் உள்ளத்திலும், ஆர்கலியின் அலைகளைப் போல் எத்தனை எத்தனையோ எண்ணங்கள் தோன்றி மறைந்தன.

(தொடரும்)

# கரடி-ஷோபா-நாசர்

ஒன்றுக்கொன்று தொடர்பே இல்லாத அடுக்குகள் கொண்டதாய் வாழ்க்கை சிலருக்கு அமைந்து போவதுண்டு. ஷோபா விஸ்வநாத் அந்தச் சிலரில் ஒருவர். இப்போது 'கரடி டேல்ஸ்' ஷோபா என்றால் எல்லோருக்கும் தெரியும், குறிப்பாக பத்து வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு.

'கரடி'க்கு முன்னால்-

ஷோபா பிறந்து வளர்ந்தது எல்லாம் மும்பையில். தாத்தா பரமேஸ்வரன், தந்தை நடராஜன். யாருக்குமே ஷோபாவின் எதிர் காலம் எப்படி அமையப் போகிறது அல்லது அமைய வேண்டும் என்று எந்தத் தீர் மானமும் இல்லை. ஏன், ஷோபாவுக்கே அப்படி எதுவும் இல்லை.

எட்டாவது வரை மும்பையில் பள்ளிப் படிப்பு. பின்னர் பன்னிரண்டாவது வகுப்பு வரை குவைத்தில். (அப்பாவுக்கு அங்கே வேலை)

பிறகு மீண்டும் மும்பையில் எஸ்.ஐ.ஈ.எஸ். கல்லூரியில் பி.எஸ்.ஸி. கெமிஸ்ட்ரி.

'என்ன, நீ ரசாயனத்தைத்தான் வாழ்க்கையாக எடுத்துக் கொள்ளப் போகிறாயா?' - கேட்பது உள்குரல்.

"இல்லை!"

"அப்போது?"

"இலக்கியம் படிக்க ஆசையாக இருக்கிறது."

"சரி... படி."

ரசாயனம் படித்த பின்பு ஆங்கில இலக்கியத்தில் எம்.ஏ. பட்டம் பெற்றார் ஷோபா.

கல்லூரியில் படிக்கும்போது ஓய்வு நேரத்தில் பார்வையிழந்தவர்களுக்குப் படித்துக் காட்டுவதும், அவர்களுக்காக அவர்கள் சொல்லச் சொல்லத் தேர்வு எழுதுவதும் ஷோபாவுக்குப் பிடித்திருந்தது.



* நாசர்-அனுராதா ஸ்ரீராம்

இவர் பி.எஸ்.ஸி. ரசாயனம் படித்துக் கொண்டிருந்தபோது, பௌதீக வகுப்பில விஸ்வநாத் மாணவராக இருந்தார். ரசாயனமும், பௌதீகமும் காதலித்தன.

"கல்யாணம் முடிந்தபின் நான் அவரோடு கொஞ்ச நாள் சென்னையில் இருந்தேன். அப்போது அவருக்கு அமெரிக்காவில் மிச்சிகனில் வேலையாயிற்று. அங்கே போய் ஏழு வருடங்கள் அமெரிக்க வாசம்."

அங்கே 'ஈஸ்டர்ன் மிச்சிகன் யூனிவர்ஸிடி' ஒரு துறையில் உலகப் புகழ் பெற்றிருந்



'சாரதி' வேலை பார்த்தார். சம்பளம் இல்லை. சந்தோஷம் மட்டுமே.

இடையில் கௌஷிக் பிறந்தான். வைஷ்ணவியும் வந்தாள். 'வந்தாள்' என்று சொல்லக் காரணம் இருக்கிறது. மகன் பிறந்ததும் கணவனும் மனைவியும் ஒன்றாக ஒரு முடிவு எடுத்தார்கள்.

"வாய்ப்பின்றி இருக்கும் பெண் குழந்தைகளில் ஒன்றைத் தத்து எடுத்து வளர்ப்போம். நமக்கென்று பெண் குழந்தை பெற்றுக் கொள்ள வேண்டாம்."

அமெரிக்க வாசம் முடிந்து புனே திரும்பியதும் அங்கே 'விக்கி படில் மெமோரியல் பள்ளி'யில் ஷோபாவின் சிறப்புத் தகுதிக்கேற்ப சிறப்புக் குழந்தைகளுக்கான ஆசிரியர் பணி கிடைத்தது.

அமெரிக்காவில் தன் மகனுக்காக அவர் வாங்கிக் குவித்திருந்த கல்வி ஆடியோ கேஸட்களின் தரமும், தன்மையும் ஷோபாவின் உள் மனத்தின் ஒரு மூலையில் ஆணி அடித்திருந்தன.

"நாம் இன்னும் நம் நாட்டுக் குழந்தைகளுக்கு ஸ்நோ ஒயிட்டையும், சின்ட்ரெல்லாவையும் ஸ்லீப்பிங் ப்யூட்டியையுமே சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கிறோமே, ஏன் நம்மிடம் விக்ரமாதித்யன் கதைகள் இல்லையா? தெனாலிராமன் இல்லையா? பஞ்சதந்திரக் கதைகளுக்குப் பஞ்சமா? ஏன் நமது குழந்தைகளுக்கு இவற்றை அவர்களை ஈர்க்கும் பாணியில் கொண்டு போகக் கூடாது?"

'கரடி டேல்ஸ்' பிறந்தது. அமெரிக்காவில் சேமித்த பணத்தையெல்லாம் கரடியில் கொட்டினார். விஸ்வநாத் தந்த இதயபூர்வ ஆதரவு இந்த முயற்சியின் முதுகெலும்பு.

விஸ்வநாத்தின் தம்பி ஸ்ரீராம் பரசுராம் அற்புதமான கர்நாடக சங்கீதக் கலைஞர். பின்னணிப் பாடகி அனுராதா ஸ்ரீராமின் கணவர். இன்னொரு சகோதரர் நாராயணனும் சங்கீதக் கலைஞரே. பின் என்ன?

தது. ஊனமுற்ற குழந்தைகளுக்குப் பாடம் சொல்லித் தருவதை ஒரு கலையாக அங்கே கற்றுத் தந்தார்கள். ஷோபா விரும்பியிருந்தால் அங்கேயே ஒரு நல்ல வேலையைத் தேடிக் கொண்டு பச்சை டாலர் நோட்டுகளைக் கட்டுக் கட்டாகப் பார்த்திருக்கலாம். ஆனால் பார்வையற்றவர்கள் பற்றிய சிந்தனையே அவருள் மேலோங்கியிருந்ததால் அந்தப் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து 'பிளைண்ட் எஜுகேஷன்' துறையில் சிறப்புப் பயிற்சி பெற்று தேர்ந்த ஆசிரியை ஆனார்.



அங்கே பார்வையிழந்தவர்களுக்குக் கண்ணாகவும், காலாகவும் ஷோபா மாறினார். அவர்களுக்காக தினமும் காரோட்டினார். எங்கெங்கு அவர்கள் போகவேண்டும் என்பதை முன்கூட்டியே அறிந்து கொண்டு அதற்கேற்ப தன் அன்றாட அலுவலைக் கச்சிதமாக ஒழுங்கு படுத்திக் கொண்டு, பின் தமது காரை எடுத்துக் கொண்டு போய்

எல்லோரும் சேர்ந்து கை தட்ட கரடி கதை சொல்லியது. பஞ்சதந்திரக் கதை.

தம் முயற்சியை விளக்கி முன்பின் அறிமுகமில்லாத நடிகர் நஸ்ருதீன் ஷாவுக்கு ஷோபா கடிதம் எழுதினார். விரும்பி முன் வந்தார் ஷா. பிரச்னை ஏதுமின்றி, எவ்வளவு சம்பளம் என்றுகூட கேட்காமல் 'இத்திட்டம் வெற்றியடைய வேண்டும்' என்று வாழ்த்தி பின்னணிக் குரல் தந்தார்.

இன்று 'கரடி டேல்ஸ்' ஆங்கிலப் பதிப்பு இருபதாயிரம் பிரதிகள் விற்றுத் தீர்ந்திருக்கின்றன. கதைகள், கூடவே ஓர் ஒலிநாடா. நாடாவை ஓடவிட்டால் நாம் படிக்க படிக்க டேப்பிலிருந்து அதே வரிகள் பேசப்படும். புத்தகம் வாங்கினால் அதோடு கேஸட்டும் சேர்ந்து கிடைக்கும். பார்வையிழந்தவர்கள் 'பிரெயில்' மொழியிலும் புத்தகம் உண்டு.

ஆங்கிலத்தில் கிடைத்த வெற்றி, கரடியை ஹிந்தியில் பேச வைத்தது. அதுவும் வெற்றி!

ஷோபாவின் பார்வை தமிழ் பக்கம் திரும்பியது. "தமிழில் மொழி பெயர்க்க சரியான நபரைத் தேடிக் கொண்டிருந்தேன். சில ஸ்கிரிப்டுகள் தயாரானது. எனக்கு தமிழில் கமல் ஸார் குரல் தர வேண்டும் என்று ஆசை. ஸ்கிரிப்டுகளை அவருக்கு அனுப்பினேன். 'எதுவும் சரியாக இல்லை. என் நண்பர் எழுத்தாளர் சுஜாதாவுடன் தொடர்பு கொள்ளுங்கள்' என்றார் கமல். சுஜாதா அவர்கள் இரா. முருகன் அவர்களை அறிமுகப்படுத்தி வைத்தார். அற்புதமாய் வந்தது ஸ்கிரிப்ட். குரல் கொடுக்க மனமிருந்தும் கமலுக்கு நேரமில்லை. சிவாஜி ஸாரை வைத்துப் பண்ண எண்ணியிருந்தோம். ஆனால் அதற்குள் இறைவன் வேறு விதமாக எண்ணிவிட்டான். எல்லோரும் பின்னர் ஒரு முகமாக சிபாரிசு செய்த பெயர் நாஸர். அவருடன் பணியாற்றியதே ஓர் இனிய அனுபவம். பந்தா ஏதுமின்றி வந்தார். தன் பணியைச் செய்தார்."

கரடி டேல்ஸ் ஹிந்தியில் 'கரடி கதா' வாகி இப்போது தமிழில் 'கரடி கதை'யாக அண்மையில் வெளியாகியிருக்கிறது.

குழந்தைகளின் சிந்தனையையே மிகச் சிறந்த முறையில் தூண்டி வருகிறது இந்தக் கரடி கதை.

- ராணிமைந்தன்

படங்கள் : வெங்கடேஷ்

'யோகாசனம்தான் செய்யணுமா? நாங்க தினசரி 'வாக்கிங்' போகிறோம். அரைமணி நேரம் உடற்பயிற்சி செய்கிறோம். இது போதாதா?' என்ற ரீதியில் கடிதங்கள் வருகின்றன. நாங்கள் நடத்தும் 'யோகாசன முகாம்'களிலும் இது போன்ற கேள்விகள் நிறைய எழும். யோகாசனப் பயிற்சிக்கும், உடற்பயிற்சிக்கும் இடையே உள்ள முக்கிய வேறுபாடுகளைப் பட்டியலிட்டே காண்பித்து விடுகிறேன்.

| யோகாசனப் பயிற்சி | உடற்பயிற்சி |
|---|---|
| நரம்பு மண்டலத்தைக் கட்டுப்படுத்தி, உடலைச் சரியான எடைக்குக் கொண்டு வருகிறது. அதனால் உடல் சரியான எடையில் இருக்கிறது. | தசைகளை வலுப்படுத்த அதிகமாக முயற்சி மேற்கொள்ளப்படுவதால், வலுவான தசைகள் உருவாகி, உடல் எடை கூடுகிறது. |
| தசைகளின் இறுக்கத்தைத் தளர்த்தி, ஓய்வு கொடுக்கின்றது. அதனால் அவை, சீரான ரத்த ஓட்டம் பெறுகின்றன. | தசைகள் இறுக்கப்படுவதால் ரத்த ஓட்டம் துரிதப்படுகின்றது. |
| உடல் சக்தி குறைவாகச் செலவிடப் படுகிறது. | உடல் சக்தி அதிகமாகச் செலவிடப் படுகிறது. |
| உடல் வலிமையையும் வனப்பையும் ஒரே சீராக வாழ் நாள் முழுவதும் காக்கிறது. | குறிப்பிட்ட கால அளவே காக்கின்றது. வயதாக ஆக, வலுவும், வனப்பும் குறைந்து தளர்ந்து விடும். |
| யோகாவைப் பொருத்தவரை, பயிற்சிகளைத் தொடங்க வயது, வரம்பு கிடையாது. | உடற்பயிற்சிக்கு வயது வரம்பு உண்டு. |
| இரத்த ஓட்டம் உடலின் உள் உறுப்புகளுக்குச் செலுத்தப்பட்டு வலிமை பெறுகின்றது. | இரத்த ஓட்டம் தசைகளுக்குச் செலுத்தப்பட்டு, வெளி உறுப்புகள் வலிமை பெறுகின்றன. |
| மன அமைதி, உடல் ஓய்வு, உடல் ஆரோக்கியம் மூன்றும் இணைந்த நல்வாழ்வு நிச்சயம். | உடல் சக்தி முழுவதும் செலவழிந்து உடல் சோர்வு ஏற்படுகின்றது. |

# 'சாந்தம் தரும் சின்முத்திரை'

எனவே, யோகப்பியாசம் வேறு, உடற்பயிற்சி என்பது வேறு.

இந்த வார ஆசனத்தை, ஓர் அழகான யோக மொழியோடு ஆரம்பிக்கலாம்.

> **யோக மொழி**
>
> **ஆரோக்கியம் உள்ளவனுக்கு நம்பிக்கை இருக்கும். நம்பிக்கை உள்ளவனுக்கு எல்லா வளமும் கிடைக்கும்.**





## ஆல் இன் ஒன் பத்மாசனம் :

பத்மம் - தாமரை. தாமரையின் தண்டு போல் நமது முதுகுத் தண்டை நிமிர்த்தி அமரும் ஆசனம். மிகவும் சுலபமான ஆசனம். ஆனால் தரும் சௌக்கியங்கள் ஏராளம்.

எப்படிச் செய்வது?

1. விரிப்பின் மீது கால்கள் நீட்டி அமரவும்.

2. உடலை, நன்றாக தளர்த்தி, மிகவும் ரிலாக்ஸ்டாக உட்காரவும்.

3. வலது காலை மடித்து, பாதத்தை இடது தொடை மீது வயிற்றை ஒட்டியவாறு வைக்கவும்.

4. இடது காலை மடித்து, பாதத்தை வலது தொடைமீது, வயிற்றை ஒட்டியவாறு வைக்கவும்.

5. முதுகுத் தண்டை நிமிர்த்தி உட்காரவும் சின் முத்திரை (பார்க்க : படம்) கைகளை மடிக்காது நேராக வைக்கவும்.

6. கண்களை மூடி, 50 எண்ணிலிருந்து தொடங்கி, '49, 48, 47' என மனசுக்குள்ளேயே எண்ணி '0'வில் முடிக்கவும்.

7. கண்களைத் திறந்து, சின் முத்திரையைக் கலைத்து, கால்களைப் பிரித்து, நீட்டி, வெகு அமைதியாக உட்காரவும்.

பலன்கள் என்னென்ன?

1. இடுப்புப் பகுதி பலம் பெறுகிறது.

2. நரம்பு மண்டலத்தை அமைதிப்படுத்துகிறது.

3. தியானம், மூச்சுப் பயிற்சி, குண்டலினி யோகம் ஆகிய பயிற்சிகளைச் செய்ய உதவுகிறது.

4. தொடை, கெண்டைக்கால் தசைகளின் கொழுப்பைக் குறைக்கிறது.

5. வாதம் (காற்று) பித்தம் (உஷ்ணம்) சிலேத்துமம் (நீர்) ஆகிய மூன்று தோஷங்களைச் சமச்சீராக வைக்கிறது.

6. கூன்முதுகு நிமிரும்.

7. இளம்பிள்ளை வாத நோய்க்குச் சிறந்தது.

8. கோபம் குறைந்து, சாந்தம் மேலிடும்.

9. எதையும் எளிதென எடுத்துக் கொள்ளும் இனிய சுபாவம் ஏற்படும்.

10. ஆண்மைக் குறைவைப் போக்கும்.

11. கால்வலி, குதிகால்வலி போன்ற வாத நோய்கள் தீரும்.

ஒரே இடத்தில் அமர்ந்து வேலை செய்பவர்கள், காலையும் மாலையும் அரைமணி நேரம் பத்மாசனம் பழகி வந்தால், உடம்பில் சதை போடாது. பணியை ஊக்கத்துடன் செய்ய முடியும். விடாமல் பயிற்சி பண்ணுங்கள். சரி... அப்ப அடுத்த வாரம்.

டாக்டர் ஏ.எஸ்.அசோக்குமார்

படம் : ஸ்ரீஹரி

**எச்சரிக்கை : இங்கே தரப்பட்டுள்ள யோகாசன பயிற்சி முறைகள் தகவலுக்காக மட்டுமே. இவை வழிகாட்டி முறைகள் அல்ல. யோகாசன நிபுணரின் நேரடி கண்காணிப்பில்தான் பயிற்சி தொடங்க வேண்டும்.**

# ஹோமியோ - சித்தா - ஆயுர்வேத முக்கூட்டு மருத்துவத்தால் குழந்தை பெறலாம்!

மருத்துவத்தில் இன்று எத்தனையோ விஞ்ஞான முன்னேற்றங்கள் இருந்தாலும், குழந்தைச் செல்வம் உண்டாவது என்பது 'இறைவன் கொடுத்த வரம்' போல் ஆகி விட்டது.

''குழந்தைப்பேறு இல்லாத தம்பதியரில், குறைபாடு கணவனிடம் இருந்தாலும் சரி, மனைவியிடம் இருந்தாலும் சரி, அவர்களை இயற்கையாகவே குழந்தைபேற்றுக்குத் தகுதி உள்ளவர்களாக ஆக்கும் – பக்கவிளைவுகள் இல்லாத சிகிச்சை, நாங்கள் கடைப்பிடிக்கும் 'ஹோமியோபதி – சித்தா – ஆயுர்வேதம்' என்ற முக்கூட்டு மருத்துவ முறையாகும்'' என்று கூறுகிறார் 'நவீன வைத்தியாலயா' என்ற பெயரில் திருவண்ணாமலை மாவட்டம் வந்தவாசியில் பிராமணர் தெருவிலும், சென்னை வடபழனியில் 100 அடி சாலையில் கவுரி சங்கர் திருமண மண்டபம் எதிரிலும் சிகிச்சை நிலையங்கள் நடத்தி வரும் டாக்டர் ஏ. அர்ஜுனா.

''கடந்த 40 ஆண்டுகளுக்கும் மேலான என் மருத்துவ அனுபவத்தில் ஆயிரக்கணக்கான தம்பதியர்களுக்குச் சிகிச்சையளித்திருக்கிறேன்.



• ஆணுக்கு உயிரணு உற்பத்தி ஆகியும், பெண்ணுக்கு கருக்குழாய் அடைப்பு நீங்கியும் குழந்தை பெற்ற சென்னை வியாசர்பாடியைச் சேர்ந்த திருமதி புஷ்பா சக்ரபாணியும் - குழந்தைகளும் டாக்டர் அர்ஜுனாவுடன்.

''என்னிடம் வரும் தம்பதியரில் ஆண்களில் 70 சதவிகிதம் பேரும், பெண்களில் 30 சதவிகிதம் பேரும் குறைபாடு உடையவர்களாக இருக்கிறார்கள்'' என்று விவரம் தெரிவித்தார் அர்ஜுனா.

குழந்தைப்பேறு இல்லாமல், குடும்பத்தில் பிரச்னைகள் ஏற்பட்ட காரணத்தால் தற்கொலைக்கு முயன்ற பெண்களை, தனது சிகிச்சை முறையில் தடுத்து நிறுத்தியிருப்பதாகக் கூறுகிறார் டாக்டர் அர்ஜுனா. அதுபோல், ''மனைவிக்குக் குழந்தை இல்லை என்பதற்காக மறுமணம் புரியவிருந்த கணவன்மார்களுக்கு நம்பிக்கையூட்டி, அவர்கள் குடும்பத்தில் குழந்தைச் செல்வம் உண்டாக்கி மகிழ்ச்சியூட்டியிருக்கிறேன்''என்கிறார் அவர்.

''எங்களிடம் வரும் தம்பதியரிடம் சிகிச்சைத் தொடங்கும் முன் கணவனின் உயிரணு உற்பத்திச் சரியாக இருக்கிறதா என்பதைக் கண்டறிய விந்துப் பரிசோதனை செய்யச் சொல்வோம். அதில் குறைபாடு இருந்தால் எங்களது முக்கூட்டு மருந்துகள் மூலம் சரியாகும் வரை அவர்களுக்குச் சில கட்டுப்பாடுகளுடன் சிகிச்சை அளித்து, உயிரணுக்கள் உற்பத்தி செய்து அணுக்களின் எண்ணிக்கை – உயிரோட்டத்தை அதிகரிக்கச் செய்து கருத்தரிக்கச் செய்கிறோம்.

பொதுவாக ஓர் ஆணின் உயிரணுக்களின் எண்ணிக்கை சராசரியாக 100 முதல் 150 மில்லியன் வரை இருக்கும். அந்த அணுக்களின் உயிரோட்டம் மொட்டிலிட்டி 80 சதவிகிதத்திற்கு மேல் இருக்க வேண்டும்.

நாங்கள் சராசரிக்கும் குறைவாக உள்ளவர்களைக் கூட புத்திரபாக்கியத்திற்குத் தகுதி உடையவர்களாக ஆக்கியிருக்கிறோம். ஆண்தன்மை அறவே இல்லாத ஆண் மகனுக்கு ஆண்தன்மை உண்டாக்கிப் புத்திரபாக்கியம் உண்டாக்கியிருக்கிறோம்.

எங்களிடம் சென்னையில் சிகிச்சைக்கு வந்த ஒரு ஆணுக்கு 3.2.2000ல் கவுண்ட் 6 லட்சமும், மொட்டிலிட்டி 50% இருந்தது. அவர் மருந்து சாப்பிட்டு ஒரு மாதத்திற்குள் செமன் டெஸ்ட் பரிசோதித்ததில் 26.2.2000ல் மொட்டிலிட்டி 80%ம் கவுண்ட் 50 மில்லியன் உயர்ந்திருக்கிறது. அடுத்து மருந்து சாப்பிட்டதில் மீண்டும் 31.3.2000 கவுண்ட் 110 மில்லியன் உயர்ந்திருக்கிறது. வேறு எங்கும் காண முடியாத இது ஒரு உலக சாதனையாகும்.

**ஆண் மலட்டுத்தன்மைக்கான காரணங்கள் :**

ஆண்களுக்கு இளம் வயதிலேயே புட்டாளம்மை வந்தாலும், அம்மை வந்திருந்தாலும், மஞ்சள் காமாலை, டைபாய்டு ஜுரத்தால் பாதிக்கப்பட்டிருந்தாலும், விதைகளில் அடிபட்டிருந்தாலும், வெப்பம் அதிகமுள்ள இடங்களில் வேலை செய்வதாலும், இந்திரிய நரம்புகள் இல்லாமல் பிறந்திருந்தாலும்,

அவர்களால் புத்திரபாக்கியம் அடைய முடியாத நிலை உள்ளது.

சில ஆண்களுக்கு முறையற்ற சிற்றின்ப பழக்கங்கள், அதிகமான போதைப் பொருட்களின் பழக்கம், மற்றும் நீரிழிவு நோய் இருந்தாலும் குழந்தை பிறக்கச் செய்வதற்கான தகுதி இழந்து போகிறார்கள். அவர்களுக்கு எங்கள் முக்கூட்டு மருத்துவ சிகிச்சையால் உயிரணு உற்பத்தி செய்து புத்திரபாக்கியம் அடையச் செய்ய முடியும்.

**பெண் மலட்டுத்தன்மைக்கான காரணங்கள்:**

பெண்களின் பிரச்னைகளைப் பொறுத்தவரையில், வளர்ச்சியே இல்லாமல் இருக்கும் பெண்களின் கர்ப்பப்பையை வளர்ச்சியடையச் செய்கிறோம். சில பெண்களுக்கு வீட்டு விலக்கு ஒழுங்கில்லாமல் இருக்கும். அதை ஒழுங்குபடுத்துகிறோம். சில பெண்களுக்கு மாதந்தோறும் வீட்டு விலக்கின் போது சூதக வயிற்று வலி வரும். இதனால் கருத்தரிக்க வாய்ப்பில்லாமல் போகும். இந்தக் குறையையும் எங்கள் முக்கூட்டு மருந்துகளால் குறைபாடுகளை நீக்கி கருத்தரிக்கச் செய்கிறோம்.

சில பெண்களுக்குக் கருமுட்டை உற்பத்தி இருக்காது. எங்கள் முக்கூட்டு மருத்துவத்தால் கருமுட்டை உண்டாக்கி, கருவுறச் செய்கிறோம். இத்தகையவர்களை ஸ்கேன் மூலம் பரிசோதிக்கச் செய்து, கருமுட்டை உற்பத்தி நிலையை அறிந்து கருத்தரிக்கச் செய்கிறோம்.

பெண்களுக்குள்ள பிரதான பெரிய பிரச்னை, கருக்குழாயில் சதை அடைப்பு ஏற்படுவது. அதை முக்கூட்டு மருந்துகளால் கரைத்து அடைப்பை நீக்கி விடுகிறோம்.

சென்னை குரோம்பேட்டையைச் சேர்ந்த ராஜா – அலமேலு தம்பதியர் திருமணமாகி நான்கு வருடங்கள் குழந்தை இல்லாதிருந்து, பல டாக்டர்களிடம் சிகிச்சை பெற்று பலனின்றி தோல்வியுற்ற பின்னர் எனனிடம் வந்தார்கள். தம்பதியரில் இருவருக்கும் குறைபாடுகள் இருந்ததால், அவர்களுக்கு முக்கூட்டு மருந்து கொடுத்து சிகிச்சையளித்ததில், திருமதி ராஜாவுக்கு கடந்த 6.3.2001 அன்று ஆண் குழந்தை பிறந்துளளது.

பெங்களூரில் வசிக்கும் தம்பதியினருக்கு 20 ஆண்டு காலம் குழந்தை இல்லாமல் இருந்து முக்கூட்டு மருத்துவத்தின் மூலம் குழந்தை பிறந்துள்ளது. மதுரையைச் சேர்ந்த அரசாங்கத்தில் பணிபுரியும் ஒரு மாவட்ட அதிகாரிக்கு 23 ஆண்டு காலம் குழந்தை இல்லாதிருந்து எங்களிடம் சிகிச்சை பெற்ற அவரது மனைவிக்கு கடந்த 5.6.2000ல் பெண் குழந்தை பிறநதுள்ளது.

- சென்னை கிண்டியில் கோபால் – சித்ரா தம்பதிகளுக்கு பல ஆண்டுகள் குழந்தை இல்லாமல் இருந்தது. பெண் குழந்தை பிறந்துள்ளது.
- விழுப்புரம் மாவட்டம் செஞ்சி அவலூர் பேட்டையில் சுந்திரமூர்த்தி தம்பதிகளுக்கு ஆண் மகன் பிறந்துள்ளது.
- சென்னை, வடபழனி, கங்கையம்மன் கோயில் தெருவைச் சேர்ந்த, எங்களிடம் சிகிச்சைப் பெற்ற ஒரு முஸ்லீம் பெண்மணி தற்போது கர்ப்பவதியாக உள்ளார்.
- தஞ்சாவூர் புரசகுடியில் சௌந்தர்ராஜன் வனரோஜா தம்பதிகளுக்கு ஒரு பையன் பிறந்துள்ளது. மீண்டும் வனரோஜா தற்போது கர்ப்பமாக உள்ளார்.
- பாண்டிச்சேரி கணபதிபட்டில் சாந்தி செல்வராஜ் தம்பதிகளுக்கு பெண்ணும், பையனும் பிறந்துள்ளார்கள்.

இப்படி எங்கள் சிகிச்சையில் பல ஊர்களில் மாதா, மாதம் குழந்தைகள் பிறந்து கொண்டிருக்கின்றன.

எங்கள் மருத்துவமனையில், தமிழ்நாட்டில் எல்லா மாவட்டங்களிலிருந்தும், இந்தியாவின் அனைத்து மாநிலங்களிலிருந்து வந்தும்; அயல்நாடுகளில் அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ், கனடா, சுவிட்சர்லாந்து, நியூசிலாந்து, சவுதி அரேபியா, துபாய், குவைத், பக்ரைன், ரியாத், ஓமன், இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், ஜெர்மனி போன்ற வெளி நாடுகளில் இருந்து வந்தும் சிகிச்சை பெற்று பயனடைந்து வருகிறார்கள்.

எங்களிடம் சிகிச்சை பெற்று கர்ப்பமடைந்தவர்கள் கர்ப்பமடைந்த பின் 6 மாதம் வரை ஆங்கில மருத்துவர்களிடம் சென்று ஆங்கில மருந்துகளைச் சாப்பிட்டால் கருச்சிதைவு ஏற்படவும் வாய்ப்புண்டு.

ஒரு ஜாதி மருந்துகளால் உருவாகும் கரு, வேறொரு ஜாதி மருந்தினால் பாதிக்கப்பட வாய்ப்புண்டு. அதனால் பிரசவம் ஆகும் வரை உஷாராக இருக்க வேண்டும். அப்போதுதான் சுகப்பிரசவம் ஏற்படும் என்றார் **டாக்டர் அர்ஜுனா**. சுகப்பிரசவத்திற்கு மருந்து உண்டு என்கிறார் அவர்.

நீங்களும் குறைந்த செலவில் புத்திர பாக்கியம் அடைய **டாக்டர் ஏ. அர்ஜுனா**, அவரது மனைவி **டாக்டர். வி.ஏ.ஆண்டாள்** அவர்களை அணுகவும்.



• டாக்டர் அர்ஜுனா, டாக்டர் V.A. ஆண்டாள் அர்ஜுனா



முன் நிகழ்ந்திருக்க வேண்டும் என்பது சரவணனுக்கு அவர்களது பாவனைகளைப் பார்த்தவுடனேயே புரிந்து கொள்ள முடிந்தது. ஆனால் அவனது தற்போதைய மனநிலையில் இந்த 'அற்ப' சமாச்சாரங்களை ஒரு பொருட்டாக அவனது மனம் எண்ணவில்லை. 'இந்த வெட்டிப் பசங்க எதையாவது சொல்லி நம்மைக் கேலி பண்ணுவாங்க' என்று எண்ணிக் கொண்டான்.

''வாடா சரவணா.... பயங்கர

# பூவசம் இரு

அன்றைய தினம் காலையிலிருந்தே சரவணன் சரவணனாக இல்லை. நிற்கையிலும், நடக்கையிலும், சும்மா அமர்ந்திருக்கையிலும் மனசு மட்டும் காற்று வெளியில் அலைந்து கொண்டிருந்தது. கண் மட்டும் வெற்றுப் பார்வை பார்த்துக் கொண்டிருந்தது.

ஏதோ சாப்பிட்டுவிட்டு, வீட்டில் கேட்ட கேள்விகளுக்கு என்னமோ பதில் சொல்லிவிட்டு வெளியே நடந்தான்.

சகாக்களிருக்குமிடம் தேடிப் போன போதும் சரவணனின் மனத்தில் சகாக்களில்லை. கிருஷ்ணவேணி இருந்தாள். கிண்டலுடன் தலைசாய்த்து நோக்கும் அவளது சிரிப்பு இருந்தது. இரவு எப்போது வரும் என்கிற எதிர்பார்ப்பு இருந்தது. இரவுக்கும், இந்த நிமிடத்துக்குமிடையே இருக்கின்ற இடைவெளி குறித்த பொறுமையின்மை இருந்தது.

பாலத்தினருகே அனைவரும் 'செட்'டாகக் கூடியிருந்தனர். இவனைப் பார்த்ததும் சுந்தர், அர்த்தபுஷ்டியுடன் மற்ற இருவரையும் பார்த்து கண்ணடித்துச் சிரித்தான். அவர்களும் ஏதோ ஒரு வித ஆமோதிப்புடன் சிரித்தனர்.

தன் சார்ந்த ஒரு பேச்சு அங்கே சற்று

முன்னேற்றம் போல்ருக்கு!'' என்றான் பாவா.

''என்ன முன்னேற்றம்? உங்களை விட்டுட்டு நான் எங்கே முன்னேறிடப் போறேன்?''

''யேய்...தெரியும்டா சும்மா நிறுத்து... சினிமாவுக்கெல்லாம் போயிருக்கீங்க நீயும் சுந்தர்பயலும்.''

''ஆமா. அதுக்கென்ன... அன்னிக்கு டவுனுக்கு உங்களைக் கூப்பிட்டனா இல்லையா? நீங்கதான் பெரிசா வெட்டி முறிச்சு, வேலை பாக்குறவங்க மாதிரி ஒட்டம் பெல்லாம் அசதியா இருக்கு.... நீங்க போய்ட்டு வாங்கடான்னு சொன்னீங்க... நானும் சுந்தரும் போனோம். பேங்க்ல வேலை முடிச்சதும் அப்பிடியே சினிமாவுக்குப் போனோம்.... என்னடா சுந்தரு?''

''கரெட்டுதான்.''

''அப்புறம் ஏன் இவங்க இரண்டு பேரும் ஒரு நக்கல் சிரிப்பு சிரிச்சுக்கிட்டே கேக்கு

நாங்க.... நீ வேற ஏதாச்சும் சொன்னியா?''

"சுந்தர் சொல்லலைடா... வீரையண்ணன் சொன்னாரு.''

"வீரையண்ணனா... அவரு என்னடா சொன்னாரு?''

"விலக்கு பஸ் ஸ்டாப்புல உங்களுக்காக வெய்ட் பண்ணிக்கிட்டிருந்தாராம், நீயும், சுந்தரும் 'ஃபேமிலியோட' வந்து எறங்கினீங்களாம்.''

''அது...ஏய்! அவங்களும் டவுனுக்கு சினிமாவுக்கு வந்திருந்தாங்க... அவங்க போனது வேற படத்துக்கு....''

"ஆமா.'' என்றான் சுந்தர்.

"நாங்க பாத்த படம்.....பயங்கரமான படம்... மிஸ் பண்ணிட்டீங்கடா... பிச்சுப் புட்டாங்க.''

சரவணன் சுந்தரை-முறைத்தான், "ஏண்டா இந்த நாயும் எங்கூட வந்துச்சில்ல... அப்புறமென்ன இவனும் உங்களோட கூட்டுச் சேர்ந்து நான் வர்றையில நக்கலா சிரிக்கிறான்.''

''யேய்....சரவணா, நீ பெரிய ஆள்ரா.... அவனையே நைஸா கழட்டி விட்டுட்டியாம்ல... கிருஷ்ண வேணிகிட்ட தனியா கடலை போட்டுக் கிட்டு வந்தியாம்ல...''

சரவணன் சுந்தரை முறைத்தான். பிறகு சொன்னான்.... "ஆமாடா... இவன் அம்சவேணியோட கடலை போட்டுட்டு வந்தான்.''

"ஏண்டா சுந்தரு! இதை நீ சொல்லவேயில்லை...!நீ இவனை விட பெரிய ஃபிராடா இருக்கே.''

சுந்தர் கடுப்பாகச் சொன்னான், "அடப் போங்கடா.... அதென்ன ஆளாடா... வேஸ்ட்டு...''

இப்போது நண்பர்களின் கவனம் முழுதும் சுந்தரிடம் திரும்பி விட்டது.

''என்னடா....ஏன் அம்சவேணியை வேஸ்ட்டுங்கற...''

"அது சரியான பயந்தாங்கொள்ளிடா...



ஒண்ணும் சரியாவே பேசிக்கிறலைடா...''

சரவணன் தனது சாமர்த்தியத்தைக் காட்டினான். "அதெப்படிரா.... தியேட்டர் லருந்து பஸ் ஸ்டாண்ட் வர வரைக்கும் பேசிக்கிட்டே வந்தான்.... அப்புறம் பஸ்ல அவ உக்காந்திருந்தா. இவன் அவ பக்கத்துல நின்னு பேசிக்கிட்டே இருந்தான், ஊர் வர்ற வரைக்கும். ஏண்டா? அப்புறமென்ன சரியாவே பேசிக்கிறலைன்னு கதை விடுற?'' என்றான் சுந்தரைப் பார்த்து.

சுந்தர் கடுப்புடன் சொன்னான். "போங்கடா நான்தான் என்னென்னத்தையோ பேசிக்கிட்டு வந்தேன். நம்ம ஊரு.... நம்ம ஸ்கூலு, காலேஜ்னு ஒண்ணு விடலை.... ஆனா அவ எண்ணி எண்ணிப் பேசுறாடா... அதுல ஜாஸ்தி ஸ்டைலு வேற...''

''ஸ்டைலா... அவ சுமார் பார்ட்டி தானடா. கிருஷ்ணவேணியளவு பெர்சனாலிட்டி இல்லையே, அப்புறமென்ன ஸ்டைலு'' என்றான் சரவணன். அவனை சுந்தர் முறைத்தான், "பாத்தீங்களாடா அவன் ஆளைப் பத்தி புகழ்ச்சியாப் பேசுறான் பாரு... ம்ஹ்ம்...'' என்றவன்,

"அம்சவேணி எஸ்.எஸ்.எல்.சி. வரைக்கும் படிச்சுச்சாம்... பசங்க நிறைய பேரு லவ் லெட்டர் குடுப்பாங்களாம். இது யாரு குடுத்தாலும் லவ் லெட்டரை வாங்கிக்கிருமாம்.''

நண்பர்கள் ஆர்வமானார்கள், "பரவால்லையே வாங்கி....?''

"அதுக்கப்புறந்தான் கொடுமை... லவ் லெட்டரையெல்லாம் வாங்கியாந்து அவங்கம்மாகிட்ட குடுத்துருமாம்.''

எல்லோருக்கும் உற்சாகக் காற்று குறைந்தது.

"அடச்சீய்.''

''எனக்கு ஃபர்ஸ்ட்ல ஒரு ஐடியா இருந்துச்சு.... அடுத்த மீட்டிங்ல லெட்டர் குடுத்திரலாம்னுட்டு... இதைக் கேட்டதுமே கேன்சல் பண்ணிட்டேன்.''

அனைவரும் சிரித்தனர். சிரிப்பில் கலந்து கொண்ட சரவணனின் மனத்தில் வினோத எண்ணங்கள்.. 'தனக்கு வர்ற லவ் லெட்டரை மறைக்காம அம்மாகிட்ட குடுத்துடற அம்சவேணி... ஆனா... தனியா பேசணும்னு சொன்னவுடனே... இராத்திரி பத்து மணிக்கு மேல வாங்கன்னு சொல்லிட்டாளே கிருஷ்ணவேணி... பயங்கரமான ஆளா இருக்காளே' என்று நினைத்துக் கொண்டான்.

சுந்தர் தொடர்ந்து ஏதேதோ பேசிக் கொண்டே இருந்தான். அந்தப் பேச்சின் சாரம் சுருக்கமாக. – அம்சவேணி மாநிறம் தான். ஆனாலும் இதுவரை பல ஆண்கள் அவளால் கவரப்பட்டு இருக்கின்றனர். ஆனால் அவளுக்குத்தான் ஆண்கள் மீது பெரிதாக ஈடுபாடு கிடையாது. அதற்குக் காரணமுண்டு. அவர்களில் பலர் பழகிவிட்டு சந்தர்ப்பம் வாய்க்கையில் 'கட்' பண்ணிவிட்டுப் போய் விடுகிற எண்ணமுடையவர்கள். அம்சவேணி ஆள் சுமாரே தவிர அறிவு ஜாஸ்தி. அவர்களை அவள் சுலபமாக இனங்கண்டு ஒதுக்கி விடுகிறாள். அந்த விஷயத்தில் அவள் பாலையும், நீரையும் பிரிக்கிற அன்னப் பறவை மாதிரி. சுலபத்தில் அவள் யாரையும் நம்பிவிட மாட்டாள். சுந்தர் மீது அவளுக்கு நம்பிக்கை இருக்கிறது. அவனது பேச்சிலும், சிரிப்பிலும் அவன் நல்ல பையன் என்று தெரிகிறது... ஒரு குட் ஃபிரண்ட்டாக இருப்பான் என்று மனசுக்குப் படுகிறது. இதனை அவள்









சொல்கையில் அவளுக்கு லெட்டர் குடுக்க வேண்டும். லவ் பண்ண வேண்டும் என்ற எண்ணங்களெல்லாம் கொஞ்சம் பின்னாடி போய், 'ச்சே நல்ல பெண் இவளுக்கு முதலில் நல்ல ஃபிரண்டாக இருக்க வேண்டும்' என்று சுந்தருக்குத் தோன்றியது. சுந்தர் சொல்லி முடித்ததும் நண்பர்கள் சிரித்தனர்.

சுந்தர் சொன்னான், "சிரிக்காதீங்கடா... ஃபிரண்டாப் பழகுவோம். நம்ம பழக்க வழக்கம் புடிச்சுப் போயி அவளே கொஞ்ச நாளில் 'ஐ லவ் யூ' சொல்லிர மாட்டாளா... நம்பிக்கை வேணும்டா..."

இரவு.... சரவணன் எதிர்பார்த்திருந்த இரவு.... ஒரு நாளுமில்லாத திருநாளாக சரவணன் ஏழுமணிக்கே சாப்பிட்டு விட்டான். அம்மாவும், பாட்டியும் மூக்கின் மீது விரல் வைக்காத குறை. கிழவிக்கு இலேசாக சந்தேகம் தட்டியது. கேட்டே விட்டாள்.

"ஏண்டா, ரெண்டாவது ஆட்டம் சினிமாக்கு ஏதும் போறியா?"

"இல்லை கௌவி, பசிச்சுச்சு சாப்ட்டேன்" என்று சமாளித்து விட்டு எட்டு மணி வாக்கில் வீட்டை விட்டு வெளியேறிவிட்டான் சரவணன். சைக்கிளை எடுத்துக் கொண்டு நண்பர்கள் கண்ணில் படாமல் மெயின் ரோட்டுப் பக்கம் விரைந்தான். நண்பர்கள் தன்னைத் தேட சாத்தியமற்ற இடம் அதுதான். மூன்று நான்கு கிலோ மீட்டர் தாண்டிப் போய், அங்கே இருந்த ஒரு பாலத்தில் அமர்ந்து கொண்டான். மணி பார்த்துக் கொண்டான். ஒன்பதே முக்காலுக்குக் கிளம்பி விட வேண்டும் என்று நினைத்துக் கொண்டான்.

"எதற்கு வரச் சொல்லியிருப்பாள்' எனும் யூகங்களே மகிழ்ச்சி தந்தன...

வெறுமனே பேசவா? அல்லது காதலைச் சொல்லவா? இல்லை அதற்கும் அப்பால் வேறு ஏதாவதா?

எதுவாக இருந்தாலும் அது சந்தோஷம் தரக் கூடியதுதானே... பின்னந்தலையில் கைகளைக் கோத்துக் கொண்டு மல்லாந்து படுத்தான் சரவணன். பாலத்தையொட்டி மிக அரிதாகவே வாகனங்கள் கடந்து போகிற பாதை. யாராவது அங்கிருந்து பார்த்தால் குடித்துவிட்டு போதையில் இவன் படுத்திருப்பதுபோல் தோன்றும்.

போதைதான். குடிபோதையையெல்லாம் ஓரங்கட்டி விடுகிற போதை. நினைக்கும் போதெல்லாம் உச்சந்தலையைச் சுண்டுகிற, விர் விர்ரென்று ஏறுகிற போதை.

அப்படியே கிடந்தான், மறுபடியும் மறுபடியும் மணி பார்த்தான். இப்போது கிளம்பினால் சரியாக இருக்குமென்று தோன்றியதும் சைக்கிளில் ஏறினான்.

சைக்கிள் பறந்தது.

பூவரச வீட்டின் பின் பகுதியில் வெகு தள்ளி மூன்று மரங்களிருந்தன.... அவற்றினடியில் சைக்கிளை நிறுத்தினான். அங்கிருந்து பூவரசம் வீடு கணிசமான தூரம் தள்ளி இருந்தது. ஆனாலும் பார்க்க முடிகிற தூரம்தான். இவன் மெதுவாக வீட்டைப் பின்புறமாக நெருங்கினான். ஏதேனும் அசைவு தென்பட்டால் 'சட்'டென்று கீழே மண்டி போட்டு அமர்ந்து பம்மிக் கொண்டான். அசைவை உற்று நோக்கினான். அனேகமாக அது பன்றியாகவோ, கழுதையாகவோ இருந்தது. ஆட்கள் யாரும் இப்போது இந்தப் பக்கம் வரவேண்டிய தேவை இல்லை.









## ஃப்யூஷன் பாணி!

**வ**யலின் மேதை பரூர் சுந்தரம் ஐயர் நினைவு அறக்கட்டளையை காஞ்சி காமகோடி ஜகத்குருமார்கள் தொடங்கி வைத்தனர்.

''இந்துஸ்தானியில் உள்ள நல்ல அம்சங்களை எடுத்துக் கொண்டு, அதை கர்நாடக இசையில், சம்பிரதாயங்களை ஒட்டி வாசிப்பதுதான் பரூர் ஸ்டைல். ஒரு முழு வர்ணத்தை ஒரே தந்தியில் வாசிக்க முடியும் என்பதும் பரூர் ஸ்டைலில்தான். தந்தையாருக்குப் பிறகு அவர் விட்டுச் சென்ற பணியை ஓர் இசைக் கலைஞனாகத் தொடர்ந்து நிறைவேற்றி வருகிறேன்'' என்றார் பரூர் அனந்தராமன்.

''இளம் கலைஞர்களை ஊக்குவித்தல், நலிந்த கலைஞர்களுக்கு உதவுதல், பரூர் ஸ்டைலை மேலும் பிரபலமடையச் செய்தல் ஆகியவைதான் எங்கள் அறக்கட்டளையின் நோக்கம். இந்த நோக்கத்திற்கு, காஞ்சி ஜகத் குருக்களின் ஆசி பரிபூரணமாகக் கிடைத்திருக்கிறது'' என்கிறார் அனந்தராமன்.

— சக்கரத்தாழ்வார்

படம்: ராஜன்

சற்று நேரத்துக்குப் பின் அந்த உருவம் வீட்டின் பின்புறம் தெரிந்தது. இடுப்புயர சுற்றுச் சுவரை சுலபமாகத் தாண்டி இறங்கியது, மெல்லிய கொலுசொலி.

கிருஷ்ணவேணிதான்.

''ஸ்...ஸ்'' என்றான் சரவணன்.

''ம்'' என்று செருமினாள் கிருஷ்ணவேணி புரிந்து கொண்ட பாவனையில்.

சரவணன் இப்போது 'விடுவிடு' என்று சைக்கிள் நிறுத்தியிருந்த அந்த மரத்தடியை நோக்கி நடந்தான்.

சற்று இடைவெளியில் கிருஷ்ணவேணியும் பின் தொடர்ந்தாள்.

மூச்சு வாங்க மரத்தில் சாய்ந்து கொண்டான் சரவணன். சில நொடிகளில் அவளும் அங்கு வந்து சேர்ந்து கொண்டாள்.

சரவணன் ஒரு சிரிப்பு சிரித்தான் அவளைப் பார்த்து. அசட்டுச் சிரிப்பு!

நிலா வெளிச்சம் மிதமாக இருந்த வளர் பிறை. மரத்தடியில் இவர்களிருந்த பகுதி இருட்டாக இருந்தது. இவர்களை யாரும் கவனிக்க இயலாது. ஆனால் இவர்கள் இங்கிருந்து முன்னுள்ள வெட்ட வெளியையும் அதன் விளிம்பிலுள்ள பூவசர வீட்டையும் கவனிக்க முடியும்....

''அப்புறம்?'' என்று அவளது முகம் பார்க்க முயன்று கண்களைக் குறுக்கினான்.

தெளிவற்று இருந்தது இருளில் அவள் முகம்.

''சொல்லுங்க... எதுக்கு என்னைக் கூப்பிட்டீங்க?'' என்றாள் கிசுகிசுப்பாக....

''சும்மாதான்...பேசணும்னு....'' என்றவன்.

''நீதான வேணி இங்க வரச்சொன்ன?'' என்றான்.

''நீங்கதான் தனியா என்னமோ பேசணும்னீங்க.''

''ஆமா.''

''சொல்லுங்க.''

''உன்னை....'' தயங்கினான் சரவணன்.

''உன்னை எனக்கு ரொம்ப புடிச்சிருக்கு.''

அவள் அமைதியாக இருந்தாள்.

''உனக்கு?''

மெதுவாக அவள் பேசினாள், ''எனக்கும் தான்.''

''ஆனா....''

''என்ன ஆனா?''

''நிறைய பிரச்னை இருக்கே.''

''பரவாயில்லை'' என்ற சரவணன் மெதுவாக அவளது கையைப் பற்றினான். அவள் சற்றே திமிற முயன்றாள்... ''இப்ப என்ன வேணி... ''என்ற அவனது கரம் வலுவாக இருக்கவே அவள் முயற்சியைக் கைவிட்டாள்.

அவன், அவளை இலேசாக அணைத்துக் கொண்டு சொன்னான், ''நெசமாவே நான் உன்னை ரொம்ப லவ் பண்றேன்.''

''ம்'' என்றவள் சட்டென அவனிடமிருந்து விலகினாள்.

''அங்க பாருங்க'' அவளது குரலில் பதற்றம் இருந்தது.

அவள் சுட்டிக் காட்டிய இடத்தில் ஓர் ஆண் உருவம் பூவரச வீட்டைப் பின்புறமாக அணுகுவது நிலவு ஒளியில் தெரிந்தது.

(தொடரும்)

"அம்மா."

இந்த ஈ-மெயிலுடன் நான் இணைத்து அனுப்பியிருப்பது சான்ஃபிரான்ஸிஸ்கோவில் வாழும் எழுத்தாளர் தமீம் அன்ஸாரி எழுதியது. இவரது தந்தை ஒரு முன்னாள் ஆஃப்கானிய அரசியல்வாதி. இந்த எழுத்துக்கள் அமெரிக்காவில் இப்போது பலருக்கும் மின்னஞ்சலில் அனுப்பப்பட்டு வேகமாகச் சுற்றி வருகிறது. நீயும் படித்துப்பார்."

என்று அமெரிக்காவிலிருந்து என் மகள் ஷோபனா அனுப்பியிருந்த பகுதியைப் படித்ததும் எனக்கு என்னமோ செய்தது.

அதில் தமீம் அன்ஸாரி பின்வருமாறு எழுதியிருக்கிறார்:

'ஆப்கானிஸ்தானை அடியோடு அழித்து நிர்மூலமாக்கு' என்று முழக்கத்தை இப்போது நான் அடிக்கடி கேட்டு வருகிறேன். சமீபத்தில் ஸான் ஃபிரான்ஸிஸ்கோ கே.ஜி.ஓ. டாக் ரேடியோவில் பேசிய ரான் ஓவன்ஸ் "இந்தப் போரில் அப்பாவி மக்கள் செத்து விழப் போவது நிச்சயம். ஆனாலும் என்ன செய்வது? நாம் தொடுத்திருப்பது போர். அதில் இப்படிப்பட்ட இழப்புகள் இயல்பானவையே" என்று பேசினார்.



# அழிக்க என்ன மீதி?

நான் ஆப்கானிஸ்தானைச் சேர்ந்தவன். 35 வருடங்களாக அமெரிக்காவில் வாழ்ந்து வந்தாலும் ஆப்கானில் என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டுதானிருக்கிறேன். தெளிவாகச் சொல்லி விடுகிறேன், நான் தாலிபானையும் ஓஸாமா பின் லேடனையும் வெறுக்கிறவன். இதில் சந்தேகமில்லை. நியூயார்க்கிலும், பென்ட்டகனிலும் நடந்த கொடுமைகளுக்காகக் கண்ணீர் வடிக்கிறவன். இதைச் செய்தது அவர்கள்தான் என்று நம்புகிறவன். இதிலும் சந்தேகமில்லை. இவர்களை ஏதேனும் செய்தாக வேண்டும். ரொம்ப சரி.

ஆனால் ஆப்கானிஸ்தான் என்பது தாலிபானும், பின் லேடனும் அல்ல. தாலிபான் ஒரு 'ஸைகோடிக்ஸ்' கும்பல். 1997ல் ஆப்கானிஸ்தானைக் கைப்பற்றியவர்கள். பின் லேடனோ ஓர் அரசியல் கிரிமினல். நீங்கள் தாலிபான் என்று நினைக்கையில், நாஜிகளை நினைத்துக் கொள்ளுங்கள். பின் லேடனை நினைக்கையில் ஹிட்லரை நினைத்துக் கொள்ளுங்கள். ஆப்கானிய மக்கள் என்று நினைக்கையில் கடுமையான முகாம்களில் அடைக்கப்பட்டிருந்த யூதர்களை நினைத்துக் கொள்ளுங்கள். அமெரிக்க நகரங்களின் மீதான தாக்குதல்களோடு இந்த அப்பாவி ஆப்கானிய மக்களுக்குத் தொடர்பில்லை என்பது மட்டுமல்ல, இனி போரில் முதலில் சாகப் போவதும் அவர்கள்தான்.

இந்த மக்களே கிளர்ந்தெழுந்து தாலிபானை ஏன் பதவியிலிருந்து இறக்கக் கூடாது என்று சிலர் கேட்கிறார்கள். அவர்களால் அது முடியாது. இம்மக்கள் பசி, பட்டினி,சோர்வை அனுபவித்துக் கொண்டிருப்பவர்கள். இயங்க முடியாத நிலையில் ஐந்து லட்சம் பேர் ஆப்கானில் இருப்பதாக

சில வருடங்களுக்கு முன்பு ஐ.நா. அறிக்கை ஒன்று கணக்கு சொன்னது. ஆப்கானில் இன்று பொருளாதாரம் இல்லை; உணவு இல்லை, லட்சக்கணக்கான விதவைகள் இருக்கிறார்கள். இவர்களை உயிரோடு சமாதி கட்டிக் கொண்டிருக்கிறது தாலிபான்.

சரி, ஆப்கானிஸ்தான் மீது குண்டு போட்டு நிர்மூலமாக்கும் யோசனைக்கு வருவோம். ரஷ்யர்கள் இதை முன்பே செய்து விட்டார்கள். ஆப்கானியர்கள் வேதனைப்பட வேண்டுமா? பட்டுக் கொண்டிருக்கிறார்கள். வீடுகள் தரை மட்டமாக்கப்பட வேண்டுமா? பட்டாயிற்று. பள்ளிகள் இடிக்கப்பட வேண்டுமா? ஏற்கெனவே இடித்தாயிற்று. மருத்துவ மனைகள்? இல்லை. இப்போது அங்கே குண்டு போட்டால் குப்பை மேடுகளைத் தான் அவை கிளறி விடும். அப்படியாவது தாலிபான்கள் கிடைப்பார்களா? சந்தேகம் தான். ஏனெனில் இன்று ஆப்கானில்



## பிரார்த்தனை!

**நியூயார்க்கில் நடந்த உண்மை சம்பவத்தை, பெயர் மட்டும் மாற்றி அனுப்பியுள்ளார் கிரிஜா கார்த்திகேயன்.**

71 வயதாகும் நான், சுக, துக்கங்களை பலவாறு அனுபவித்து விட்டேன்.

24 வயதில், பெற்றோர் பார்த்து வைத்த திருமணம். ஐ.நா. சமாதானப் படையில் என் கணவருக்கு வேலை. ஸ்விட்சர்லாந்து குளிர் தாங்காமல், ஜெனீவாவிலேயே இறந்தார். 25 வயதில், ஆறுமாதக் குழந்தையை சுமந்த விதவை. பெரிய இடி, துக்கம் தாங்கவில்லை. நான் அப்பொழுது ஒரு கல்லூரியில் விரிவுரையாளராக வேலைப்பார்த்துக் கொண்டிருந்தேன்.

கல்லூரிக்குச் சென்று வேலையை ஆரம்பித்தேன். குழந்தைப் பேறுக்கு, கல்லூரி விடுமுறை கொடுக்க மறுத்தது. சம்பளமில்லாமல் லீவு கொடுத்தார்கள்! நகைகளை விற்று நானே என் பிரசவத்தைப் பார்த்துக் கொண்டேன்.

கணவனின் பென்ஷன், இன்ஷுரன்ஸ் என்று நிறையவே வந்தது. வீட்டை வாங்கினேன். வேலைக்கு ஆள் போட்டுக் கொண்டு, என் பையன் ஸ்ரீகாந்தனை வளர்த்தேன். அவனும் நன்றாகப் படித்தான். படிப்படியாக ஐ.ஐ.டியில் முதன்மையாகவும் தேறினான். அமெரிக்காவில் ஒரு கம்ப்யூட்டர் நிறுவனம் அவனுக்கு லட்சக் கணக்கில் சம்பளம் கொடுத்து, அழைத்துக் கொண்டது. நானும் அவனும் காற்றில் மிதந்தோம்.

ஸ்ரீகாந்தனுக்கு நியூயார்க்கில் வேலை. வீடு நியூஜெர்ஸியில்.

ஆறுமாதம் கழித்து ஒருநாள், ஸ்ரீகாந்த் வீடு திரும்பும் போது, டெஸ்ரியையும் கூட்டி வந்தான். அவனுடன் வேலை செய்பவளாம். அவளைப் பார்த்ததுமே எனக்குப் பிடித்து விட்டது. டெஸ்ரியை, மானசீகமாக, என் மருமகளாக்கிக் கொண்டேன். நடுத்தரக் குடும்பம். ஸாண்டியாகோ நகரில், அவள் தந்தை சின்ன ஓட்டல் நடத்தி வந்தார். அங்கேயே திருமணம் நடந்தது. மணமானதும், இருவரும் இந்தியா வந்து ஒரு மாதம் இருந்து, ஊரெல்லாம் சுற்றிப் பார்த்துவிட்டு வந்தார்கள். நானோ ஸாண்டியாகோவிலேயே சம்பந்திகளோடு நிம்மதியாக இருந்தேன்.

நான்காண்டுகள் உருண்டு ஓடின. என் பேத்திகள் அனிதா, ரதி இரு கண்களானார்கள். நான் அவர்களைக் கவனித்துக் கொண்டதில், ஸ்ரீகாந்த், டெஸ்ரி, நிம்மதியாக வேலைக்குப் போக முடிந்தது. மூன்று கார், பெரிய வீடு என்று

உணவு கிடைப்பது அவர்களுக்கு மட்டும் தான். நடமாட முடிவது அவர்களால் மட்டுமே. அவர்கள் நழுவி ஒளிந்து கொள்வார்கள். இயங்க முடியாத அனாதைகளை வேண்டுமானால் குண்டுகள் தாக்கலாம். தாலிபான்கள் என்ன செய்ய முயன்று கொண்டிருக்கிறார்களோ அதைத்தான் குண்டுகள் செய்யும். அழிக்க அங்கு என்ன மீதி இருக்கிறது?

ஆப்கானிஸ்தானுக்குள் தரைப் படைகள் நுழைந்து தாக்கினால் அமெரிக்கர்கள் பெருமளவில் இறந்து போவது நிச்சயம். பின் லேடனின் மறைவிடத்தைக் கண்டு பிடிக்கும் முயற்சியின் விளைவாக இது இருக்கும். தரை வழியே ஆப்கன் போக பாகிஸ்தான் வழி விட வேண்டும். விடுமா? பாகிஸ்தானை முதலில் வெற்றி கொள்ள வேண்டும். அதற்கு மற்ற இஸ்லாம் நாடுகள் துணை நிற்குமா? எல்லாம் சந்தேகம்தான். ஆனால் பின் லேடன் எதிர்பார்ப்பது இதைத்தான். ஒரு முனையில் இஸ்லாம், இன்னொரு முனையில் மேற்கு நாடுகள். உலகப் போர் வர வேண்டும். லேடனின் ஆசை இதுவே-இஸ்லாம், மேற்கை வெல்லும் என்று லேடன் நம்புகிறான். வெல்லப்போவது இறுதியில் மேற்கு என்றாலும் போர் நீடிக்கப் போவது பல ஆண்டுகளுக்கு. மரிக்கப் போவது பல லட்சக் கணக்கில் நம்மவர்.

இந்தச் சாவுகளை பின் லேடன் ஜீரணிப்பான். ஆனால் நாம்?...

— சுமித்ரா கல்யாணராமன்

---

சந்தோஷமாக காலச் சக்கரம் ஓடிற்று.

செவ்வாய், செப்டெம்பர் 11ம் தேதி. குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்பிவிட்டு, நான் ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ரநாமம் படித்துக் கொண்டிருந்தேன். டெலிபோன் அடித்தது...... எடுத்ததும், டெஸ்ரி அலறினாள். பயங்கரவாதிகள், நியூயார்க்கில் உலக வர்த்தக மையத்தைத் தாக்கினார்களாம். அவள் தப்பி விட்டாளாம். ஆனால்...........ஆனால், ஸ்ரீகாந்த் வெளியே வரவில்லை. அவ்வளவுதான். டீ.வியைப் போட்டேன். உலக வர்த்தக மையம், ஒன்றல்ல, இரண்டும் நொறுங்கி பற்றி எரிந்தது. புகை மண்டலம் உலகையே கவ்வியது போலிருந்தது. அங்கு வேலை செய்தவர்கள், ஜன்னல் வழியே குதித்து, மரணத்தைத் தழுவினர். எனக்கு ஒன்றுமே புரியவில்லை. மறுபடியும், 27 வருடம் கழித்து விதி என் வாழ்க்கையில் விளையாடியது. ஆனால் நான் தைரியமாக இருக்க வேண்டும். இத்தனை



வருடங்கள் எங்களைக் காப்பாற்றின பகவான் என்னை கைவிடமாட்டான் என்ற நம்பிக்கை!

"ஸ்ரீகாந்த் கட்டாயம் திரும்பி வருவான், கவலைப்படாதே" என்று டெஸ்ரியைத் தேற்றிக் கொண்டே இருந்தேன். வீடு வெறிச்சோடியது. 'அப்பா, அப்பா' என்று குழந்தைகள் அலறிய வண்ணமிருந்தனர். பக்கத்து வீட்டில், கராச்சியிலிருந்து சலீமும், நூர்ஜஹானும், எங்களோடு உட்கார்ந்து கடவுளைப் பிரார்த்தித்தனர்.

செப்டெம்பர் 15-ம் தேதி ஸ்ரீகாந்த் தீயணைக்கும் படையினரால் கண்டுபிடிக்கப்பட்டான். அவன் உடம்பெல்லாம் அடி! பேச்சே வரவில்லை. தலை முடியெல்லாம் கருகி, யாரைப் போலவோ இருந்தான். டாக்டர்கள் பரிசோதித்து, இன்னும் அவன் அதிர்ச்சியிலேயே இருப்பதாகவும், ஒரு மாதத்திற்குள், முழுமையாக குணமடைவான் என்றும் கூறினர்.

'அம்மா, டெஸ்ரி' என்று எங்கோ கிணற்றிலிருந்து கூப்பிடுவது போல ஸ்ரீகாந்தின் குரல் கேட்டது. அதுபோதும். கடவுள் காப்பாற்றிவிட்டான். நூர்ஜஹான், உடனே ஓடி வந்து, "அல்லா, நீதான் இந்தக் குடும்பத்தைக் காப்பாற்றினாய். அவர்களை அடுத்த வருடம் அஜ்மீருக்கு அனுப்பி உனக்கு 'மன்னத்' செய்விக்கிறேன்" என்றாள். நாங்கள் மௌனக் கண்ணீர் வடித்து நன்றி சொன்னோம்.

போட்டிக்கதை - 7

# கோரோசனை

அத்தனை பேரிலும் கனகமுத்துதான் சரியான வெட்டுக்காரன். இன்றைக்குத்தான் வெட்டில் வேகமே இல்லை.

நீளக் கூம்பு வடிவக் கத்தியில் ஒன்றுக்கு மட்டும் மரப்பிடி. மற்ற இரண்டும் நல்ல உருக்கு இரும்பு. ஒவ்வொன்றும் அரைக் கிலோவிற்கு மேலேயே இருக்கும். கைப் பிடியின் உருளையில் இருந்தே கத்தியின் வாகு நீளும். கொல்லுப்பட்டறை சம்பட்டி இவனுக்கென்று துவைத்துத் தருகிறதா, இல்லை இவன் கை லாகவம் அந்தக் கத்தியை உயர்வாக்குகிறதா என்பது இனம்புரியாத ஒன்று.

கறுப்பு நிறத்தில் வெள்ளி நிறப் பதம் ஏற்றினார் போல் இருந்தது சாணை பிடித்த கத்திகளின் கூர். கனகு தன் கட்டை விரலை வைத்து அழுத்தி விரலின் தோல் வெட்டுப் படாத அளவிற்கு இழுத்து பதத்தை சரி பார்த்தான். இன்னொரு கத்தியை எடுத்து கத்தியோடு கத்தியைத் தீட்டி, முனையை கட்டு விரலால் தொட்டுத் தொட்டு கூர் மையை உணர்ந்தான். அடிக்கடி பிடித்து வேலை செய்து செய்து தன் பிடிக்கு இணக்கமாகி தன் கையின் மற்றுமொரு உறுப்பைப் போல் ஆகிப்போன ஒரு கத்தியை எடுத்தான்.



உள்சிவப்பு டவுசர் தெரிய தன்வேட் டியை வரிந்து கட்டியிருந்தான். இடுப்பில் சொருகியிருந்த வேட்டி தலைப்பை உருவி, மடியோடு சுருட்டியிருந்த புகையிலைப் பொட்டலத்தைப் பிரித்து, திணித்த கட்டை விரலுக்கும் நடுவிரலுக்கும் அளவோடு அகப் பட்டதை எடுத்துக் கொண்டான். ஏற் கெனவே கடைவாயில் அடக்கியிருந்த புகையிலைச் சக்கையை துப்பி, பிறகு அண்ணாந்து மறுவாய் போட்டுக் கொண்டான்.

மாட்டின் பின்னங்கால் இரண்டையும் கனகமுத்து சுருக்குப் போட்டு இழுத்து, அப் படியே முன்னங்காலுக்குக் கொண்டு வந்து அந்தக் காலை



யும் ஒன்றாக்கி இறுக்கிக் கட்டினான். மோலையன் கொம்பைப் பிடித்து மடக்கி கழுத்தை நெரிக்க மாடு படுத்து விட்டது.

மோலையன் ஒன்றும் பலசாலி இல்லை. காய்ந்து போன கொத்தவரங் காய் மாதிரிதான் இருப்பான். அவன் கற்றிருந்த தொழில் நேர்த்தி அப்படி. மோலையன் கொம்பைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்தான்.

கழுத்தில் ஆரம்பித்த கத்திக்கோடு வயிற்று வழியாக நீண்டு மலவாய் வரையும், காலின் உட்புறமாக பாதம்வரை போனது. வயிற்றின் தோலை மெள்ள மெள்ள விலக்கினான். சதையைக் குத்தாமலும், தோல் பொத்துப் போகாமலும், சதைக்கும், தோலுக்கும் இடைப்பட்ட வெள்ளைச் சவ்வுகளிலேயே கத்தியின் வீச்சு பரவியது. தோல் பொத்துப் போவது, நூறு ரூபாய் நோட்டு நெருப்பில் பொத்துப் போவது மாதிரி. சரியான விலை போகாது.

ஒருநாளைக்கு நானூறு மாடுகள், குறைந்த பட்சம் முந்நூறு மாடுகளாவது வெட்டப்படும்.

இந்த உச்சிப் பொழுதிற்கெல்லாம் கனகு பதினெட்டு மாட்டை வெட்டி உரித்துப் பிரித்திருப்பான். இன்றைக்கு பன்னிரண்டைத் தாண்டவில்லை. மனசுக்குள் வேறு ஏதோ அறுபட்டுக் கொண்டிருந்தது.

கேரளாவில் இருந்துவந்த மூன்று லாரியிலும் பெரும் பெரும் ஐஸ் பார்கள் இருந்தன. லாரிக்கு அருகே ராட்சஸ தராசும் நின்றது. லாரிக்கும் தராசுக்கும் இடையிலே உட்கார்ந்திருந்தார் வைத்திய லிங்கம். எடை போடப் போட நீள சைஸ் நோட்டில் குறித்துக் கொண்டு, இடையிடையே ஆட்களையும் கவனித்தார். வேலை பார்க்கும் இருபத்தி நான்கு பேரிலும் அவர் மனசில் பெரிய இடம் கனகுக்குத் தான். தொடைத் துண்டங்களை அள்ளிவந்த தங்கராசுவிடம் கேட்டார்,

"என்னடா ஆச்சு கனகனுக்கு, மணிக்கு ரெண்டு மாடுன்னு கூறுபோட்டு கொடி கட்டுவான் இன்னைக்கு வேலைல சொரத்தும் இல்ல, முகத்துல ஒரு களையுமில்ல. மேலுக்கு ஏதாச்சும்

**இரா. தனிக்கொடி**



''சார், உங்க படம் இடைவேளை வரைக்கும் தான முடிஞ்சிருக்கு?''

''ஆமாம்! ஏன் கேக்குறீங்க?''

''நேத்தி திருட்டு வி.சி.டியில் பாதிபடம்தான் இருந்துச்சு, அதான் கேட்டேன்.

– தஞ்சை மகா

நோவா?''

''ஒண்ணுமில்லங்க, அவன் வளத்த 'வெளிச்சய' ரெண்டு நாளாக் காணோம். பய அதான் பைத்தியமாட்டம் இருக்கான்.''

"ஓ!அந்த வெளிச்சயாடா, அது கோயில் மாடாச்சே. நல்ல சாதி காளடா, படுசுட்டி. எங்கே போவப் போவுது? எங்கிட்டாவது கெடந்து வரும். அவவன வேலைய வெரசா முடிக்கச் சொல்லுடா.''

வைத்திய லிங்கத்திற்கு வெளிச்சயைப் பற்றிக் கவலைப்பட என்ன இருக்கிறது. அவருக்கு கேரளா காண்ட்ராக்டரிடம் பேரை நிலைநிறுத்த வேண்டும். அதற்காக மாதம் இரண்டு வெட்டு நடந்தாக வேண்டும். இல்லையென்றால் மனுசன் மனுசனாய் இருக்க மாட்டார்.

எல்லா சந்தைக்கும் ஆள் அனுப்பி, கிராமங்களுக்கு புரோக்கர்களைப் போகச் சொல்லி, தானும் அலையாய் அலைந்து வத்தலோ, தொத்தலோ பதினைந்து நாளைக்குள் முந்நூறு மாட்டுக்கு மேல் கட்டில் நின்றாக வேண்டும். இல்லையென்றால் தூக்கம் பிடிக்காது, சாப்பிடப் பிடிக்காது. உலகமே அவருக்கு எதிரானதுபோல் தோனும்.

அந்த அளவுக்குத் தொழிலில் வேகம் காட்டக் காரணமே அவர் மைத்துனர் ராமசாமிதான். அவரிடத்தில் மேஸ்திரி மாதிரி மேற்பார்வை பார்த்தவன், இப்போது கோட்டக்குடியில் தனிவெட்டு ஆரம்பித்து, இரண்டு லோடு கேரளாவிற்கும் அனுப்பி விட்டான். வைத்திய லிங்கத்துக்கு இது கௌரவப் பிரச்னை ஆயிற்று.

ராமசாமி தனிவெட்டு போடும் அளவிற்குப் பணம் கிடைக்க காரணமே கனகுதான்.

ஒருதரம் கனகு சிறுகுடலையும், சுற்றுக் குடலையும் சுத்தம் செய்து, சாணங்களை அகற்றி குவித்துப் போட்டான். அப்போது பித்தப் பையில் இருந்து மஞ்சள் கிழங்கு வெந்து பூத்த மாதிரி சதைசதையாய் இருந்த ஒன்றை எடுத்துப் பார்த்தபடி இருந்தான். அந்தப் பக்கமாய் வந்த ராமசாமி,

''என்னடா கனகு இது, கொழுப்பு இறுகிப்போன மாதிரி இருக்கு?''

"தெரியாதுங்களா! இதுதான் கோரோசனை!"

"கொண்டா பாப்போம்."

கோரோசனை என்றதும் ராமசாமிக்கு நாட்டு வைத்தியன் சொன்னது ஞாபகத்திற்கு வந்தது.

''அது ரொம்ப ரொம்ப அபூர்வம். ஐந்நூறு ஆயிரம் பசு மாட்டுக்கு ஒண்ணுல தான் கெடக்கும். சித்த வைத்தியனுக்கு பாக்கியமான செல்வம். கோரோசனைன்னா சாதாரணம் இல்லையா... சகலரோக நிவாரணிய்யா, சகலரோக நிவாரணி! காயவச்சு அதோட சில மூலிகைய சேத்து பக்குவப் படுத்தி வச்சுட்டா காலா காலத்துக்கும் உபயோகமா இருக்கும். கடுகளவு, என்ளளவு, மிளகளவுன்னு நோவுக்குத் தகுந்தாப்ல உபயோகிக்கணும். அதவச்சுத்தான் நம்ம தமிழ் நாட்டு வைத்திய சிகாமணிகள் வெளிநாட்டுக்குக் கொண்டு போய் மருத்துவம் செஞ்சு பணத்தில் வெளையாடுறாங்க. கோரோசனையை அந்தக் காலத்தில் நந்தனார் கூட சிவபூஜைக்குக் கொண்டு வந்து கொடுத்திருக்கார்னா பாத்துக்கங்களே!''

கோரோசனையைப் பார்த்துக் கொண்டிருந்த ராமசாமியின் இமைகள் சற்று நேரம் அசையாமல் நின்றன. அதைத் தாம் வைத்துக் கொள்வதாகவும், மைத்துனரிடம் இதைப்பற்றி சொல்ல வேண்டாமென்றும் கூறிவிட்டார். கனகு அதைப் பற்றி ஒன்றும் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. முதலாளி மைத்துனர் அவர்கள் மாடு, அவர்கள் பாடு என்று இருந்து விட்டான்.

ராமசாமி அதை ஒரு சிங்கப்பூர் வைத்தியனிடம் ஐம்பதாயிரத்திற்கு விற்றான். அந்தப் பணம்தான் இன்று தனிவெட்டு முதலாளி ஆனதற்கு மூலதனம்.

கனகுக்கு அந்த நினைப்பெல்லாம் இல்லை. அவனுக்கு தன் வெளிச்சை நினைவுதான்.

வெளிச்சை என்றால் வெளிச்சை

தான். பேருக்கேற்ற வெள்ளை. கூர்ந்த கொம்பு. ரோட்டின் நடுவில் இந்தப் பக்கமும், அந்தப் பக்கமுமாகப் பார்த்து நடந்து வரும்போது, ஏதோ ஒரு நாட்டுப்புற ராஜா வேட்டைக்குப் போய் திரும்பி வரு வது மாதிரி இருக்கும். திமில், நடைக்கு ஒத்தி சைவாய் குலுங்கி குலுங்கி ஆடும். எப் போதாவதுதான் வெளிச்சை இப்படி வீடு வருவான்.

நாலுகுடம் நல்ல தண்ணீர் கொண்டு வந்து வைக்கோல் போட்டு குளிப் பாட்டுவான். வெளிச்சையின் இயல்பான வெளிர்நிறம் வரும்வரை அழுக்கெடுப்பான். கொஞ்ச நேரம் கட்டிப் போட்டு, ஈரம் உலர்ந்தபின் மாடுகளின் மூட்டைப் பூச்சி யான உண்ணிகளை, காது மடல்களில் இருந்து எடுப்பான். வெளிச்சை அவன் கைத் தோதுக்கேற்ப வளைந்து கொடுக்கும். இருவருக்குமான அன்யோன்யம் சொல் லுக்கு வராத ஜீவபந்தம். கட்டை அவிழ்த்து விட்டு, வைத்த கண்வாங்காமல் பார்த்துக் கொண்டிருப்பான். மனசு பூரித்து மலரும்.

தன்வீட்டுப் பசுமாடு மூன்று கன்றுகளை ஈன்று, அத்தனையும் நிற்காமல் இறந்து போயின. 'வெட்டுக்காரன் வீட்டுல மாட் டுக்கு விதியிருக்குமாய்யா, அதெல்லாம் விளங்காதுய்யா' என்று ஊரில் பலர் பலித் தார்கள்.

தன் பசுவிற்கு அடுத்தது காளையாய் இருந்தால் அது அய்யனாருக்கு விடுவ தென்று நேர்ந்து கொண்டான். நேர்ந்து கொண்டது போலவே காளை பிறந்தது. வேண்டுதலை நிறைவேற்றும் முகமாய் கோயிலுக்குக் கொண்டுபோய் சாமி கும்பிட்டு அய்யனாருக்கே விட்டான். அதுவும், எந்தப் பாதகமும் இல்லாமல் நன்றாகவே வளர்ந்தது. பசுமாடு வறுமைக்கு விற்று வயிறு கழுவியாகிவிட்டது.

வெளிச்சை நன்றாக ஊர்மேயும். வயல் வரப்பு ஒன்று விடாது. சில நேரம் வீட்டுக் குள் புகுந்து சோற்றுப்பானை, அரிசிப் பானை எல்லாம் உருட்டும். எல்லோரும் விரட்டி விரட்டி சலித்துப்போய் கனகுவை வீட்டில் கட்டிப் போடச் சொல்வார்கள். சிலர் அய்யனார் மாடு என்பதால் மனசுக் குள்ளேயே நொந்து கொள்வார்கள்.

மஞ்சுவிரட்டுக்குத்தான் வெளிச்சை அதிகமாகப் போகும். கனகு போகாவிட் டாலும் யாராவது தொழுவிற்குக் கொண்டு போய் விடுவார்கள். எல்லா மஞ்சுவிரட்டி லும் கனகு பேர்தான் சொல்லப்படும்.



''ஏகப்பட்ட எலக்ட்ரீஷியன்களைத் தலைவர் கட்சியிலே சேர்க்கிறாரே... ஏன்?''

''எதிர்க்கட்சியோட ஊழலை வெளிச்சம் போட்டுக் காட்டணுமாம்!''

– தஞ்சை தாமு

'வெட்டுக்கார கனகோட காளை வருது... வருது' ஒலிபெருக்கி பேசும்போது கனகுக்கு நடுத்தண்டுவடம் சில்லிட்டு, சிலிர்க்கும். தன்பேரோடு வெளிச்சை பேரையும் சேர்த்து ஊர்பேர் தெரியாத ஓர் ஆள் சொல்லும் போது மனசுக்குள் பனி ஊற்று ஒன்று பொங்கி வழியும். நேரில் கேட்கும் பாராட்டு வார்த்தைகளை, ஒலிபெருக்கியில் கேட்கும் போது ஞானவான்களுக்கே ஒருவித கிளர்ச்சி நிகழும்போது, கனகு மாதிரி ஆட்களுக்குச் சொல்லவா வேண்டும்.

**கா**ணவில்லை வெளிச்சையை. தற் போது அக்கம் பக்கம் மஞ்சுவிரட்டு எதுவும் இல்லை. யாரும் கட்டிப்போட்டு வைத்திருக் கிறார்களா? இல்லை எவனும் சந்தைக்குக் கொண்டுபோய் விட்டானா? இல்லை ஊர்மாற்றி விட்டார்களா? கனகு மனசு தவு தாயப்பட்டது.

"டேய் கனகு, ஒன்வெளிச்ச கோட்டக் குடியில ராமசாமி வெட்டுல நிக்குதுடா. வெரசா போனியன்னா ஓட்டியாரலாம் போடா முதல்ல" யாரோ சொல்லிவிட்டு எனக்கென்னவென்று போனார். கனகுக்கு திக்கென்று ஆனது. கத்தியைக் கீழே போட் டான். சட்டையைக் கூட மாட்டாமல் விரைந்தான்.

**தூ**ரத்தில் ராமசாமி வெட்டு இடத்தில் நின்ற பத்துப் பன்னிரண்டு மாட்டில் வெளிச்சை இல்லை. கூறுபோட்டு ஏற்றி விட்டார்களா? குவிந்து கிடந்த கால்களை யும், கொம்புகளையும் அருகே வந்து உற்றுப் பார்த்தான்.

தெரிந்துவிட்டது! அது வெளிச்சைதான். வெட்டி உரித்துக் கிடந்த ஆறு மாட்டில்

**கல்கி – பி.எம்.சில்க்ஸ்**

**இணைந்து வழங்கும்**

**பட்டுப் புடைவை**

**பரிசுப் போட்டி முடிவு – 9**

'பேப்பர் வெயிட்டாக ஜாகூப்' என்ற கட்டுரைதான் வைர பழமொழி இடம் பெற்ற கட்டுரை என எண்ணற்ற வாசகர்கள் எழுதியிருந்தார்கள். குலுக்கல் முறையில் பரிசு பெறுகின்றார்:

**எம். பார்வதி,**
**ஆர்.கே. ஃபிளாட்ஸ், ஜீவானந்தம் தெரு,**
**கே.கே.நகர் மேற்கு, சென்னை – 78.**

நடுவாந்திரமாய் கிடந்தது வெளிச்சைதான். உயிரற்ற வெள்ளைப் பாறையாய், உரித்த தன் தோல் மேலேயே கிடந்தான் வெளிச்சை. கனகுவின் கண்ணில் ரத்தம் சூல் கொண்டது. மூச்சுவாங்க வியர்த்துக் கொட்டியது. தலை சுற்றுவது மாதிரி இருந்தது.

"டேய்ய்......எவன்டா என் வெளிச்சய கொண்டாந்து இப்புடி சீரழிச்சது!"

ஆங்காங்கே ஆட்கள் வேலையை நிறுத்தி அவனைப் பார்த்தார்கள். ராமசாமி உட்கார்ந்தபடியே,

"என்னப்பா கனகு, அது ஓங்காளக் கன்னா? அட சண்டாளங்களா, யாரோ வடக்கித்தி கோமாபுரத்தான்ல கொண்டாந்து விட்டான். டேய் ராசுகுட்டி, போய் விசாரிச்சு கொண்டாடா அந்த....மவன..."

ராமசாமி பேச்சை நம்புவதா, விடுவதா என்று தெரியவில்லை. மூச்சறுபட்டு, சுண்ணாம்பு திட்டுபோல் கிடந்தது வெளிச்சை. மூடப்படாத அதன் பெரிய கண்களில் ஏக்கம் பொங்கி உறைந்திருந்தது.

"ஐயா.... வெட்டிக்கெடக்குறது காளயில்லையா, அய்யனாரு! என் வெளிச்ச அய்யனாருய்யா, வெளிச்ச அய்யனாரு."

அதற்குமேல் வார்த்தை வரவில்லை. கனகுவிடம் இதுவரை வராத வித்தியாசமான கொழகொழத்த குரலில் அழுகை வந்தது.

ஒரு வாரம் கழித்து கனகு இல்லாத நேரத்தில் ராமசாமி வந்து, மனைவி லெட்சுமியிடம் மூவாயிரம் ரூபாய் கொடுத்துவிட்டுப் போனார். வெளிச்சையைக் கொண்டு வந்து கொடுத்தவனை போலீஸில் கொண்டுபோய் ஒப்படைத்து விட்டார்களாம். கனகு அந்தப் பணத்தை கண்ணால் பார்க்கவே இல்லை. லெட்சுமியிடம் சொல்லி அய்யனார் கோயிலுக்கு ஆளுயர விளக்கு வாங்கி வைக்கச் சொன்னான். அஞ்சு காசு மிஞ்சினாலும் அதை அப்படியே உண்டியலில் போடச் சொன்னான். அவளும் அதேபோல் செய்துவிட்டாள்.

அந்த வாரம் அவன் வீட்டில் இரண்டு தடவை மணக்க மணக்க கறிக் குழம்பு வைத்தாள் லெட்சுமி. குழந்தைக்கும், அவனுக்கும் போட்டாள். அவன் குழம்பைத் தொடவேயில்லை. வெறும் தண்ணீர் கஞ்சியும், ஊறுகாயும்தான். ஏனென்று சொல்லாமலே லெட்சுமியும் புரிந்து கொண்டாள்.

அன்று வெள்ளிக்கிழமை. அதிகாலை இருள் நேரம். வைத்தியலிங்கம் கனகை எழுப்பி வெட்டுக்கு வரச் சொன்னார். கனகும் முகம் கழுவி, சட்டை மாட்டிக் கொண்டு கத்திகளை எடுத்தான்.

விடிகாலை இருட்டில் மரங்களே நிழல்களாய் நின்றிருந்தன. கீழ்வானத்தில் ஒளிரேகைகள் மெல்ல படர ஆரம்பித்திருந்தது. கனகு நேராக அய்யனார் கோயில் குளத்திற்குச் சென்றான்.

உள்ளே அய்யனாருக்குப் பக்கத்தில் ஆளுயர விளக்காய் வெளிச்சை நின்றிருந்தது. தீப அலங்காரத்தோடு வெளிச்சையைப் பார்த்தபோது மனசு வெலவெலத்தது. வெளிச்சையை வணங்கினான். கைகள் நடுங்கின.

திலகமாய் எரிந்த தீபச் சுடர் ஒன்று மெல்லச் சுருங்கி, திரண்டு ஒரு சொட்டாய்க் கீழே விழுந்ததுபோல் இருந்தது. அது விளக்கு வெளிச்சை அழுத கண்ணீரா அல்லது இவன் கண்ணில் இருந்து விழுந்த துளியா என்று விளங்க சற்று நேரமானது.

"என்ன மன்னிச்சிரு வெளிச்ச, என்னால வாயத்தான் கட்ட முடிஞ்சுச்சு, குடும்பத்தோட வயித்த கட்ட முடியலையே! எனக்கு வேற பொழப்பும் தெரியாம போச்சே வெளிச்ச, என்ன மன்னிச்சிரு ராசா."

மனசுக்குள் புலம்பியவாறு வெளியே வந்தான். கத்திகளை எடுத்து இடுப்பில் சொருகிக் கொண்டான். தூரத்தில் நின்ற கேரளலாரிகளை நோக்கி நடக்க ஆரம்பித்தான். ○

# நான் தான் ஃபஸ்ட்!



இந்தியாவின் பிரபல ஓட்டப் பந்தய வீராங்கனை பி.டி.உஷாவை 'பயோலி எக்ஸ்பிரஸ்' என்று அழைப்பார்கள். பயோலி, உஷா பிறந்த இடம். உலகப் புகழ் பெற்ற தடகள வீரரான ஜெஸி ஓவன்ஸை 'எபோனி எக்ஸ்பிரஸ்' என்று குறிப்பிடுவார்கள். 'எபோனி' என்பது அவர் பிறந்த ஊரின் பெயரா? இல்லை. எபோனி என்பது ஒருவகை மரம். கறுப்பு வண்ணத்தில் உள்ள இது கல்லைப் போல உறுதியானது. காரணப் பெயர் புரிந்திருக்குமே!



கிறிஸ்துமஸ் வாழ்த்து அட்டைகளில் மிக அதிகம் இடம் பெறும் விலங்கினம் எது? நீலக்குயில் அல்லது புறாவுக்குதான் இந்தப் பெருமை பல வருடங்களாகக் கிடைத்து வந்தது. ஆனால் சமீபத்தில் எடுக்கப்பட்ட கணிப்பின்படி மிக அதிகம் விற்பனையாவது பெங்குவின் மற்றும் துருவக் கரடி இடம் பெற்றுள்ள வாழ்த்து அட்டைகள்தானாம்.

டால்பின்களுக்குக் காதுகள் கிடையாது. பின் எப்படி அவை ஒலிகளைக் கேட்கின்றன? 'அவற்றின் தோலில் ஊசிமுனை போன்ற துளைகள் உண்டு. அவற்றின் வழியே ஒலி அலைகள் உள்ளே செல்கின்றன' என்றார்கள். ஆனால் அந்த ஒலி அலைகள் எந்த உறுப்பின் வழியாக செய்திகளாக மாற்றம் பெறுகின்றன என்பதற்கான விளக்கம்

இதுவரை கிடைக்கவில்லை. டால்பின் முகத்தில் உள்ள கொழுப்புச் சத்துக்கும் கேட்கும் சக்திக்கும் சம்பந்தம் உண்டு என்று சிலர் கருதினாலும் துல்லியமான விடை கிடைக்காமல் இருந்தது. இப்போது ஹவாய் தீவுகளைச் சேர்ந்த கடல்வாழ் விலங்கின அமைப்பைச் சேர்ந்த விஞ்ஞானிகள் இதற்கு விடை கண்டிருக்கிறார்கள். கீழ்த்தாடையில் உள்ள கொழுப்புப் பகுதியிலிருந்து மெல்லிய கால்வாய்கள் உள்ளே செல்கின்றனவாம். இந்தக் கொழுப்புகளே செவிப்பறைபோல வேலை செய்கின்றனவாம்.

இந்த விஞ்ஞான யுகத்திலுமா என்று வியப்படைய வைக்கும் நிகழ்ச்சிகளும் நடந்து கொண்டுதானே இருக்கின்றன! கிரீஸ் நாட்டிலுள்ள ஒரு தீவு லெமனோஸ். இதன் அரசு அந்தத் தீவின் மீது விதிக்கப்பட்ட ஒரு சாபத்தை நீக்குவதற்காக 6500 டாலர்களைச் சமீபத்தில் செலவழித்துள்ளது. சுமார் 180 வருடங்களுக்கு முன் அந்தப் பகுதியைச் சேர்ந்தவர்கள் ஒரு புத்த விகாரத்தின்மீது தாக்குதல் நடத்த முயற்சி செய்தபோது, அந்த இனத்தவர்களுக்குத் தூக்கமே வராமல் இருக்கக் கடவது என்று புத்த பிக்குக்கள் சாபமிட்டனராம். இதன் விளைவாக லெமனோஸ் தீவுக்காரர்கள் ஒரு நாள் கூட நிம்மதியாகத் தூங்க முடியாமல் போக, அந்த சாபத்தை நீக்க ஒரு புத்த பிக்குக்கள் ஊர்வலத்தையே அழைத்து வந்து பிராயச்சித்தத்தைச் செய்திருக்கிறது அரசு! பலனிருந்ததா என்பது இனிமேல்தான் தெரிய வேண்டும்.





பி.பி.ஸி. நிலையத்தில் பாதுகாக்கப்பட்டு வைக்கப்பட்ட ஒரு பொருள் சமீபத்தில் திருட்டுப் போயிருக்கிறது. ரிச்சர்ட் பர்ட்டனின் 1968ம் வருட டைரிதான் அது. அதில்தான் எலிசபெத் டெய்லரோடு தனக் கேற்பட்ட சில மனக்கசப்புக்களை எழுதியிருந்தார் பர்ட்டன். தான் மணவாழ்விலிருந்து விலகிவிடுவதாகக் கூறியது, உடனே அதைத் தாங்க முடியாத எலிசபெத் டெய்லர் தூக்க மாத்திரைகளை விழுங்கியது போன்ற சம்பவங்கள் அதில் விவரிக்கப்பட்டுள்ளனவாம்.

வயதானால் வீட்டிலிருந்து முதியோர் இல்லத்திற்கு அனுப்பும் மனிதாபிமானமற்ற வழக்கத்தை மனிதர்கள் தமது இனத்தோடு நிறுத்திக் கொள்வதாகத் தெரியவில்லை. ஜெர்மனியிலுள்ள மிருகக் காட்சி சாலையில், ஒரு சிம்பன்ஸிக் குரங்குக்கு வயதாகி விட்டதாம். ஆப்ரிக்கக் காடுகளிலிருந்து அதன் பத்தாவது வயதில் பிடித்து வரப்பட்ட இந்தக் குரங்குக்கு இப்போது எண்ணற்ற பேரன் பேத்திகள்! வயதாகிவிட்டதால் மவுசு போய்விட்டதாக நினைக்கும் ஜெர்மன் அதிகாரிகள் இதை ஆப்ரிக்கக் காடுகளுக்கே அனுப்பிவிடத் தீர்மானித்திருக்கிறார்கள்!

இந்தித் திரையுலகில் சுதந்தரப் போராட்ட வீரர் பகத்சிங்குக்கு ஏகப்பட்ட கிராக்கி. தர்மேந்திராவின் மகன் சன்னி தியோல், ராஜ்குமார் சந்தோஷி, கேவல் காஸ்யப் ஆகிய மூவருமே (தனித்தனியாகத்தான்) பகத்சிங்கைப் படமாக்கத் திட்டமிட்டிருக்கிறார்கள்.

அமெரிக்காவிலுள்ள எந்த பல்கலைக் கழகத்தைத் தமது மேற்படிப்புக்காகத் தேர்ந்தெடுத்திருக்கிறார் முன்னாள் அமெரிக்க அதிபரின் மகளான செல்ஸியா?...

அவர் தேர்ந்தெடுத்திருப்பது ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தைத்தான். நியூயார்க்கில் அம்மா இருக்க, அப்பா பெரும்பாலும் வாஷிங்டனில் தங்க, மகள் இங்கிலாந்தைத் தற்காலிகமாகத் தேர்ந்தெடுத்திருக்கிறார்.

தொகுப்பு : குல்லூ

# ரம்பாவின் பிளாண்ட் பிரவேசம்

சினிமா நட்சத்திரங்கள் பலரும் தங்களுக்கென்று பிரத்யேகமான இணைய தளங்கள் வைத்திருக்கிறார்கள். அந்தப் பட்டியலில் லேட்டஸ்டாக சேர்ந்திருக்கிறார் ரம்பா.

www.ramba.com. என்ற அவரது இணைய தளம், வழக்கமான சினிமாக்காரர்களின் இணையதளத்திலிருந்து ரொம்ப வித்தியாசமானது. பக்கம் பக்கமாகப் பயணிக்கிற போது, ரம்பா நடித்துப் பிரபலமான பாடல்களின் டியூன்கள் பின்னணியில் ஒலிக்கின்றன. இந்த வெப் சைட்டை வடிவமைத்திருப்பவர் லாவண்யா சாரதி.

"ரம்பா, தன்னைப் பற்றி நேரிடையாகப் பேசுவதுபோலவே, தகவல்கள் இடம் பெற்றுள்ளன. அது மட்டுமில்லாமல், ரஜினி, கமல் உட்பட பல பிரபலங்களைப் பற்றிய தனது எண்ணங்களை, பிரத்யேகமாக ரம்பா சொல்லியிருக்கிறார். இன்னொரு குறிப்பிடத்தக்க அம்சம், பார்வையாளர் புத்தகம். வழக்கமாக, 'விஸிட்டர்ஸ் புக்' பகுதியில் இணைய தளத்தைப் பார்வையிடுகிறவர்கள், அது பற்றிய கருத்துக்களைக் குறிப்பிடுவதுதான் வழக்கம். ஆனால், ரம்பாவின் இணையதளத்தில், 'உங்கள் கருத்துக்களை, நேரடியாக ரம்பாவுக்கே தெரிவிக்கலாம்' என்று குறிப்பிட்டு, அவரது ஈமெயில் முகவரி தரப்பட்டுள்ளது. இந்த ஐடியாவை, நான் மற்ற நடிகைகளுக்கும் சிபாரிசு செய்கிறேன்" என்கிறார் லாவண்யா சாரதி'

வெப் டிசைனிங் என்ற இணைய தள வடிவமைப்புப் பயிற்சியை அண்மையில் தான் முடித்தார் லாவண்யா. இதுதான் அவர் உருவாக்கியுள்ள முதல் இணைய தளம். ஆனால் டீ.வி மீடியம், அவருக்குப் புதிதில்லை.

"லலிதா ஜுவல்லரிக்காக, பத்து வாரங்களுக்கு ஒவ்வொரு நகையையும் மையமாக வைத்து பிரபல எழுத்தாளர்கள், எழுதிய கதைகளை, 'ஆபரணக் கதைகள்' என்ற தலைப்பில் தயாரிக்கும் பொறுப்பு என் அப்பா (பொம்மை) சாரதிக்குத் தரப்பட்ட போது, நான் தயாரிப்பு நிர்வாக ஒருங்கிணைப்பு பொறுப்பேற்றேன். அதுதான் டீ.வி மீடியத்தில் எனக்குக் கிடைத்த முதல் அறிமுகம். அதன்பின் டீ.வி என்னை ரொம்பவே ஈர்த்துவிட்டது" என்கிறார் லாவண்யா.

WWW



* லாவண்யா சாரதி



ஆபரணக் கதைகள் எடுத்த போது ஒரு சுவையான அனுபவம். ஒலிப்பதிவு கூடத்தில் டப்பிங் நடந்துகொண்டிருந்தபோது, அங்கே இருந்த நாகேஷிடம், என் அப்பா கேஷுவலாக 'வாருங்கள்! எங்கள் வீட்டுக்கு லஞ்சக்குப் போகலாம்' என்று கூற அவரும் உட னடியாய் சம்மதித்துவிட்டார். கம் பெனி காருக்குக்கூட காத்திருக்காமல், என் அப்பாவின் ஸ்கூட்டரிலேயே புறப் பட்டு விட்டார். வீட்டில் வழக்கமான லஞ்ச். சாப்பிட்ட பின் இரண்டு மணி நேரம் ஜாலியாக அரட்டை! பிறகு, "ஸ்கூட்டரிலேயே என்னை வீட்டில் கொண்டுபோய் விட்டு விடுங்கள்!" என்றார். கிரேட் நாகேஷின் எளிமை என்னை ஆச்சரியப்படுத்தியது.

"ஆபரணக் கதை களைத் தொடர்ந்து, 'காஸ்மிக் கம்யூனி கேஷன்ஸ்' என்ற பெயரில் சொந்தக் கம்பெனி ஆரம் பித்து, சினிமா

ரம்பாவின் இணைய தளத்திலிருந்து...

'**அ**ருணாசலம்' படத்தின் ஷூட்டிங்கில், முதல் தடவையாக நான், சூப்பர் ஸ்டார் ரஜினியைச் சந்தித்தவுடன் அவர் கேட்ட கேள்வி, என்னைப் பெரும் அதிர்ச்சிக்குள்ளாகியது. ''உங்களை மிகவும் கவர்ந்த நடிகர் சிரஞ்சீவிதானா? எங்களையெல்லாம் பிடிக்காதா?'' என்று கேட்டுவிட்டார். நான் வெட வெடத்துப் போனேன். ''அப்படியெல்லாம் ஒன்றுமில்லை'' என்று ஏதேதோ சொல்லி சமாளித்தாலும், உள்ளூர ஒரே பயம். (ஒரு பத்திரிகைப் பேட்டியில் நான் சிரஞ்சீவி பற்றி சொன்னதன் அடிப்படையில்தான் ரஜினி இப்படிக் கேட்டார்) ''உன்னை தர்ம சங்கடப்படுத்த நான் அப்படிக் கேட்கவில்லை! நீ செட்டில், சகஜமாய்ப் பழக வேண்டும் என்பதற்காக, தமாஷ் செய்தேன்'' என்றதும்தான் எனக்கு மூச்சே வந்தது.

'**கா**தலா காதலா' படத்தின் ஷூட்டிங் போது, ஒரு டான்ஸ் காட்சி படமாக்கப்பட்டவுடன், என்னை மிகவும் பாராட்டிய கமல் சொன்ன கமெண்ட்: ''நான் ரம்பாவாகப் பிறக்கவில்லையே!''

'**வி**.ஐ.பி' படத்தின் ஷூட்டிங்கில், அன்று திடீரென்று சிம்ரனுக்கும், எனக்கும் ஒத்துப்போகவில்லை. அவர் இருந்தால், நான் நடிக்கமாட்டேன் என்றேன் நான். சிம்ரனும், 'ஒன்று நான் நடிக்கணும்; இல்லையென்றால் ரம்பா நடிக்கணும்' என்று சொன்னார் கண்டிப்பாக. டைரக்டருக்கோ தர்ம சங்கடம். புரொடியூசருக்குத் தகவல் போய் அவர் வந்தார். ''ப்ளீஸ், அட்ஜெஸ்ட் செய்து கொள்ளுங்கள்'' என்று கேட்டுக் கொண்டார். அப்போதுதான் நாங்கள் இரண்டு பேரும் குட்டை உடைத்தோம்''

''இன்றைக்கு என்ன தேதி! ஏப்ரல் ஒண்ணு! உங்களையெல்லாம் ஏப்ரல் ஃபூலாக்கின எங்கள் திட்டம் எப்படி?''



நட்சத்திர பேட்டிகளைப் படம் பிடித்தேன்.

''ஸ்டார் டீ.வி.யில் ஒளிபரப்பாகும் 'ரிச் அண்டு பேமஸ்' ஸ்டைலில், நடிகர் விஜய் பேட்டியின்போது அவரது வீட்டுச் சமையல் அறையைப் படம் பிடித்துக்கொண்டிருந்தோம். சமையல்காரர், "விஜய், ரொம்ப நல்லா தோசை சுடுவார்'' என்றார். ''எங்கே, நீங்கள் தோசை சுடுங்கள்'' என்றதும் விஜய் அடுப்பைப் பற்ற வைத்து, மொறு மொறு என சூப்பராக ஒரு தோசை சுட்டு எடுத்தார். அதையும் படம் பிடித்தோம்.

''ரம்பாவின் பேட்டிக்கு நேரம் கேட்டு போன் செய்தபோது, அவர் குஷி மூடில் இருந்தார். அவரது செல்ல நாய் பன்னிரண்டு குட்டி போட்டிருந்ததுதான் குஷிக்குக் காரணம். ஒரு வாரம் கழித்து, பேட்டிக்குப் போனபோது மூன்று குட்டிகள் மிஸ்ஸிங்! எங்கே என்று கேட்டபோது சோகமாய் ஒன்று இறந்துவிட்டது என்றார். மீதி இரண்டு? ஒன்றை சிரஞ்சீவிக்கும், இன்னொன்றை சல்மான் கானுக்கும் பரிசாகக் கொடுத்து விட்டாராம்!''

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

குழந்தைகளுக்கு கை-கால் இழுப்பு வந்தவுடனே, வலிப்பு நோய் வந்துவிட்டதோ என்று பெற்றோர் மிகவும் பயந்துபோய், டாக்டரிடம் ஓடுகிறார்கள்.
குழந்தைகளுக்கான நரம்பியல் மருத்துவ நிபுணர் டாக்டர் கே. பாண்டியன் விளக்கங்கள் தருகிறார்.

# வலிப்பு ஜீன்களுடன் சம்பந்தப்பட்டதா?

**குழந்தைகளுக்குக் காய்ச்சல் கண்டவுடன் சில சமயங்களில் வலிப்பு மாதிரி கை, கால்கள் இழுத்துக் கொள்ளுவது ஏன்?**

காய்ச்சல் அதிகமானவுடன், சில குழந்தைகளுக்கு இந்த மாதிரி இழுப்பு வருவதுண்டு. மூளையில் கிருமித் தொற்று எனப்படும் இன்ஃபெக்ஷன் காரணமாக பாதிப்பு எதுவும் இல்லாமல், ஜுரம் அதிகரித்தவுடன் வரும் இழுப்பை Febrile Fits என்பார்கள். ஆனால் காய்ச்சல் எதுவும் இல்லாத குழந்தை, மூச்சுக் குழலில் சிறிய பாதிப்பினால் அல்லது சாதாரண உபாதை ஏதும் காரணமாக, விழிகளை உருட்டி, திடீரென்று மேல்பார்வை பார்க்கும். அழாது. சில வேளைகளில் உதடுகள் கோணிப் போவதும், வாயில் நுரை வருவதும்கூட உண்டு. உடம்பை முறுக்கிக் கொண்டு கையையும் காலையும் கோணலாக இழுக்கும். சாதாரணமாக இது சில விநாடிகள் அல்லது நிமிடங்கள் நீடிக்கும். பிறகு தானாகவே நின்று போய் விடும். சில குழந்தைகள் பதினைந்து நிமிடங்கள்கூட இந்த நிலைமையில் இருந்து பயமுறுத்தும்.

**எப்போது அல்லது எப்படி இந்த நிலைமை வருகிறது?**

உடல் உஷ்ணம் சற்று அதிகரித்தாலே போதும், சில குழந்தைகள் இந்த மாதிரி இழுப்பு வந்து தவிக்கும். ஆனால் இது முதல் தடவையோடு சரி. இரண்டாவது தடவை வருவது கிடையாது. ஆனால் இரண்டாவது அல்லது தொடர்ந்து இந்த நிலை அடுத்தடுத்து வருமானால், தீவிர பரிசோதனை செய்வதுதான் நல்லது.


* கே.பாண்டியன்

**எந்த வயதில் இது வரும் டாக்டர்?**

குழந்தையின் ஆறாம் மாதம் முதல் ஐந்து வயது வரை இந்த இழுப்பு வரலாம். இதை மருத்துவர்கள் கன்வல்ஷன்ஸ் என்பார்கள். இதிலும் ஆண் குழந்தைகளுக்குத்தான், பெண் குழந்தைகளைவிட அதிகமாக வரும். அதனால் பரிசோதனை மேற்கொண்டு வலிப்பு நோய் தாக்கம் ஆரம்பமாயிருக்கிறதா, இல்லையா என்று அறிந்து கொள்ளுவது நல்லது.

**ஏன் இந்த இழுப்பு அல்லது வலிப்பு வருகிறது?**

சில குழந்தைகளின் மூளைப் பகுதி, திடீரென்று அதிகரிக்கும் உடல் சூட்டை - காய்ச்சலை, எதிர் கொள்ள இயலாமல் போகிற போது வலிப்புக்கு இடம் கொடுத்து விடுகிறது.

**வலிப்புகளில் எத்தனை வகை உண்டு?**

ஃபெப்ரைல் ஃபிட்ஸ் என்று குறிப்பிட்டேனே. அது பொதுவானது. குழந்தையின் உடம்பின் வலப்புறம், இடப்புறம் இரண்டு பகுதிகளையும் பாதிக்கும். ஆனால் தானே சரியாகிவிடும். முழு சுய உணர்வையும் பெற்று விடும். பக்கவாதம், உடல் தளர்ச்சி, உணர்ச்சியை வெளிக்காட்டமை இவை எதுவுமே இல்லாமல் இருந்தால், அது சாதாரண ஃபெப் ரைல் ஃபிட்ஸ்.

ஆனால், சில நிமிடங்களுக்குத் தொடர்ந்து நீடித்து, 15 முதல் 30



நிமிடங்களுக்குத் தொடர்ந்தால், குழந்தையின் ஒரு பக்கத்துப் பாகங்களைப் பாதித்து, எந்த வித உணர்ச்சியும் வெளிப்படாமல் இருந்தால் அது காம்ப்ளெக்ஸ் ஃபெப்ரைல் ஃபிட்ஸ். பொதுவாகவே இந்த வகை பாதிப்புகளில், குழந்தை தானாகவே சரியாகிவிடும். மருத்துவர் வருவதற்குள்ளாகவே, பாதிப்பு மறைந்து விடுவதும் உண்டு.

**மறுபடி இதே மாதிரி வருமா?**

மேற் சொன்ன இரு வகை நோய்களிலும், குழந்தையின் ஆறாவது வயது வரை மறுபடி வர வாய்ப்பு இருக்கிறது. சின்னஞ்சிறு குழந்தைகள் விஷயத்திலும், ஏற்கெனவே குடும்பத்தில் குழந்தைகளுக்கு வந்திருந்தாலும், அல்லது ஏற்கெனவே நரம்பு ரீதியான பிரச்னை இருந்திருந்தாலும் மறுபடி வர வாய்ப்பு உள்ளது.

**ஃபெப்ரைல் ஃபிட்ஸ் மூளையைப் பாதிக்குமா?**

சில விநாடிகளே நீடிக்கும் குறுகிய தாக்குதல் சேதப்படுத்தாது. 20 நிமிடங்களுக்கும் மேலாக நீடிக்கும் பட்சத்தில் மூளையின் ஏதேனும் ஒரு பகுதியைப் பாதிக்கும். இதுவே பிறகு வலிப்பு நோயில் கொண்டு போய் விடும்.

**ஏன் இந்த நோய்த் தாக்குதல் சில குழந்தைகளுக்கே வருகிறது? பாரம்பரியம் சார்ந்த நோயா இது?**

தனிப்பட்ட குழந்தையின் சக்தியையும், இயல்பையும் பொறுத்தது. என்றாலும், குடும்பத்தில் பெற்றோருக்கோ, மற்ற உடன் பிறப்புகளுக்கோ இருந்தால், அந்தக் குழந்தைக்கும் வர வாய்ப்புகள் அதிகம். ஆனால் தீர்மானமாக அப்படித்தான் வரும் என்று உறுதியாகக் கூறுவதற்கான ஆதாரங்கள் இதுவரை நிரூபிக்கப்படவில்லை.

**ஃபெப்ரைல் ஃபிட்ஸ் வராமல் தடுக்க முடியுமா?**

முடியும். முதலில் ஜுரம் அதிகம் ஆகாமல் தடுத்து விட வேண்டும். பாராசிடமால் போன்ற மருந்துகளை, டாக்டர் குறிப்பிடுகிற அளவுக்குக் கொடுத்து வர வேண்டும். குழந்தையைப் போர்வைக்குள் பொதிந்து வைத்திருக்கக் கூடாது. இது சூடு குறைவதைத் தடுக்கும். ஈரத் துணி கொண்டு குழந்தையின் தலை முதல் கால் வரை ஒற்றி எடுத்தால், ஜுரம் குறையும்; உடல் சூடு தணியும். Diazepam, Clobazam முதலிய சில மருந்துகளை பாராசிடமால் மருந்துடன் சேர்த்து, வாய் வழியாகக் கொடுத்தால், ஃபிட்ஸ் (வலிப்பு) பெருமளவு வராமல் தடுக்க முடியும். வந்தபின், எந்த மருந்தையும் வாய் வழியாகக் கொடுக்கக் கூடாது.

• பதற்றப்படாமல், குழந்தையின் இறுக்கமான உடைகளைத் தளர்த்த வேண்டும்.

• குழந்தை ஒரு பக்கம் சாய்ந்து படுத்தல் நல்லது.

• காற்றோட்டமுள்ள இடத்தில், மின்விசிறிக்குக் கீழே குழந்தையைப் படுக்க வைக்க வேண்டும்.

• முதுகில் இலேசாகத் தட்டி, வியர்வை முதலான வெளியேற்றங்களைத் துடைத்து எடுக்க வேண்டும்.

• குழந்தையின் மூளையைப் பாதித்துவிட வாய்ப்புக் கொடுக்காமல், உடனே மருத்துவரின் உதவியை நாடுவது நல்லது.

**- சாருகேசி**

# அக்னிசர்மா பக்கம் அக்டோபர் 17 முதல் 23 வரை



**மேஷம் :** உலகத்தோட கண்களெல்லாம் இப்போ பின்லேடன் மீது இருக்கற மாதிரி எல்லா கிரகமும் உங்க மேல நல்ல பார்வை பார்க்கறதால செம ஜாலி தான் போங்க. உங்க திறமை, துணிச்சல், தன்னம்பிக்கையெல்லாம் வெளிப்படப் போகுது. ஓடி ஒளிஞ்சுக்கிட்ட தாலிபான் தலைவர் ஓமர் மாதிரி எதிர்ப்புகள் ஓடி ஒளியும். இருந்தாலும் பிரச்னைகள் வந்து இம்சை பண்ணத்தான் செய்யும். புதிய முயற்சிகள் இப்ப வேண்டாம். ஏற்றுமதி இறக்குமதி பண்றவங்களுக்கு ஆதாயம் கூடும். பேச்சில் இனிமை அவசியம்.



**ரிஷபம் :** காபூலை அட்டாக் பண்ணிவிட்டு அந்நாட்டு மக்களுக்கு உணவு பொட்டலங்களை அமெரிக்கா போட்ட மாதிரி உங்களுக்கு இரக்க குணம் இந்த வாரம் எக்கச்சக்கமா வரும். எந்தக் காரியத்தையும் தலைகீழா நின்னாவது முடிச்சுடுவீங்க. ஆசிரியர்கள், பேராசிரியர்கள், மத போதகர்கள் பிரசங்கிகளுக்கெல்லாம் இது பருவமழை பொழியும் காலம். ஜமாயுங்க! கொடுக்கல் வாங்கல்ல லாபம் கொட்டும். வெளியூர் பயணம் இப்ப வேண்டாம். முன்னபின்ன தெரியாதவங்கக்கிட்ட வாயைக் கொடுக்காதீங்க. வீண் வாக்குவாதங்கள்ல தலைகாட்ட வேண்டாம். கூட பிறந்தவங்களால சில பிரச்னைகள் ஏற்படலாம். எந்தக் காரியத்துலயும் பொறுமை அவசியம்.



**மிதுனம் :** அமெரிக்காக்கிட்ட மாட்டிக்கிட்டு முழி பிதுங்கற பின்லேடன் மாதிரி தவிப்புகள் அதிகரிக்கும். எதிலயுமே கொஞ்சமல்ல நிறையவே உஷாரா இருந்தா பிரச்னைகள்ல இருந்து தப்பிக்கலாம். வீண் அலைச்சலும், செலவும் அதிகரிக்கும். உடல் நலன்ல கவனம் முக்கியம். கணவன் மனைவிக்குள்ள சின்னச் சின்ன பிரச்னைகள் வரும். அமைதிக் காத்தால் பெரிய பிரச்னை ஆகாமல் தவிர்க்கலாம். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு நல்லதும் கெட்டதுமான பலன்கள் மாறி மாறி வரும். ஜாக்கிரதை!



**கடகம் :** 'வெற்றி மீது வெற்றி வந்து என்னைச் சேரும்'னு நீங்க பாட்டுப் பாடலாம். மனசுல துணிச்சலும் தன்னம்பிக்கையும் 'ஜில்'லுனு தெம்பு காட்டும். மேலதிகாரிங்க பாராட்டுக் குவியும். எழுத்து, பத்திரிகை, கணிதத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு இது 'ஓஹோ' வாரம். குடும்பத்துல மகிழ்ச்சிக் கரை புரளும். இதுவரை, 'நிறைவேறுமா? வேறாதா?'ன்னுட்டிருந்த காரியம் இப்ப நிறைவேறும். இதனால மகிழ்ச்சி இரட்டிப்பாகப் போகுது. செலவு எகிறும். சிக்கனம் அவசியம்.



**சிம்மம் :** உங்க திறமை பளிச்சிடப் போகுது. முகவசீகரம் அதிகரிக்கும். அடிக்கடி கண்ணாடிப் பார்த்து சிரிச்சுக்குவீங்க. பண நடமாட்டம் அதிகரிக்கும். கொடுக்கல் வாங்கல் ஆதாயம் கொண்டுவரும். மருத்துவம் இரசாயனம், விஞ்ஞானம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்க முன்னணிக்கு உயருவாங்க. பெண்கள் புது நகைகள் ஆடைகள் வாங்க வாய்ப்பிருக்கு. வெளி நாட்டுல இருந்து நல்ல செய்தி வந்து கதவைத் தட்டும். குடும்பத்துல 'டும்டும்' நடக்க சந்தர்ப்பம் வரும். எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்களுக்கெல்லாம் வழக்கமான வளர்ச்சி உண்டு. பல வழிகள்ல இருந்து பணம் வந்து பையை நிரப்ப வாய்ப்பிருக்கு.



**கன்னி :** ஸாரி... இந்த வாரத்தில் நல்ல பலன்களை எதிர்பார்க்க வேண்டாம். தடைகள், குறுக்கீடுகள் ஏற்படும். அலைச்சல் அதிகரிக்கும். அதனால உடல் நலன்ல கவனம் வைக்க வேண்டி இருக்கும். இயந்திரப் பணியாளர்கள், என் ஜினீயர்களுக்கெல்லாம் பிரச்னைகள், சங்கடங்கள் அதிகரிக்கும், வார பின்பகுதியில் நல்ல திருப்பம் வரும். வெளிநாட்டுல இருந்து நல்ல தகவல் வந்து சேரும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குச் சுமாரான வாரம். ஏற்றுமதி இறக்குமதியில் ஆதாயம் கொட்டும்.



**ஜோதிடர் முருகு ராஜேந்திரன் (மகரம்) மக்கள் நலனில் கவனம் செலுத்த வேண்டுமாம்!**

# நடக்குமென்பார்; நடக்கும்!



**துலாம் :** இதுவரை எரிச்சல் ஏற்படுத்திய பிரச்னைகள் ஓடிப் போகும். போட்டி பந்தயங்கள்ல வெற்றி கிடைக்கும். பொறியியல், சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகள்ல வேலைப் பார்க்கறவங்களுக்குப் புகழ் கூடும். வெளிநாட்டுல இருந்து நல்ல செய்தி வரப் போகுது. கணவன் மனைவி உறவு நிலை திருப்தியா இருக்கும். கொடுக்கல் வாங்கல்ல லாபம் கொட்டும். அரசியல்வாதிகள் பொறுப்போடு பேசறது நல்லது. இல்லேன்னா வம்புதான். உஷார்!



**விருச்சிகம் :** உங்க திட்டமெல்லாம் இந்த வாரம் நிறைவேறப் போகுது. எதிர்ப்புகள் இருக்காது. பொருளாதாரம் திருப்தியா இருக்கும். அதுக்காக கண்டபடி செலவழிக்காதீங்க. பத்திரிகை, எழுத்து, கணிதத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்குப் பாராட்டு உண்டு. அலுவலகப் பணியாளர்கள், உத்தியோஸ்தர்களுக்கெல்லாம் உயரதிகாரிகள் பாராட்டு உண்டு. அரசியல்வாதிகள் விழிப்போடு செயல்படறது நல்லது. வீண் சண்டை சச்சரவுகள்ல ஈடுபட வேண்டாம். பேச்சில பதற்றம் அவசரம் கூடாது. கோபத்தைக் குறைங்க.



**தனுசு :** பொருளாதார நிலை இந்த வாரம் 'ஓஹோ'ன்னு இருக்கும். கொடுக்கல் வாங்கல்ல லாபம் குவியும். குடும்பத்துல சிலருக்கு 'பாப்பா' பிறக்கப் போகுது. புதிய சொத்துகள் சேர வாய்ப்பிருக்கு. அரசாங்க விவகாரங்கள்ல அனுகூலம் உண்டாகும். அரசியல்வாதிகளுக்கு அடிச்சாச்சு சூப்பர் பிரைஸ். வெளிநாட்டுத் தொடர்பு ஆதாயம் தரும். சினிமா, நாடகம், சங்கீதம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு அளவோடு நலம் உண்டு. எதிலும் அவசரம் பதற்றம் வேண்டாம்.



**மகரம் :** குரு, செவ்வாய், கேது, சனி ஆகிய முக்கிய கிரகங்கள் ஜாலியாக தோளில் கை போட்டு உலவுவதால் எதிலேயும் முழுமையான முன்னேற்றத்தைக் காண முடியாது. தொல்லைகள், இடர்பாடுகள் வந்து எரிச்சல் படுத்தும். மக்கள் நலன்ல கவனம் அவசியம் பேசும்போது அடக்கி வாசிக்கறது நல்லது. மத்தவங்க அதிருப்திக்கு ஆளாக வேண்டாம். வீண் வாக்குவாதத்துல, ஈடுபட வேண்டாம். சண்டை சச்சரவுகளைத் தவிர்த்துடுங்க. எரிபொருள், ஆயுதங்கள் ஆகியவற்றைப் பயன்படுத்தும்போது எச்சரிக்கை அவசியம். எதையும் மனத்திடத்துடன் பக்குவமா சமாளிப்பது அவசியம். யாருக்கும் ஜாமீன் போடாம இருந்தா பிரச்னைகள்ல இருந்து தப்பிக்கலாம்.



**கும்பம் :** பண நடமாட்டத்துக்குப் பஞ்சமில்லை. பலவழிகள்ல இருந்து வந்து பர்ஸை நிரப்பும். ரேஸ், பந்தயம், லாட்டரி போன்ற இனங்கள்ல ஆதாயம் ஏற்படும். அலுவலகப் பணியாளர்கள், உத்தியோகஸ்தர்கள் எல்லாம் மகிழ்ச்சியில் குதிக்கற மாதிரி சம்பவம் நடக்கும். சிலருக்குப் புது சொத்துக்கள் சேரும். அரசியல், நிர்வாகம் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்க தத்தம் கடமைகளைப் பொறுப்போட செய்து வந்தால் சங்கடங்கள்ல இருந்து தப்பலாம். பெண்களுக்கு மாமூல் பலன் தடைபடாது. உடல் நலன்லயும் கவனம் வையுங்க. உஷ்ண சம்பந்தமான உபாதைகள் வரலாம்.



**மீனம் :** 'நல்ல காலம் பொறந்துடுச்சு'ன்னு குடுகுடுப்பைக்காரன் சொல்றது மாதிரி உங்களுக்கு நல்ல தகவல் ஒண்ணு இப்போ வந்து சேரப் போகுது. எந்தக் காரியத்தையும் எப்பாடுபட்டாவது நிறைவேற்றிடுவீங்க. இயந்திரப் பணியாளர்கள், என்ஜினியர்கள் ஆகியோர்களுக்கு லாபம் வந்து சேரும். புது சொத்துக்கள் வாங்குவீங்க. அதுக்கான நேரம் வந்திருக்கு. சட்டம், காவல், இராணுவத் துறைகளைச் சேர்ந்தவங்களுக்குப் புகழ், பாராட்டு உண்டு.

**பேசிப் பேசியே உயிரை எடுக்கிறார் ஜஸ்வந்த் சிங் என்பது மெதுவாக வாஜ்பாய்க்கும் புரிய ஆரம்பித்தது. அதுவும் பயங்கரவாதம், தீவிரவாத சிக்கல் என்றால் தீர்ந்தது கதை. எல்லா சேனலிலும், சர்வ நேரமும் அவரே. யாம் பெற்ற இன்பம் கொஞ்சம் புஷ் பெறட்டுமென்று ஜஸ்வந்தை அமெரிக்காவிற்கு மூட்டை கட்டினார்.**

"மிஸ்டர் புஷ், இந்தியாவோட அருமை புரியாம நீங்க வீணா பாகிஸ்தான் பின்னாடி போறீங்க. அவங்க எங்க உங்களுக்கு ஒசாமாவைக் காட்டப் போறாங்க?"

"ஓ.கே. உங்க இந்தியாவோட அருமை பெருமைதான் என்ன?"

"அப்படி கேளுங்க. எங்களுக்குப் பயங்கரவாதிகள் பதுங்கி இருக்கிற இடம், அவங்க நடமாட்டம் எல்லாம் துல்லியமா தெரியும். ஆனா பிடிக்கிறதில்ல..."

"வாட்?"

"தாவூத் இப்ராஹிம் இருக்கிற இடம் தெரியும். பிடிச்சோமா? மாட்டோம்."

"சந்தன வீரப்பன்னு ஒருத்தன் காட்டுல இருக்கான். அவனைப் பிடிக்கிறோமா...? இந்திய அரசியல் கலாசாரம் அப்படி."

"குழப்பறீங்களே ஜஸ்வந்த்!"

"விடுங்க மிஸ்டர் புஷ். நான் தெளிவா இருக்கேன். எங்களால ஒசாமாகிட்ட உங்களைக் கூட்டிப் போக முடியும்!"

அதிர்ந்து போனார் புஷ்.

"ஆனா நீங்க அவரைப் பிடிக்கக்கூடாது..."

"அய்யோ! ஏற்கனவே நான் குழம்பித் தவிக்கிறேன்..."

"எங்ககிட்டே அறிவு பலம், ஆட்பலம் எல்லாம் இருக்கு. நீங்களே பார்க்கப் போறீங்க" என்று சில வீடியோ காசெட்டுகளை புஷ்க்குப் போட்டுக் காட்டினார். அதைப் பார்த்ததும் 'ஹீ ஈஸ் தி ரைட் மேன்' என்று கையைப் பிடித்துக் குலுக்கினார்.

**வி**ஜயகாந்த் வீட்டில் டெலிபோன் மணியடித்தது.

"கேப்டன், அமெரிக்காவிலிருந்து போன்..."

"ஆ!... இவ்வளவு சீக்கிரம் ஹாலிவுட் அழைக்கிறதா?" என்று போனை எடுத்துப் பேச ஆரம்பித்தவர்... 'இதென்னடா மதுரைக்கு வந்த சோதனை' என்று திணறினார்.

"மிஸ்டர் புஷ், கவலையை விடுங்க! நான் ஒசாமாவைச் சந்திக்கிறேன். லியாகத் அலிகான், ஆர்.கே. செல்வமணி, மகாராஜன் இவங்களோட டிஸ்கஷன் பண்ணிட்டுதான் வந்திருக்கேன். ப்ளான் ரெடி."

"வெரிகுட்!"

"மிஸ்டர் புஷ், நீங்க ஒசாமாவைப் பிடிக்கக் கூடாது. அதைமட்டும் மறந்துடாதீங்க!" என்று மீண்டும் நினைவுபடுத்தினார் ஜஸ்வந்த்.

"நான் உங்க 'வாஷிங்டன் போஸ்ட்' நிருபரா, அவரைச் சந்திக்கத் திட்டம் போட்டிருக்கேன்..." தொடர்ந்தார் கேப்டன்.

"க்ரேட்! மிஸ்டர் விஜய் இன்னொரு விஷயம், ஒசாமாவோட அம்மா



# 'ஒசாமா பின் ஓ!சிம்மா'

என்னை மீட் பண்ணிணாங்க..."

"அம்மாவா...? மிஸ்டர் புஷ், அம்மா சென்டிமென்ட் வைச்சு எத்தனையோ சாதிக்கலாமே... உடனே நான் பி.வாசுவோட பேசியாகணுமே..." பரபரத்தார்.

**ப**த்திரிகையாளர் அந்

தஸ்நில், தொடர் செல் போன்கள் மூலம் ஒரு மாதிரி ஒசாமாவிடம் அப்பாயிண்ட்மெண்ட் வாங்கப்பட்டது.

ஆப்கான் எல்லையில், கடும் குளிரில், அதள பாதாள குகையில் ஒசாமாவை சந்திக்கும்போதும் கூட ஏதோ ஆர்.கே. செல்வமணி ஷூட்டிங் போலதான் பட்டது கேப்டனுக்கு.



"வாங்க நிருப நடிகரே, ஏன் உங்க 'நரசிம்மா' படம் ரொம்ப அவரேஜா போச்சு?" என்று முதல் ஏவுகணை தொடுத்தார் ஒசாமா.

அரண்டு போன விஜயகாந்த் சுதாரிப்பதற்குள்...

"ஆண் வேஷத்தில் வந்தாலும் அம்மாவை அடையாளம் தெரியாத மகன் இருக்க முடியுமா? உங்க பி.வாககிட்ட கேளுங்க..." சரமாரியாக 'ஸ்கட்' மிசைல் தாக்குதல். ஒடுங்கிப் போனார் கேப்டன்.

அந்தச் சமயம் பார்த்து ஒசாமாவின் தாய் உதவிக்கு வந்தாள்.

"மகனே, எப்படிடா இப்படி நீ கெட்டுப் போனே...?"

"உஷ்...!"

"பில்டிங் கட்டறவருக்கு மகனா பிறந்த உனக்கு எப்படிடா அடுக்கு மாடி கட்டடங்களை அழிக்க மனசு வருது?"

"உன்னை எப்படியெல்லாம் பாலூட்டி சீராட்டி வளர்த்தேன்...?"

"பொய் சொல்லாதம்மா! ஒட்டகப் பால் கொடுத்து வளர்த்துட்டு, தாய்ப்பால் கொடுத்த மாதிரி வசனம் பேசாதே..."

"நிஜந்தான். ஒட்டகப்பால் கொடுத்தேன். ஏன்...? நீ அது போல் சக்தியோட வளர..."

## மாதுரி

"போதும்.. நிறுத்து...!"

"நீ, நிறுத்தறதுக்கு முந்தி இன்னும் எத்தனை பேர் உயிரைக் குடிக்கப் போறே? எப்ப உன் ரத்த தாகம் அடங்கும்?"

"அம்மா, பத்து தமிழ் சினிமா பார்த்தே இவ்வளவு மாறிட்டியே!"

"நான் மாறல. இப்பதான் தாய் எப்படி இருக்கணும்னு தெரிஞ்சுகிட்டேன். அதுவும் இந்தத் தங்கத் தம்பியால!"

"மிஸ்டர் ஒசாமா, அம்மாவோட பெருமையை நிலை நாட்ட நீங்க சரண் அடைஞ்சிடுங்க" கோரிக்கை விஜயகாந்திடமிருந்து வந்தது.

"சரணா? ம்! நான் முடிக்க வேண்டிய வேலை நிறைய பாக்கி இருக்கு."

ஒசாமா பேசிக் கொண்டே இருக்கும் போது கொதித்துப்போன அவன் தாய், சட்டென்று பக்கத்திலிருந்த பிஸ்டலைப் பிடுங்கி...

"உன்னைப் போன்ற புல்லுருவிகள் உயிரோடு இருக்கவே கூடாது" என்று மகனைச் சரமாரியாக நெஞ்சில் சுட்டு வீழ்த்தினார். மாறு வேஷத்திலிருந்த புஷ் படபடத்தார்.

"அம்மா.. தப்பு பண்ணிட்டீங்க..." என்று ஒசாமா தரையில் சாய அவன் தாய் அருகே ஓடினாள். 'என்னைத் தொடாதே' என்பதுபோல் ஒசாமா கை காட்டினான்.

"தப்பு பண்ணிட்டீங்க" என்று புலம்பியப்படியே முகத்திரையை உரித்தான். தாடி உட்பட எல்லாம் தனியாக வர, உயிர் பிரிந்தது. அட! ஒசாமா இல்லை. வேறொரு நபர். புஷ், விஜய், ஒசாமாவின் தாய் அனைவரும் அசந்து போய் நின்றனர்.

"மிஸ்டர் புஷ், இதுதான் பயங்கரவாதம். அதுக்கு பல முகங்கள். கிளைக்கும் வேருக்கும் வித்தியாசம் தெரியாது. நாம சாய்ச்சது ஒரு கிளை. வேரைத் தேடியாகணும்... லியாகத் அலி அப்பவே சொன்னார்..."

"லியாகத் அலி...? ஹூ ஈஸ் ஹீ?" விழித்தார் புஷ்.

ஒடுக்கப்பட்ட மக்களிடம் உள்ளாட்சி அதிகாரம் கை மாறுவதைச் சகித்துக் கொள்ள முடியாத மனிதர்களும் உண்டு என்பதற்கு 'மேலவளவு' ஓர் உலுக்கும் உதாரணம். இதே தமிழகத்தில்தான் இருக்கிறது புள்ளலூர்.

காஞ்சிபுரம் அருகே வாலாஜாபாத் ஒன்றியத்தில் இருக்கும் முகம் தெரியாத சின்னஞ்சிறு கிராமம் என்று இந்த ஊரை இனி வர்ணிக்க முடியாது. பத்து சமுதாயங்களைச் சேர்ந்த மக்கள் வசித்து வரும் இந்த கிராமத்தின் மக்கள் தொகை ஐயாயிரம். இவர்கள் அனைவரும் ஒன்று கூடி 'பஞ்சவர்ணம்' என்கிற ஒரு தலித் பெண்மணியை, கிராம பஞ்சாயத்துத் தலைவராக ஒருமனதாகத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். இனி ஓவர் டு புள்ளலூர்.

பள்ளூர் ரயில் நிலையத்திலிருந்து கிழக்கு நோக்கிப் பிரியும், சாலையில் நான்காவது கி.மீ. தொலைவில் புள்ளலூர்.

வழிநெடுகிலும் நெல்லும் கரும்பும் செழித்துக்கிடக்க, கண்ணுக்கெட்டிய தூரம் வரை கண்களை நிறைக்கும் பசுமை.

சொன்னவரைக் கடந்து ஊருக்குள் நுழைகிறோம்.

உயர்நிலைப்பள்ளி, தொடக்க வேளாண்மை கூட்டுறவு வங்கி, மேல்நிலைத் தண்ணீர் தொட்டி, ஸோடியம் தெரு விளக்குகள், தொலைக்காட்சிபெட்டி அறை, கதிர் அடிக்கும் களம், ஊராட்சி அலுவலகம்... ஊரின் அனைத்து தெருக்களும் கான்கிரீட் மயம் என்று தன்னிறைவு அடைந்த கிராமமாக நம் கண்களுக்கு காட்சி அளிக்கிறது புள்ளலூர். ஆனால் மருந்துக்குக் கூட ஒரு கொடிக் கம்பத்தைக் காணோம்.

• லட்சுமி ராமசாமி





• பஞ்சவர்ணம்

# புள்ளலூர் காட்டும் புதிய பாதை

ஊருக்குள் நுழையும் முன் நம்மை வழி மறித்தார் ரகுராம். கணபதிபுரம் என்கிற பக்கத்து ஊரைச் சேர்ந்த பிராமணப் பட்டதாரியான இவர், புள்ளலூரில் விவசாயம் செய்கிறார்.

"இன்னிக்கி நேத்து இல்லே. உள்ளாட்சித் தேர்தல் கொண்டு வந்த காலத்தில் ஆரம்பிச்சு, இருபது இருபத்தஞ்சு வருஷமா இங்கே அன்னப்போஸ்ட்தான். பதவிக்கு வர்றவங்களும், அவங்க பேர் சொல்ற மாதிரி பல நல்ல காரியங்களைச் செய்து கொடுத்துடுறாங்க. ஒற்றுமைன்னா அது புள்ளலூர்தாங்க. இந்த ஊரில் பிறக்காமல் போயிட்டோமேன்னு சமயத்தில் வருந்துறது உண்டு" என்று ஏக்கமாகச்

நம்மை எதிர்கொண்டு அழைக்கிறார் அன்னப்போஸ்டாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட வார்டு உறுப்பினர் சண்முகம். "நான் மட்டும் இல்லே சார். மொத்தம் ஒன்பது வார்டு உறுப்பினர் இந்த ஊருக்கு. அத்தனை பேரையும் ஒருமனதாகத் தேர்ந்தெடுத்திருக் காங்க.



இங்கே வள்ளுவப் பண்டாரம் சமுதாயத்தைச் சேர்ந்த பத்து குடும்பங்கள்தான் இருக்கு. எல்லா சமுதாயத்துக்கும் பிரதிநிதித்துவம் இருக்கணும்கிறதனாலே அவங்களுக்கும் ஒரு வார்டு உறுப்பினர் கொடுத்திருக்கோம்னா பார்த்துக்கோங்க" என்று சொன்னவர் புதிய பஞ்சாயத்துத் தலைவர் பஞ்சவர்ணம் வீட்டுக்கு நம்மை அழைத்துக் கொண்டு போனார்.



• ரகுராம்



• சண்முகம்

கன்றுக் குட்டி ஒன்றை, கையில் பிடித்தபடி நின்றிருந்த பஞ்சவர்ணம் நம்மைப் பார்த்ததும் கைகுவித்து வணங்குகிறார். "கொஞ்சம் இருங்க, தலைவாரிட்டு வந்துடறேன்" என்றபடி புடைவை மாற்றி நெற்றியில் குங்குமம் தரித்து வந்தார்.

"எனக்கு அவ்வளவா பேச வராதுங்க. என் வீட்டுக்காரர் கிராம வங்கியிலே தலைவரா இருந்தவரு. அவரு உதவியோட ஊருக்கு என்ன தேவையோ அதை செஞ்சு கொடுப்போம். இப்போதைக்கு மேல்நிலைப் பள்ளியும், ஆஸ்பத்திரியும் வேணும்னு கூட்டத்துலே எல்லாரும் சொன்னாங்க" என்று வார்த்தைகளை எண்ணி எண்ணிப் பேசும் பஞ்சவர்ணம் எட்டாம் வகுப்புவரை படித்திருக்கிறார். ஐந்து பிள்ளைகளுக்குத் தாய். பஞ்சாயத்துத் தலைவர் என்கிற பந்தாவோ, அந்தப் பதவியின் அதிகாரத் தொனியோ எதுமில்லாத எளிய பெண்மணி. "கணவரிடம் கேட்டுத்தான் எதையுமே செய்வேன்" என்கிறார்.

கடந்தமுறை பஞ்சாயத்துத் தலைவராக ஒரு மனதாய்த் தேர்தெடுக்கப்பட்ட லட்சுமி ராமசாமி விவரமாகப் பேசுகிறார். "தி.மு.க. ஆட்சியில் கொண்டுவரப்பட்ட 'அண்ணா மறுமலர்ச்சி திட்டம்' மூலம், ஒரு பைசாவைக் கூட வீணாக்காமல் பார்த்துப் பார்த்து செஞ்சிருக்கோம். ரொம்ப ஆத்மதிருப்தியா இருக்கு" என்று பெரிய சாதனைப்பட்டியலே வாசித்தார். "மறுபடியும் நீங்களே போட்டியிட வேண்டியதுதானே" என்றால் "அது எப்படிங்க... ஊர் ஒற்றுமைதான் முக்கியம். பதவி முக்கியமில்லே"என்றவரிடம் விடைபெற்ற நம்மை, தடுத்தார் வார்டு உறுப்பினர் சண்முகம்.

"சமூக ஒற்றுமைக்கு ஒரு முன் மாதிரி கிராமமாக, புதிய வரலாறு படைக்கத் தொடங்கியிருக்கும் புள்ளலூரின் பழைய வரலாறைக் கேட்டால் அதிர்ந்து போவீர்கள். இங்கே கள்ளச்சாராயம் கிடையாது. இந்த ஊருக்குள் போலீஸ் வராது. எந்தப் பிரச்னை என்றாலும் பேசித் தீர்த்துக் கொள்வோம். காவல் நிலையத்தின் படிக்கட்டை இதுவரை மிதித்ததில்லை. நரசிம்மபல்லவன் இரண்டாம் புலிகேசி போரிட்ட இடம் இது. 'காஞ்சித் தலைவன்' படத்தில் 'புள்ளலூர்ப் போரில் தோற்று ஓடிய புலிகேசியா மீண்டும் வருகிறார்' என்று எம்.ஜி.ஆர். வசனம் பேசுவார். அது கலைஞர் எழுதிய வசனம்" என்றபடி பசுமை வயல்களுக்கு நடுவே நின்று கொண்டிருந்த இரட்டைக் கோபுரங்களை நோக்கி அழைத்துப் போனார்.

1781 ஆகஸ்ட் 27ம் தேதி புள்ளலூரில் நடந்த போரில் பிரிட்டிஷ் படைத்தளபதி சர் அயர் கூட்ஸ் பலியான நினைவுக் கல்வெட்டும், 1759–ஏப்ரல் 16ஆம் தேதி ஹைதர் அலி படையுடன் மோதி உயிர்துறந்த பிரிட்டிஷ் படையின் லெப்டினன்ட் கர்னல் ஜார்ஜின் நினைவுக் கல்வெட்டும் அங்கே காணக்கிடக்கின்றன. புகழ்பெற்ற புள்ளலூர் போர்க்களம் இன்று அமைதியாக இருப்பது வரவேற்க வேண்டிய ஆச்சரியம்தானே!

**— ஆர். சி. ஜெயந்தன்**

படங்கள்: **ஸ்ரீ ஹரி**

**க**லை நிகழ்ச்சிகளையோ இலக்கிய விழாக்களையோ ஏற்பாடு செய்துவிட்டு, கூட்டம் வருமா என்று ஏங்கித் தவிப்போர், ஸ்ரீராம்/ஸ்ரீநிதி சிட் ஃபண்ட்ஸ்காரர்களிடம் பாடம் கற்றுக் கொள்ளலாம்.

"ஃபெஸ்டிவல் ஆஃப் தமிழ் ஆர்ட் அண்ட் கல்ச்சர்" என்று ஒரு வாரத்திற்கு, செம்பூர் சிவஸ்வாமி ஆடிட்டோரியத்தில் அவர்கள் ஏற்பாடு செய்திருந்த விழாவில், வரலாறு காணாத கூட்டம்! தினம் ஒரு ஸ்வீட் (சர்க்கரைப் பொங்கல், மைசூர்பா, வீட் அல்வா, பைனாப்பிள் கேசரி, ஜாங்கிரி, திருநெல்வேலி அல்வா), ஒரு காரம் (வெண்பொங்கல், சேவை, இடியாப்பம் காஞ்சிபுர இட்லி, குழிப்பணியாரம், பகோடா, போண்டா) ஒரு ஃபில்டர் காபி இலவசம் என்பதை, டிக்கட்டிலேயே அச்சடித்து விட்டார்கள். அது மட்டுமா? லக்கி அட்டெண்டன்ஸ் ட்ரா வேறு! தினம் 20 ஆறுதல் பரிககள், மூன்று மூன்றாவது பரிககளாக வெள்ளித் தம்ளர்கள், இரண்டு இரண்டாவது பரிசாக ஸூட்கேஸ் ட்ராலிகள், ஒரு முதல் பரிசாக மொபைல் ஃபோன் என்று வெளுத்து வாங்கி விட்டார்கள் - அதுவும், நிகழ்ச்சி முடியும்வரை இருப்பவர்களுக்கு மட்டுமே! அப்புறம் என்ன? ஆடிட்டோரியம் கொள்ளாத திருவிழாக் கூட்டம்தான்!



அதற்காக நெல்லை மணி முயற்சியால் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த நிகழ்ச்சிகள் ஒன்றும் குறை சொல்வதற்கில்லை; பாண்டிச்சேரியிலிருந்து வந்திருந்த குழு கரகாட்டம், காவடியாட்டம், தப்பாட்டம், ஒயிலாட்டம், மயிலாட்டம், பொய்க்கால் குதிரை ஆட்டம் என்று கிராமிய ஆட்டங்களாக ஆடித் தீர்த்தனர். தலையில் கரகத்தை வைத்துக் கொண்டே, கண்ணைக் கட்டிக் கொண்டு, கூரிய கத்திகளால், படுத்திருந்த ஆட்டக்காரர் மீதிருந்த காரட்டுகளை, சரமாரியாக வெட்டித் தள்ளிய தேன்மொழியாகட்டும், ஏணி மீது காவடி ஆடிக் கொண்டே கீழே உட்கார்ந்திருக்கும் நபரின் தலைமீதான தேங்காயை, கண்ணைக் கட்டிக் கொண்டு, இரண்டாகப் பிளந்த கலைஞராகட்டும், அசத்தி விட்டார்களே! லோகல் கலைஞர்களும் சோடை போகவில்லை; கலாஞ்சலியின் 'டான்ஸ் பாலே', நிருத்யாஞ்சலியின் ஃபோக் டான்ஸுகள், ஸுப்ரியா தியேட்டர்ஸின் நாடகம், சங்கீதக் காரின் லைட் ம்யூசிக், அனைத்துமே சிறப்பாக அரங்கேறின. இயற்றமிழையும் விட்டு வைக்காமல், குமரி அனந்தன் தலைமையில், 'தலைமுறை இடைவெளிக்குக் காரணம் பெற்றோர்களா? பிள்ளைகளா?' என்ற சிறப்புப் பட்டிமன்றமும் நடந்தது. பாரதிதாசனின் 'குடும்ப விளக்கி'லிருந்து சில பகுதிகளை இலக்கிய நயம் சொட்டச் சொட்ட விவரித்து, ஆடியன்ஸின் மனத்தை அள்ளிக் கொண்டு போன குமரியாருக்கும், இந்தக் காலத்து நடுவர்களுக்கேயுரிய 'நடுவு நிலை' வியாதி தொற்றிக் கொண்டு விட்டதே? பெற்றோர்களும் காரணம், பிள்ளைகளும் காரணம் என்ற சொதப்பலான தீர்ப்பாய் வழங்கிவிட்டாரே?

**ஆ**னால் சில சமயம் தீர்ப்பு 'கட் அண்ட் ரைட்'டாக இருக்கும்; வழக்கு வழவழ கொழ கொழ என்று சொதப்பும். அப்படிப்பட்டதுதான் அண்மையில் அரங்கேறிய 'ஹைஜாக் ட்ராமா'! சம்பந்தப் பட்டவர்கள் 'குழப்பவாதிகள்'



என்பதில் எந்தக் குழப்பமுமில்லை; ஆனால் என்ன குழப்பம் என்பதில்தான் 'குழப்பம்'! 46 பயணிகளுடன் மும்பையிலிருந்து தில்லி புறப்பட்ட 'அலையன்ஸ் ஏர்' போயிங் 737 விமானம், கடத்தப்பட்டு விட்டதாக ஒரு புரளி கிளம்பி, தில்லி-மும்பை விமான நிலையங்கள் அல்லோல கல்லோலப்பட்டதே, அதைத் தான் சொல்கிறோம்.

யாரோ வேலையற்றவர் அலையன்ஸ் ஏர் ஆபீசுக்கு, "737 கடத்தப்படலாம்' என்று மூடகமாகத் தகவல் தர, உடனே அந்தச் செய்தி, பல

ரைத் தாண்டி, விமான ஓட்டி பெஹலிடமே வந்து சேர்ந்தது. அவர் 'காக்பிட்'டை பூட்டிவிட்டு, ஏர்ஹோஸ்டஸிடம், சந்தேகத்துக்கிடமான பயணி யாராவதிருந்தால் தெரிவிக்குமாறு சொல்லியிருக்கிறார், அவ்வளவுதான்! 'ஸீட் பெல்ட்டை கட்டிக் கொண்டு அமருங்கள்' என்ற அறிவிப்பின்போது, 'நம்பர் ஒன்'னுக்காக எழுந்த இந்தர் ஷர்மா, அம்மணிக்கு, நம்பர் 420 ஆக தெரிந்திருக்கிறார். கோபமுற்ற ஷர்மா, பைலட்டிடம் புகார் செய்ய காக்பிட்டை நோக்கிப் பாயவும் அதே சமயம், குளிரில் நடுங்கிக் கொண்டிருந்த இவரது பக்கத்து ஸீட்காரர், பெரிய போர்வைக்குள்ளிருந்து கண்ணை மட்டும் படபடப்பாகத் திறந்து எட்டிப் பார்க்கவும், ஏர்ஹோஸ்டஸுக்கு, இருவரும் கடத்தல்காரர்கள் என்பது ஊர்ஜிதமாகிவிட்டது. அவர் பைலட்டிடம் அலற, பைலட் அபாயக் குமிழை அழுத்த, டி.வி. சானல்களில், ஏர்போர்ட்டுகளில், பயணிகள் இல்லங்களில் ஒரே குய்யோ, முய்யோ.... இத்தனைக்கும் விமானத்தின் உள்ளே ஓர் அமளியில்லை; ஒரு கடத்தல்காரர் இல்லை. அவசரத்தில் அரண்டு விட்டார்களா? கடத்தல்காரர்கள் ப்ரோக்கன் இங்கிலீஷில் பேசுவதாக வர்ணிக்கும் அளவுக்கு, தரையிலிருப்பவர்களுக்கு யார் தகவல் தந்தது? இது யாரால் நிகழ்ந்த அலைக்கழிப்பு? பதில் தெரியாத கேள்விக் குறிகள்!





மும்பை மசாலா

# ஸ்வீட், காரம், காபி இலவசம்!

**இ**ப்படித்தான் கேள்விக்குறியாகி நிற்கிறது ஜுபின் மேத்தாவின் மும்பை கான்சர்ட்! இரண்டு நாள் இசை நிகழ்ச்சிக்கு ஸ்பான்சர்கள் பிடிக்கவே படாத பாடு பட்டிருக்கிறார்கள். அடுத்து டிக்கட்டுகளுக்கு அடிதடி! (ஆயிரம் நாற்காலிகள் உள்ள ஆடிட்டோரியத்துக்கு ஐயாயிரம் டிக்கட்டுகளா வழங்க முடியும்?) எல்லா அமளியும் ஒருவாறு சமாளித்த வேளையில், போர் மூண்டு, இந்நிகழ்ச்சியை நடத்துவது உசிதமா இல்லையா என்ற பிரச்னை!

என்ன இருந்தாலும், மூவாயிரம், இரண்டாயிரம் என்று விலை கொடுத்து டிக்கட் வாங்க முடியாமல் போன ரசிகர்களின் வயிற்றெரிச்சல் சும்மா விடுமா?

**வ**யிற்றெரிச்சல்தான் போங்கள்-இங்கிலீஷ் மீடியம் பள்ளிகளின் கட்டணத்தை உயர்த்துவதற்கு, இன்ன காரணம் தான் சொல்லலாம் என்ற வரைமுறையே இல்லாமல் போய்விட்டதே?

மும்பையின் புறநகர்ப் பகுதியிலுள்ள ஓர் ஆங்கிலப் பள்ளி, தான் வற்புறுத்தும் ஆயிரத்து சொச்ச மாதக் கட்டணத்துக்கு சொல்லும் சால்ஜாப்பு - "நாங்கள் ஒவ்வொரு குழந்தைக்கும் அதிக FSI (Floor Space Index) அளிக்கிறோம்!" கட்டணத்துக்கும் கட்டடத்துக்கும் இப்படி ஓர் உறவிருக்கும் என்று யார் நினைத்திருப்பார்கள்? நல்லவேளை... போர் மூண்டதால் எல்லாமே உயர்ந்து விட்டது என்று சொல்லாமல் விட்டார்களே....

**போ**ர் மூள்வதற்கும், 'அசோகா' ரிலீசாவதற்கும் என்ன பொருத்தம் பார்த்தீர்களா? படம் வருவதற்கு முன்பே அது உருவான கதை, புத்தக வடிவம் பெறுவது இப்போதெல்லாம் ஃபாஷனாகிவிட்டது! தலாய் லாமா முன்னுரையுடன், முஷ்டாக் ஷேக் எழுதும் இப்புத்தகத்தின் முதல் பிரதி, 'பிரசிடெண்ட் ஜீ'க்காம்! ஏதோ... அசோகா 'போர்' அடிக்காமல் இருந்தால் சரி.

— ஜெயஸ்ரீ ராஜ்



'கமல்ஹாசனுடன் பேசலாம்' என்று டெலிபோனில் வாய்ப்புக் கிடைத்தவர்களுக்கு (சன்) பரவசத்திலேயே பாதி நேரம் போய்விட்டது. 'சார்! சார்! நீங்கதான் பேசறீங்களா? நிஜமா கமல்ஹாசன்தானா? நான் உங்கள் ரசிகன் சார்! உங்க படம்னா எனக்கு உயிர்...' இதே பல்லவி, இதே அனுபல்லவி, இதே சரணம். 'ஆளவந்தார் படம் எப்படி இருக்கும்?' என்று சிலர் கேட்டார்கள்.

'நடிப்பு என்றால் என்ன?' என்று ஒருவர் கேட்ட கேள்வியும் கமல் அதற்குத் தந்த பதிலும் உருப்படியானவை. 'இதுதான் நடிப்பு என்று நினைத்துக் கொண்டுதான் நடிக்கிறேன். பிற்பாடு பார்க்கும்போது, 'இது இல்லை. இதற்கு மேலே ஒன்று இருக்கிறது என்று புரிகிறது. நடிகர் திலகம், மார்லன் பிராண்டோ, ஓம் பூரி, நசிருதீன் ஷா முதலியவர்களின் நடிப்பைப் பார்க்கும்போது இதுவல்லவா நடிப்பு என்று தோன்றுகிறது' என்றார் கமல்.

'ஏன் இப்படிப்பட்ட நேருக்கு நேர் பேட்டியில் இலக்கண சுத்தமாகப் பேசுகிறீர்கள்? கொஞ்சம் கொச்சையாய்ப் பேசினால் இயற்கையாக இருக்குமே?' என்று யாரும் அவரைக் கேட்கவில்லை.

Conversational style is the best bridge to reach the audience.

எந்த யுத்தம் ஆரம்பமானாலும் சரி, It is a war to end all wars என்று சொல்வதுதான் வழக்கம். ஆனால் ஒவ்வொரு யுத்தமும் அடுத்த யுத்தத்துக்கான ஆயத்தமாகவே இருந்து வந்திருக்கிறது. ஆப்கன் கதையும் அப்படித்தான்.

'குண்டு மழை பொழிந்தது' என்பது ஏதோ உவமைச் சொல் என்று நினைத்திருந்த காலம் போய், நிஜமாகவே மழையாகக் குண்டு பொழிவதைப் பார்க்கிறோம். அடிவயிற்றில் பகீரென்று பதற்றம் மூள்கிறது. வயிற்றிலே பசி. உடம்பிலே கந்தல். இதைத் தவிர வேறொன்றறியாத ஆப்கன் மக்களுக்கு இப்படியுமா ஒரு சோதனை?

கண்ணீர் வரவழைக்கும் காட்சியொன்றை பிபிஸி காட்டியது. படு காயமடைந்தவரோ, உயிருக்குப் போராடுபவரோ, சவக் குவியலோ அல்ல. ஓர் ஐந்து வயது ஏழைச் சிறுவன், தன் மூன்று வயதுத் தம்பியை, 'பயப்படாதே' என்று சொல்கிற மாதிரி தோளை அணைத்துக் கொள்கிறான். அருகிலே எவரும் இல்லை. முகத்தில் a sad and bewildered look.

என்றைக்கு முடியும் இந்தச் சோகங்கள்?

சர்ச்சிலிடம் ஒருவர் வந்து தங்கள் மன்றத்தில் அவர் பேச வேண்டுமென்று கூப்பிட்டார். 'எத்தனை நேரம் பேச வேண்டியிருக்கும்?' என்று சர்ச்சில் கேட்டார். 'ஐந்து நிமிஷம் பேசினால்

ரிமோட்

## கொஞ்சமாவது கொஞ்சம் தேவை!

விணோத்

போதும்' என்றார் வந்தவர். 'அப்படியானால் எனக்கு ஒரு மாதம் அவகாசம் கொடுங்கள்' என்றார் சர்ச்சில். தொடர்ந்து, 'அரை மணி நேரம் பேசலாம் என்றால் பதினைந்து நாள் டயம் கொடுங்கள். ஒரு மணி நேரம் பேசலாம் என்றால் நான் இப்போதே ரெடி!' என்றார்.

இதன் தாத்பரியம் என்னவெனில், ரத்தினச் சுருக்கமாக, பளிச்சென்று ஒரு விஷயத்தைச் சொல்லி முடிப்பதற்கு மூளையைக் கசக்கிக் கொள்ள வேண்டும். Get to your point and know when to stop என்பது சுலபமான வேலை அல்ல. வளவளவென்று நீட்டுவது சுலபம். ஆனால் மதிப்பெண் குறைவது நிச்சயம்.

'சித்தி'யின் போக்கு அப்படித்தான் எண்ண வைக்கிறது. முடிவை நோக்கித் தெளிவாகச் செல்வதற்கு ஸ்கிரிப்ட் தயாரித்து வைத்திருந்த டைரக்டரிடம், மேலும் ஒரு மாதம் நீட்டுங்கள் என்றார்களாம். அதற்கேற்ப கதையை மாற்றிக் கொண்டிருக்கிறார்களாம். (ஆதாரம்: ஹிந்து) எப்படி நீட்டுவதென்று தெரியாமல், திசை தவறி, எங்கெங்கோ போய் யார் யாரையோ சாகடித்துக் கொண்டிருக்கிறார்கள். வில்லனாக இருந்த வக்கீல் கொலை; வல்லவராக இருந்த ஈசுவர பாண்டியன் கொலை; நல்லவனாக மாறிக்கொண்டிருந்த வேலுமணி கொலை. இதற்கெல்லாம் இறுதி எபிஸோடுகளில் நீள நீளமாய் விளக்கம் சொல்ல வேண்டியிருக்கும். பழங் கால த்ரில்லர் நாவல்களில் துப்பறியும் நிபுணர் பக்கம் பக்கமாக விளக்கம் கூறுவாரே, அதுபோல.

தொடரைப் பார்ப்பவர்களிடையே இப்போது ஆர்வம் கூடியிருக்கிறது என்று வாதாடக்கூடும். என்றாலும் ஒரு நல்ல குடும்பக் கதை மோசமான க்ரைம் கதையாகத் திரும்பிவிட்டது துரதிருஷ்டம் தான்.

'**ல**க்கிமேன்' படத்தில் ('கார்த்திக் ஹிட்ஸ்' - எஸ்ஸிவி) வரும் 'யார் செய்த மாயம்' பாட்டில் தொலைதூரக் காட்சி இரண்டொன்றுதான் வருகின்றன. அதுவும் கண் சிமிட்டும் நேரத்துக்குத்தான். மற்றபடி குளோசப் மயம் இந்த மாயம்.

கண்களும் கன்னங்களும் உதடுகளும் மூக்குகளும் நெற்றிகளும் உரசுகிற உரசல்! கார்த்திக்குக்கும் சங்கவிக்கும் it is a picnic all the way.

ஆதித்யன் இசையமைத்திருக்கும் இளமைத் துள்ள லான இந்தப் பாட்டில், 'சுகமான சுக மல்லவோ?' என்று ஒரு வரி வருகிறது. 'சுகமான சுகம்தானா' என்று கார்த்திக்கின் மீசையில் படாத பாடு படும் சங்கவியைத்தான் கேட்க வேண்டும்.

**எ**ன்ன அவசியம் நேர்ந்தது நித்யாவுக்கு? டீவி சீரியல்களில் நல்ல வாய்ப்புக்கள் வந்துகொண்டிருக்கும்போது ஏன் தொகுப்பாளினியாக மாற வேண்டும்? If her intention is to bring her latent talent to the fore அந்த நோக்கம் அப்படியொன்றும் வெற்றி பெற்றதென்று சொல்வதற்கில்லை.

திரைப்படங்களிலிருந்து நகைச்சுவைக் காட்சிகளைத் தொகுத்து வழங்குவதற்காக, கோணங்கித்தனமான வக்கீல் வேடம் போட்டுக்கொண்டார். (விஜய்) கறுப்புக் கோட்டு கிறுப்புக் கோட்டு எதுவும் இல்லாமல், கழுத்தில் மட்டும் வெள்ளை டை! இடையிடையே சொந்தமாக (!) ஹாஸ்யத் துணுக்குகள். சிலது சிரிப்பு வரவழைக்க வில்லை. சிலது முன்பே பலமுறை சிரித்தாகி விட்டது.

இருந்தாலும், 'அசத்தல்' படத்தில் கவுண்டமணியும் சத்யராஜும் க்யூவில் நிற்கும் காட்சியைத் தந்ததற்காக நித்யாவைப் பாராட்டலாம். நல்ல கலகலப்பு.

'க்யூவாவது ஒண்ணாவது! நாம்ப போகலாம்!' என்று ராஜகம்பீரமாக முன்னால் போய் நிற்கும் கவுண்டரை நெட்டி வெளியே தள்ளுகிறார்கள் அங்குள்ளவர்கள். பத்துப் பேருக்குப் பின்னால் போய் நுழைய முயல்கிறார். அங்கேயும் அதே வரவேற்பு. அதே கதை. கடைசியில், க்யூவின் நுனிக்கே வந்து நின்று, 'சே! ஒரு தமிழன் முன்னுக்கு வர்றான்னா எவனுக்கும் பிடிக்கலியே!' என்று மணிமொழி உதிர்க்கிறார்.

We behave wisely only after having experienced all other alternatives என்று அனுபவஸ்தர்கள் சொல்கிறார்கள்.

# குறையொன்றுமில்லை

மூக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

ஒரு குறையுமில்லாதவன் பகவான் என்பதனாலேதான் விச்வாமித்ர மஹரிஷி ஸ்ரீ ராமனை 'கௌசல்யா சுப்ரஜா ராமா!' என்று துயிலெழுப்புகிறார். எல்லா சுப்ர பாதத்துக்கும் மூலமான சுப்ரபாதம் அவர் சொல்வது!

படுத்துக் கொண்டிருக்கிறான் பரமாத்மா. 'அந்த அழகைப் பாருங்கள்' என்கிறார். ஸ்தோத்திரம் பண்ணுகிறார் பகவானை. 'கௌசலையினுடைய நல்ல பிள்ளையே, ராமா!' என்கிறார்.

நல்ல பிள்ளையே என்றால்....?

அப்பா – அம்மா சொல்கிற வார்த்தையைக் கேட்கிற பிள்ளை.

யார் நல்ல பிள்ளை என்ற கேள்விக்கு இன்னொரு இடத்தில் வேதம் சொல்கிறது....

அப்பா – அம்மா இருக்கிற காலத்திலேயே, அப்பாவைக் காட்டிலும் பிள்ளை ரொம்ப உயர்ந்த ரீதியிலே இருக்கிறான் என்றால்; அந்த அப்பா, பிள்ளையினிடத்திலே தோற்கக் கூடிய அப்பாவாக இருக்கிறார் என்றால், அதைக் கண்டு உலகமே கொண்டாட, அப்பாவும் ஆனந்தப் படுகிறார் என்றால் அப்படிப்பட்டவன் உயர்ந்த பிள்ளை.

சிஷ்யரிடத்திலே, ஆசார்யர் தோற்க வேண்டும் என்று நினைப்பாராம். ஏனென்றால், 'யாரிடத்திலே படித்தார் இவர்...?' என்று யாராவது கேட்டால், 'அவரிடத்திலே!' என்று குருவின் பெயரைத்தானே சொல்வார்கள். அவரே தோற்றுப் போய் விட்டாரென்றால் அவர் சிஷ்யன் எப்படிப் பட்டவர் என்கிற பெருமை ஆசார்யரிடத்திலேதான் போய்ச் சேரும்! அதே மாதிரி தான் மகன் தந்தையை மிஞ்சினான் என்ற சொல்லும்!

'இவன் தந்தை என் நோற்றான்கொல் என்னும் சொல்' என்று வள்ளுவர் சொன்னதற்கு மூலம் எது என்று கேட்டால் வேதம் தான்.

ஸோமபவம் என்று ஒரு யக்ஞம். அதிலே சந்திரனைக் குறித்து வருகிற மந்திரத்திலே என்ன பிரார்த்திக்கப்படுகிறது...?

நல்ல பசுக்கள் நிறைய இருக்க வேண்டும்; வேகமாக ஓடக் கூடிய குதிரைகள் வேண்டும்; வீரம் – வேண்டும். வீரம் என்கிற சப்தத்துக்குப் புத்திரன் என்று அர்த்தம். நல்ல பிள்ளை.

அவன் எப்படி இருக்க வேண்டும்...?

கிருஹத்திலே பந்து மித்ரர்களெல்லாரும் கொண்டாடும்படி இருக்க வேண்டும். எல்லோரும் வந்து அந்நியோன்னியமாக அவனிடத்திலே ஈடுபட வேண்டும். வீட்டிலே இருக்கிறவர்களே குறை சொல்லும்படியாக இருக்கக் கூடாது. அதே மாதிரி, சபையிலேயும் எல்லோரும் கொண்டாடும்படியான பெருமை, வித்வத்தை அவன் பெற்றிருக்க வேண்டும். அப்பாவினுடைய கீர்த்தியைப் பிறர் பரக்கப் பேசும்படியான அளவுக்கு உயர்த்திக் காட்டுகிறவனாக இருக்க வேண்டும்.

பெற்றவர்கள் உயர்பதவி அடைந்துவிட்டால் சிரத்தையாக வருஷம் தவறாமல் சிரார்த்தம் செய்பவனாக இருக்க வேண்டும்.

– இவையெல்லாம் எவனிடத்திலு இருக்கிறதோ அவன்தான் சத்புத்திரன்.

இதிலே பாருங்கள், சொன்னவற்றுள் முதல் விஷயம் என்ன...?

பிண்டப் பிரதானம் பண்ண வேண்டும் என்பதைச் சொல்லவில்லை. அப்பா அம்மா உகந்த பிள்ளையாக இருக்க வேண்டும் என்பதுதான் முதலில் சொல்லப் பட்டது.

ஒரு பிள்ளை பிறந்தாலும் உத்தமனாக நல்ல பிள்ளையாகப் பிறக்க வேண்டும் என்பதே எப்போதும் பிரார்த்தனையாக இருக்கிறது. நல்ல பிள்ளை என்பவன், அவர்கள் சொல்கிற வார்த்தையைக் கேட்கக் கூடிய பிள்ளை.

"விச்வாமித்ரருடன் காட்டுக்குப் போ!" என்று தசரதர் ராமனைப் பார்த்துச் சொன்னதும்,

''அறுபதனாயிரம் வருஷம் பிள்ளை

இல்லாமல் இருந்தீர் நீர்.... புத்ரகாமேஷ்டி, அச்வமேத யக்ஞங்களெல்லாம் பண்ணி, என்னைப் பிள்ளையாய்ப் பெற்றெடுத்தீர். காட்டிலிருந்து ஒரு மஹரிஷி வந்து என்னை அனுப்பு என்று கேட்டால், அனுப்பிவிடு வதற்காகவா பிள்ளை யைப் பெற்றீர்...? நான் போக மாட்டேன்!" என்று ஸ்ரீராமன் உட்கார்ந்திருந்தான் என்று வைத்துக் கொள்ளுங்கள்... வந்த காரியம் ஆகியிருக்குமா? அவனுடைய அவதார காரியம் நடந்திருக்குமா?

ஒரு க்ஷணம் கூட மறுமாற்றம் சொன்னானா ராமன்...? உடனே கூட போனான்.

அதே போல் விச்வாமித்ரருடன் போன போதும் என்ன ஆயிற்று?

பகவானே சொல்கிறார் பாருங்கள்... தாடகையை வதம் பண்ணவேண்டும் என்கிறார் விச்வாமித்ரர். அந்த நேரத்திலே சொல்கிறான்...

"ஸ்த்ரீ வதை கூடாது. இருந்தாலும் ஆசார்யரான நீங்கள் சொல்கிறீர்கள். என் தந்தை உம்மைக் காட்டிக் கொடுத்தார். உங்கள் வாக்கு கௌரவம். அதனால் இதைப் பண்ணுகிறேன்" என்கிறான்.

அப்பா வார்த்தைக்கு இணங்கி இதைப் பண்ணுகிறேன் என்று பகவானே பண்ணுகிறானே. அப்படியானால் அவன் எந்த அளவுக்குத் தாய் - தந்தையிடத்திலே அன்பு உடையவன்!



அப்படிப்பட்ட ராமனைப் பார்த்துதான் சொல்கிறார் விச்வாமித்ரர், 'கௌசல்யா சுப்ரஜா!' என்கிறார்.

கௌசல்யையை ஏன் சொல்கிறார் என்றால், நித்யம் இந்தப் படுக்கை - கிடக்கை - பகவான் படுத்துக் கொண்டிருப்பதை அவன் பார்த்துக் கொண்டிருக்கிறாள். குழந்தை பிறந்ததிலிருந்தே இந்த அழகைப் பார்த்துக் கொண்டிருக்கிறாள். "இந்த ஒரு நான்தான் நாம் பார்க்கக் கொடுத்து வைத்தோம். தினமும் பார்த்தாளே அதனால் அவளல்லவா தன்யாத்மா!' என்று விச்வாமித்திரர் கொண்டாடுகிறார்.

இன்னொரு காரணத்துக்காகவும் கொண்டாடுகிறார். இதெல்லாம் பெரியவாச்சான் பிள்ளை, துல்லியமாகத் துருவித் துருவி வியாக்யானம் பண்ணுகிறார். வியாக்யான சக்கரவர்த்தி என்று பெயர் அவருக்கு. அவர் என்ன சொல்கிறார் என்றால்,

'தசரதன், ராமனை அனுப்பு என்று சொன்னதும் அனுப்பிவிட்டான். ராமனுக்குப் பிறகு மூன்று பிள்ளைகள் அவனுக்கு.



## அருள்வாக்கு

ஒரு மரத்துக்கு ஜலம் விடுவதென்றால் கிளையிலா விடுவார்கள்? பூ, காய் மேலா விடுவார்கள்? வேரிலேதானே விடுவார்கள்? வேரிலே விட்டாலே கிளை, இலை, பூ, காய் எல்லாவற்றுக்கும் ஜலம் போய்விடுகிறதோ இல்லியோ அப்படித்தான் தெய்வ ஸம்பந்தமான விஷயங்களுக்கெல்லாம் லோகம் என்கிற இந்தப் பெரிய விருக்ஷத்திற்கு இந்த பாரத தேசமே வேராக இருக்கிறது. இலை மேல், பூ, காய் மேலும் கொஞ்சம் ஜலம் தெளித்தால் அதுகளும் அதனால் கொஞ்சம் பச்சென்று ஆனாலும், வேரில் விட்டால்தான் அந்த இலை, பூ முதலானதும் உள்ளே ஸத்துப் பெறுகிறது. அந்த மாதிரி வெளி தேசங்களில் செய்யும் பூஜாதிகளாலும் அந்த தேசங்களுக்குக் கொஞ்சம் நன்மை உண்டாகுமானாலும், இந்த பாரத தேசத்தில் செய்கிறதால்தான் அந்த தேசங்களுக்கும் உள்ளூரப் புஷ்டியான பலன் கிடைக்கும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

ஆனால் கௌசல்யைக்கு ராமனை விட்டால் மறுமாற்றம் உண்டோ! வேறு பிள்ளை உண்டோ? ஆனாலும் அவள் ராமனை அனுப்பினாளே!' என்று கேட்கிறார்.

அதனால்தான் விசுவாமித்திரர் 'கௌசல்யா சுப்ரஜா' என்று அவனைக் கொண்டாடுகிறார். நல்ல தாய், நல்ல பிள்ளை என்று கொண்டாடுகிறார்.

அதற்கு மேலும் ஒரு வியாக்யானம் பண்ணுகிறார் பெரியவாச்சான் பிள்ளை.

நமக்குப் பிறக்கும்படியான சிசு இருக்கிறதே... அதைப் பார்த்தே அதன் அம்மா பூரித்துப் போகிறாள். பர்த்தாவைக் கூப்பிட்டுக் காட்டுகிறாள். 'இங்கே வாருங்கள்! இதைப் பார்க்காமல் என்ன பண்ணிக் கொண்டிருக்கிறீர்கள?' என்கிறாள்.

இந்த சிசுவுக்கே நாம் படாத பாடு பட்டுக் கொண்டிருக்கிறோம், உலகத்திலே. இது அப்ராக்ருதமான திவ்ய மங்கள விக்ரஹம். சர்வ கந்த: சர்வ ரஸ: என்கிறது உபநிஷத் பகவானை. சர்வ கந்தங்களுக்கும் இருப்பிடம் அவன். ரஸம் அவன்!

அவதார காலத்திலேயும் எந்தவிதமான லேசங்களும் அவனுக்கு இல்லை. வைகுண்டத்திலே எப்படி இருக்கிறானோ, அப்படியேதான் வந்து பிறந்தான் பரமாத்மா. அவ்வளவு அழகனைப் பார்த்துக் கொண்டாடுகிறார் விச்வாமித்திர மஹரிஷி.

எந்த நிலையிலேயும் அவதார காலத்திலேயும் ஞானத்துக்கோ திருமேனிக்கோ எதற்கும் அவனுக்கு வாட்டமில்லை.

மத்ஸ்யமாய்ப் பிறந்தான் என்றால் மத்ஸ்யத்தினுடைய அறிவுதானா?

கூர்மமாய்ப் பிறந்தான் என்றால் கூர்மத்தினுடைய அறிவுதானா? மனிதனாய் பகவான் தோன்றினான் என்றால் மனிதனுடைய அறிவுதானா...?

எப்போதும் அவன் சர்வக்ஞனாகவே இருக்கிறான் – அவதார காலத்திலேயும் கூட. இருந்தாலும், போட்டுக் கொண்டிருக்கிற வேஷத்துக்கு ஏற்ப நடிக்கிறான்.

சீதை அக்னிப் பிரவேசம் பண்ணுகிற போது தேவதைகளெல்லாம் பார்க்கிறார்கள். 'தடுத்து நிறுத்தாமல் நின்று கொண்டிருக்கிறாயே, ராமா! நீ யார் என்று நீ உணரவில்லையா...? இப்படி வீணாக நிற்கிறாயே!' என்று கேட்கிறார்கள்.

அப்போது பகவான் என்ன சொல்கிறான்...?

''என்னை நான் மனிதனாக நினைக்கிறேன்' என்கிறான். 'நினைக்கிறேன்' என்று சொல்கிறபோதே 'மனிதன் அல்ல' என்பது தொனிக்கிறது. போட்டுக் கொண்டிருக்கிற வேஷத்துக்கு ஏற்ப, 'மனிதன்' என்று சொல்கிறான் பரமாத்மா. ஆனால், அவன் மனிதன் அல்ல; சர்வக்ஞன். ஒரு நாடகத்திலே ஸ்த்ரீ வேஷம் போட்டுக்கொண்டு ஒருத்தர் நடிக்கிறார். அவர் புருஷர் என்பதை மறந்து விடுவாரோ...? அது போலத்தான். இப்படி, துளிக் கூட தோஷமில்லாமல், பூரணமாய் பவித்ரமாய் அவன் இருக்கிறதாலே பூதாத்மா என்று இந்த இடத்திலே சஹஸ்ரநாமத்திலே சொல்லப்பட்டிருக்கிறது. பரம பவித்ரமான ஆத்மா என்கிறது.

அந்த எம்பெருமானை பூதாத்மா என்று யார் சொல்கிறார்களோ, சொல்ல யார் கேட்கிறார்களோ, இந்த விஷயம் அவர்கள் மனத்திலே நின்று, அவர்களை பூதாத்மாக்களாக மாற்றும்.

(தொடரும்)

## நில், கவனி, வெற்றிகொள்!



# கல்கி ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ்®

இணைந்து வழங்கும்

# இளைஞர் திருவிழா!

ஐயா... தெரியாதய்யா!

ஜே.எல். பேர்டு கற்பனை கூட செஞ்சிருக்க மாட்டாரய்யா... தன்னோட அறிவியல் கண்டுபிடிப்பு இந்த அளவுக்கு மக்களை மந்திரிச்சு மயக்கிப் போடும்னு...

'சின்னத் திரை'னு அடக்கமா பேர் வெச்சுக்கிட்டு, 'டீ.வி.' பண்ற மெகா விஷயங்களை 'ஜூம்' செய்ய வருகிறார்கள் டாப் ஸ்டார் பேச்சாளர்கள்.

தலைப்பு :

## சிறை வைக்கிறதா சின்னத்திரை?



**பேச்சாளர்கள்:**

அரட்டை அரசர் :

திரைப்பட இயக்குனர் **விசு**

சுருசுரு சரவெடி :

வழக்கறிஞர் **சுமதி**

நாள் : **28.10.2001 (ஞாயிறு)**

நேரம் : மாலை 4 மணி

இடம் :

நாரத கான சபா,

சென்னை - 18.



அனைவரும் வருக.... அனுமதி இலவசம்.





“உன் வீட்டுச் சமையல றையில் நான் உப்பா சர்க்கரை யானு காதலிக்கிட்ட கேட்டிருக்கக் கூடாது!”

“ஏன்?”

“சமையல்காரரே நீங்கதான்னுட்டா...!”

– அம்பை தேவா

“சே! தலைவி வீட்டுப்பக்கம் பிச்சை எடுக்கப் போனப்பதான் அமைச்சர்களை அவுங்க எந்த அளவுக்கு மதிக்கிறாங்கன்னு தெரிஞ்சது.”

“என்ன விஷயம்...?”

“அம்மா....தாயி....மகாலெட்சுமின்னு நான் சொன்னதும், ‘அமைச்சர்கள் யாராவது வந்திருப் பாங்க அக்கா’ன்னு உள்ளே யிருந்து ஒரு குரல் வந்துச்சே!”

– வி.ரேவதி

# “அம்மா... தாயி!”





“என்னங்க இது, படத்தைப் பாதியில நிறுத்திவிட்டு, அரசு போக்குவரத்து டிக்கட் பரிசோதகர்கள் ‘செக்கிங்’ பண்றாங்க?”

“12-பி படம் ஓடுது இல்ல!”

- ஆர்.பி. ரவிச்சந்திரன்

“நேத்து என் கனவுல மும்தாஜ் வந்தாங்க...”

“இதை ஏன் இவ்வளவு சோகமா சொல்ற?”

“கூடவே ஷாஜகானும் வந்தாரே!”

- எஸ். தமிழ்மணி



Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 330/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 165/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

